உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பரஞ்சோதிமுனிவர்

அருளிச்செய்த

# வேதாரணியபுராணம்.

---

புதுக்கோட்டை சமஸ்தானம்

பொன்னமராவதியையடுத்த

வலையமாநகரம்

வயி. வ. இராமநாதச்செட்டியாரவர்கள்

வேண்டுகோளின்படி

வேதாரணியத்து

**மா. சோமாஸ்கந்தபட்டாரகர்**

அவர்களால்

பல பிரதிகளைக்கொண்டு பரிசோதித்து,

சென்னை:

மதராசு ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

---

விளம்பி௵ கும்பரவி.

இதன்விலை ரூபா ஒன்று.

# முகவுரை.

சுத்த ஷாட்குண்ய பரமாகாச சொயம்ப்ரகாச சொரூபியாய் விளங்கிய சிவபெருமான் ஆன்மாக்க ளுய்யும்பொருட்டு அருள்வடிவாகிய சிவலிங்கத் திருமேனிகொண் டெழுந்தருளிய சிவக்ஷேத்திரங்கள் பலவுள்ளன. அவைகளுள், மிகச் சிறப்புற்று விளங்கிய இந்த ஸ்ரீ வேதாரண்ய க்ஷேத்திர புராணத்தை அச்சிடுவித்து விளக்கவேண்டுமென்னும் விருப்பம் நெடுங்கால முன்னரே என் மனத்திற் றோன்றிக் கதித்து நாள்தோறும் வளர்ந்தோங்கியதே யெனினும், அவ்வாறு விரைவில் முடித்துக் காண்டற்கு என்னுடைய பலவகையான சாவகாசமின்மை யிடந்தரவேயில்லை. இங்ஙன மிருப்ப வலையமாநகரம் வயி. வ. இராமநாதச் செட்டியாரவர்கள் தமக்கும் பெரு விருப்பமுள்ளதாகலின் விரைவில் அச்சிடுவித்துத் தரல்வேண்டுமென வேண்டிக்கொண்டனர்கள். அப்பொழுது சிவபெருமானுடைய திருவருளை முன்னிட்டு நடத்துவதாய்ப் பிரதிகள் தேடவே நான்கு பிரதிகள் அகப்பட்டன. அப்பிரதிகளை வைத்துக்கொண்டு என்னுடைய சிற்றறிவுக்கியன்றவாறு பரிசோதித்து அச்சிடுவித்தேன். இதிற் சில வழுஉக்களமைந்திருப்பினு மிருக்கலாம். அங்ஙனங் காணப்படுமாயின் அவைகளை யறிவின் முதிர்ந்த பெரியோர்கள் கடிதவாயிலாகவாவது நேரிலாவது அறிவிப்பார்களாயின் நன்றி பாராட்டுவதோடு அடுத்த பதிப்பிலத்திருத்தங்களைச் சேர்த்துக்கொள்ளலாகும்.

இங்ஙனம்:

மா. சோ.

உ

# சிறப்புப்பாயிரம்.

வையை ப்ரம்மஸ்ரீ

## இராமசுவாமி அய்யரவர்கள்

இயற்றிய

### அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

மாமேவு பொன்னிவள நாடென்னும் வனிதைமுக
மலர்போல் வாழும்
பூமேவு நறும்பொழில்சூழ் மறைவனத்துத் திலதமெனும்
பொலிவுற் றோங்குந்
தூமேவு மாலயத்தி லருள்வடிவா யமர்ந்தருள்செஞ்
சோதி யார்தம்
தேமேவு வடமொழியி லியன்றதல புராணத்தைத்
தெளிந்து நோக்கி. (க)

தெள்ளியபாற் கடலிலெழு மமுதுறழுஞ் செந்தமிழாற்
றெவிட்டா தன்பர்
அள்ளியினி தெடுத்தெளிதி னருந்தும்வகை பரஞ்சோதி
யாரென் பார்தாம்
உள்ளியுவந் துரைத்தனரவ் வேதவன மான்மியத்தை
யொருமான் பாலும்
புள்ளியமான் றிருக்கரத்துங் கொளுமெம்மான் றிருவடியைப்
புகழுஞ் சீமான். (உ)

மாதவனத் தம்புரையு நத்தினமுத் தினமுயிர்க்கும்
வாரி சூழும்
வேதவனத் தமர்சோமாஸ் கந்தபட்டா ரகனெனும்பேர்
விளங்க மேயோன்
ஆதவனத் தங்கதனு காதிருந்தாங் கவிர்கல்வி
யறிவின் மிக்கோன்
சீதவனத் தம்புயல்போ லருடழைய வச்சிட்டுச்
சிறப்பித் தானே. (ங

## சென்னை அஷ்டாவதானம்

# பூவை - கலியாணசுந்தர முதலியாரவர்கள்

## இயற்றியன.

---

திருமலியுந் தென்பாண்டி நன்னாட்டிற் றிலகமெனச் சிறந்த பூவார்
தருமலியு மாலவாய் நகரதனி லெம்பெருமான் சதிராச் செய்த
விருமலியுந் திருவிளையாட் டினைபுரா ணமதாக வியற்றி வைத்த
வுருமலியு முனிவரர்க ளுயகமாம் பரஞ்சோதி யுயரொப் பில்லான்.

இருமொழியி லுந்திசமு மாமறைக ளினையென்று வெவருமோரு, மருமையினைச் சித்தாந்தத் தலைவர்களா னனிவிளக்கி யவனி தன்னிற், பெருமகிமை வளர்சோணாட் டொளிர்மணிகூ லத்தருகிற் பிறங் கித்தாழை, மருமலர்வா சனைகளுறு மொண்ணகர்வே தாரண்ய மான்மி யத்தை.

அலங்கார கற்பனையிற் றொடைபொருட்சொ னயமனைத்து மமைதி
விலங்குறவே யருளினனல் லழகழகா யந்நூலி லினிமை யாகு [யாக
நலங்கருதி யுலகனைத்தும் பெருங்கவிஞர் கொண்டாடு நசைவிரும்பித்
துலங்கியபன் முயற்சியினாற் சுத்தமுற வச்சிட்டுத் துளக்கி னனல்.

அன்னவனியா ரெனிற்சநற்கு மாரகோத் திரமதனி லருமையாக, மன்னியவோர் மறைசையினில் ஞானவா சாரியர்கண் மரபில் வந்து, பன்னரிய புகழ்வாய்ந்த மாணிக்க தேசிகன்றன் பயிறவத்தி, லுன்னருஞா னம்வாய்மை யீகைதயை பொறையுடனே யுதித்து வாழ் வான்.

எந்தவிலக் கியவிலக் கணவாக மங்களினு மெல்லை கண்டா
னந்தவறு பான்மூவர் மடமொன்று மறைசையினி லமைக்க வுன்னி
யெந்தையர னடியர்சிலர் தமைக்கொண்டே தாபித்தா னேய்ந்தமூலப்
பந்தமற வுயர்சோமாஸ் கந்தபட் டாரகனும் பாவ லோனே.

# சிறப்புப்பாயிரம்.

தேவிகோட்டை

ம - ள - ள - ஸ்ரீ

## அரு. ச. அருணாசலச்செட்டியாரவர்க ளியற்றிய

### நிலைமண்டிலவாசிரியப்பா.

---

சீர்வள ரகலத் தேவனன் றருளு
மேர்வளர் கமலத் தார்மறைக் கிழவன்
றந்திடு முலகிற் றலைமைவாய்ந் துளதாம்
கந்தி வனஞ்சூழ்ந் திந்து வளக்கும்
ஆரண நான்கு மருச்சனை புரிந்தே
பூரண வருளைப் பொற்புறக் கொள்ளு
நற்பதி யன்றிப் பற்பல வியப்பார்
மறைசைப் புராண வடமொழி தன்னைப்
பிறையணி சடிலப் பெம்மா னருளை
நிறையுரு வாகி நின்றதென் றுலகம்
சொல்லரு நற்பரஞ் சோதிமா முனிவன்
கீரக் கடலிற் கிளர்ந்தெழு மமுதைச்
சேரத் திரட்டித் தெவிட்டா தண்டே
தமிழ்நா டுய்யத் தாங்கரு மன்பாற்
றந்ததே யென்னச் செந்தமிழ் செய்தா
னன்னதை யெவரு மாய்ந்துணர்ந் தின்ப
மன்னுத லடைகென மனத்தல னுற்ற
பொச்சமி லன்பா லச்சிடு வித்தான்
மறைசையி லுறையு மாண்பெருந் தவத்தான்
சனற்கும ரப்பெயர்த் தனிமுனி மரபே

யெனக்கென மேவு மிருமணித் தீபம்
மாணிக்கபட் டாரகன் மன்னிருந் தவத்தான்
மாணிக்க மாமணி யென்னவந் துதித்தோ
னிலக்கிய விலக்கண வெழிற்றட நற்கடல்
சித்தாந்தப் பெயரிய தெண்கட லமுதுண்
டெத்தகைப் பெரிய நற்சபை தனினுஞ்
போதப் பைங்கூழ் பொலிவுற் றோங்கச்
சாத்திர மழைபொழி தண்டமிழ்க் கொண்டல்
பூதிகண் டிகையே பொருளென வுன்னி
யிந்தர வணிந்திடு மெந்தையார் பாதத்
தகலாப் பத்தி யமர்ந்துறை பெரியோன்
சிவனடி யாரைச் சிவனெனப் பேணிப்
பவமொழித் தருள்சேர் பண்பனென் றறியத்
தவத்திற் றலைமைசேர் தன்மைய ராய
வருணாச லப்பெய ரமைந்திடு தனிகன்
நாச்சி யப்பநன் னமச் செல்வன்
னின்னசீர் வணிக ரிருவரைக் கொண்டே
யரும்பெரு மறைசை யம்பதி தன்னி
லறுபதோ டொருமூன் றமைந்திடு மருள்சேர்
நாயன் மார்மட நாட்டிடு சீலன்
குசைநுனி தானுங் கூரிய தன்றென்
றிசைமதி யுடைய னெம்முளத் துறைவோன்
நாமா தமர்ந்துறை சோமாஸ் கந்த
பண்புடை யோர்புகழ் பண்டிதர் கோவே.

---

# சருக்க அட்டவணை.

சிவமயம்.

# வேதாரணியபுராணம்.

## முகவுரைச்சருக்கம்.

### காப்பு.

ஆரண வனநெறி யாற்று மாரியந்
தாரணி தனிலியாந் தமிழ்ப்ப டுத்துதற்
கோரணி வரையுரை யெழுது மைங்கர்
வாரண மலரடி வணங்கல் செய்குவாம்.

### வேதாரணியேசுவரர்.

கார்தாங்கு வடிவநெடு மாலு ஞாலங் கண்டவனு மடிமுடிகள் காணு தோங்கிப், பேர்தாங்கு குணங்குறியொன் றின்றேயேனும் பிற ங்குதொழி லைந்துதவும் பெருமைத் தாகிப், பார்தாங்கு முலகமுதற் புவனம் யாவும் பரிப்பதற்கோர் முதலாகிப் படர்ந்தி டப்பால், வார்தா ங்கு முலைக்கொடியும் படரும் வேத வனத்துறையுந் தாணுவையாம் வணங்கல் செய்வாம்.

### யாழைப்பழித்தமொழியம்மை.

வாலமதி நுதல்காட்ட வதனஞ் செந்தா மரைகாட்ட வரைகாட்ட வளர்ந்த கொங்கை, நீலமலர் விழிகாட்ட விமைய மென்னு நெடுங்கிரியி லுதித்தறங்க ணிகழ்த்தி யாவு, ஞாலமெலாம் பெற்றெடுத் துங் கன்னி யாகி நவிலுமறை நாதனிட நயந்து நிற்கும், பாலினையின் னமுதையருந் தேனை யாழைப் பழித்தமொழி யுமைபாதம் பணிதல் செய்வாம். (௨)

### வீரகத்திச்சேதகவிநாயகர்.

நித்தமு மிடையூ றென்னு நெடுங்கொடுங் கானஞ் சாடி
யத்திமா முகத்தோ ஞதி யசுரர்வா ரிதியு ழக்கிச்
சத்தியுஞ் சிவமு மேவச் சதுர்மறை வனத்துள் வீர
கத்தியை யுதைத்து நிற்குங் களிற்றினைக் கருத்துள் வைப்பாம். (௬)

### சுப்பிரமணியக்கடவுள்.

இடிபட வரை துளைத்திட் டெழுந்துசூ ரென்னுங் கான
மடிபட வோங்கி விண்ணோர் வாழ்பதி நீழ லிட்டு
வெடிபட வேடற் கன்று வேங்கையாய் நின் றுவள்ளிக்
கொடிபடர் குறிஞ்சிச் செவ்வேற் குருந்தடி வணங்கல் செய்வாம். (௭)

### வேறு.

### திருஞானசம்பந்தமூர்த்திநாயனூர்.

பருகமுதே ஞானமதாய்த் தாள முத்தின் பலவரிசை வருவித்து முயல கற்பின், மருகல்விடந் தடுத்துலவாக் கிழியுங் காசும் வந்திருப்ப மறைக்கதவந் தானே பூண, வெரிகுளிர வேடெதிர்ப்ப வெதிர்ந்த புத்த ரிடியில்விழ வெற்றெலும்பு பெண்ணு மாக்கித், திருமணத்து ளனைவரையு மொளியுட் சேர்க்குஞ் சிரபுரத்துச் சித்தனையாஞ் சிந்தை செய்வாம். (௮)

### திருநாவுக்கரசுநாயனூர்.

முந்துவிட லூன்படைக்கன் றனையா தோங்கு மும்மதமும் பொழிகளிற்றுன் முறிப டாமற், றந்தவொரு நீற்றறையாந் தழுமு வாமற் றடங்கடமுன் கொண்டிடவுந் தாழ்வு முமெ, ளிந்தையமண் கொடுங் கான நீக்கி மேன்மை நிகழதிகை வீரவன நின்றி லங்கி, வந்துசிவ சமையநெறி நீழ லிட்டு வளர்ந்தோங்கு நாவரசை வணங்கல் செய் வாம். (௯)

## சுந்தரமூர்த்திநாயனர்.

பரவையிடத் தின்னமுத மருந்தி மேலாம் பரியுகைத்து நென் மாரி பாரி டங்க, டரவுதவி யிறையேவல் செய்யச் செய்து சங்கிலி மால் பெற்றவடன் றனங்க டோய்ந்து, பொருமுதலை மதலையவை நடு வீன் றேங்கப் புகுவித்து வெள்ளானைப் பொருப்பி லேறிச், சுருதி கொடு வடகயிலை யரனைப் போற்றுஞ் சுந்தரனு மிந்திரனைத் தொழு தல் செய்வாம். (௭)

## திருவாதவூரடிகள்.

எந்தையருளாற்கூடற் பதிவந் தேறி யெண்ணரிதாம் பரியரசுக் கேற வேற்றி, முந்துதிரு வாசகமா மணிக்கு லத்தை மூதுலகோ ரின் புறமா முகத்தாற் றூவி, யந்தமிழலந் திணைதழுவு கோவை நின்று மக மகிழ வரும்பொருளு மவனுக் கீந்து, வந்துபெருந் துறைபுகுந்து மலை பு காத வாதவூர்த்த மிழ்க்கடலை வணங்கல் செய்வாம். (அ)

## வேறு.

## வாழ்த்து.

வைதிக சைவ மெங்கும் வழங்குக மன்னர் செங்கோல்
செய்திக ளிகழா தோங்க திங்கண்மும் மாரி பெய்க
கைதவ நெறிமுற் றூழ்க கருதுநன் னெறியே வாழ்க
மெய்திக ழஞ்செ ழுத்து விளங்குக வெண்ணீ றெங்கும். (௯)

## திருநாட்டுச்சிறப்பு.

## வேறு.

உம்பரொடு மாதவர்கள் காணவுமை யாளைச்
செம்பொன்வரை மீதரும ணம்புணர்சி றப்பைக்
கும்பமுனி காணவருள் கூர்மறைசை வாழு
நம்பருறை யும்பர்வள நாட்டணியு ரைப்பாம். (௧௦)

முன்புநர சிங்கவடன் மோதிவரு நாளீ
சன்பதுமன் மாலமரர் தாபதர்க ளியாரு
மன்புகொடவ் வேதவன மீதினில மர்ந்தா
ரென்பதுகொ டும்பர்வள நாடெனவி சைப்பார். (கக)

வேறு.

சத்திய கிரியென் றோதுந் தன்மையான் மோடி சார்வாற்
கொத்தலர் மறைவ னத்தாற் குறுமுனி பின்முன் வந்த
வித்தக முள்ளி யாற்றால் விரிகட லடுத்த வாற்றா
லத்திரு நாடு கூறி லைந்திணை யுடைய தாமால். (கஉ)

அருவியி னொலியும் வேழத் தரும்பெரு முழக்குங் காவன்
மருவிய புனங்க டோறும் வகுத்தகம் பலையுங் கோலத்
தெரிவையர் குறிஞ்சி யாழிற் சேர்த்தவின் னிசையுங் கூடி
யிரவொடு பகலென் றில்லா விருங்கட லோசை யெய்க்கும். (கங)

வேறு.

மஞ்சு சூழிதண் வைகிவண் டார்புனந்
தஞ்சு கங்கடி மாத ரணிபல
பஞ்சின் மெல்லடி யென்றும் படியுறு
விஞ்சை மாதர்க டோற்றம் விளக்குமால். (கச)

கால மெண்ணு வரசர்க ரங்கொள்செங்
கோலை மாறிக் குடியை யலைப்பன
போல வெற்பின் புனந்தொறு மைவனச்
சாலி முற்று முழக்குவ தந்திகள். (கரு)

கேழ னின்றங் குழவயற் கேசரி
வேழ முத்தம் விதைத்திட மென்மலர்ச்
சூழ றேனீர் சொரிவன கண்டயல்
வாழு மந்தி மணிவரம் பேற்றுமால். (கசு)

வேறு.

மலைய தன்புற மெங்குமா தங்கமே மாதரங் கங்க ளெங்குமா தங்கமே, குலைகொள் வெட்சி யலர்பொற் குழைகளே கோதி லாடைக ளும்பொற் குழைகளே,முலைப ரிப்பதும் வெற்பரின் முத்தமே முகம்ப ரிப்பதும் வெற்பரின் முத்தமே,நிலைக ளெங்கு நிகழ்த்திற் குறிஞ்சியே நின்றயாழு நிகழ்த்திற் குறிஞ்சியே. (கஎ)

கான மெங்கணும் வேங்கையந் தாமமே கன்னி யர்க்கணி வேங்கையந் தாமமே,சோனை மாரி தருங்கந் தரங்களே சுரத வாரி தருங்கந் தரங்களே, யான வண்டின நின்றுகாந் தாரமே யாற்று மோசை யதிர்வகாந் தாரமே, பான லந்தண் ணருவித் தடங்களே பார்க்கி லெங்கு மருவித் தடங்களே. (கஅ)

வேறு.

மற்றொரு மருங்கினில் வயங்கு பாலையி
னுற்றர ணிரும்புய முகந்த மோடியாங்
கொற்றவை காவல்கைக் கொண்ட குலமீ
தெற்றிய சுடர்வெயி லெறிக்கு மெங்கணும் (கசு)

சிரம்புகு மத்தமு மெருக்குஞ் செய்யமான்
கரங்கொடு வருமறைக் கான வேடுவர்
நெருங்கியங் கணைபவர் நீள்ப வப்பொரு
ளொருங்குறக் கவர்ந்துமே லோட வைப்பரால். (உ0)

பாதக வனமழல் பற்றி நீறெழு
மேதகு மறத்தினை வெய்ய கூளியும்
பூதமுங் கணங்களும் பொருவி லாயம
தூதரு முருவகை தூரந்து நிற்குமால். (உக)

விந்துவா மொருதுளி யங்கு வீழ்க்கினு
முந்துறு நாதமே முழக்கி நிற்கினும்
வெந்தெதி ரெழுமென வெருவி மாயையா
மந்தர முகிலுரு தகலு மவ்வனம். (உஉ)

அதனிடை யணுகிய வணுக்கள் யாவையும்
விதமுறு முடல்பல வெதும்பி நீறெழ
விதுபுக லலதிலை யெனவு ருத்திர
பதமுறு மார்ப்புட னீழல் பற்றுமால். (உங)

வேறு.

அடவியெண் டிசைக ளெங்கு மலர்கொள்வண் டிசைக ளெங்கு
மிடபமா னிரைக ளெங்கு மிலகுமா னிரைக ளெங்குங்
கடுநடைத் தோகை யெங்குங் கடிமணத் தோகை யெங்குஞ்
செடிகொள்பூ முல்லை யெங்குந் திணைகொள்பூ முல்லை யெங்கும். ()

நேமிக ணினைவாங் கொன்றை நிலையில்லை கறையாங் கொன்றை
யாமலர் மதுவு மாரு மதிசய மதுவு மாரு
கோமறி குழல்க ளார்க்குங் கோதளி குழல்க ளார்க்குந்
தாமமெம் மருங்கு மாயர்த் தருவரெம் மருங்கு மாயர். (உரு)

வேறு.

காலையி லாயர்தங் கைக ளாற்கயி
றேலவொண் மத்தினி லேற்றி வெண்டயிர்
சாலிடை யிற்றொறுந் தடிவ பாற்கடல்
மேலவர் வேறுவே றடுதென் மேவுமால். (உசா)

துன்றுபே ரானினஞ் சூழ்ந்து தன்னிளங்
கன்றினை யின்னமு தூட்டிக் காப்பசும்
புன்றலைப் புல்லருந் தற்குப் போந்திடா
நின்றதற் கிரங்கிடு நீழ லெங்கணும். (உஎ)

ஆவினங் கன்றினுக் கருத்தி மிக்கபால்
பூவினின் முலைபொருப் பொழிய முல்லையங்
காவினிற் பாய்ந்தெழு காட்சி சம்புவண்
டீவினும் பாற்கட றிகழ்தல் போலுமால். (உஅ)

மல்கிய சகோரமு மானி னங்களு
நல்குர விடைமட நடைகொ ளாய்ச்சியர்
வெல்கணை விழிமுலை மேன்மை கண்டுகண்
டொல்கியவ் வனந்தொறு மொதுங்கி யோடுமால். (உகூ)

வேறு.

நீங்க ரும்பெருங் கயிலையி னின்றகத் தியன்முன்
றூங்கி வந்துடன் சையமால் வரையினிற் றங்கிப்
பாங்கி னீள்பெரு வளமெலாந் தென்றிசை பரப்பி
யோங்கு முள்ளிநன் னதிதரு மருதமு முளதால். (௩0)

அன்ன திப்புனல் கால்பரந் தலகிலா வவனி
தன்னி லுற்றபல் சராசரந் தனைவளர்த் திடுதெ
ன்முன்ன லத்தொரு முதலெனுஞ் சோதிபல் லுருவ
மன்னி நீடலகனைத்தையும் வளர்ப்பது நிகர்க்கும். (௩க)

வேறு.

ஈட்டிய விருகரை யிலங்கு காவிடை
யோட்டிய விந்நதி யுலவு காட்சிநீர்
நாட்டணி பூமக ளைகம லர்க்குழல்
பூட்டிய தரளவெண் டாமம் போலுமால். (௩௨)

மாறரு மிரும்புனல் வாய்ந்து நீள்வயல்
சேறுசெய் மள்ளர்க டிருத்தி நிற்பன
கூறிய நதிபல கொழித்த மாமணி
வீறிய குன்றுக ளன்றி வேறில. (௩௩)

விடுத்திடு நாறுகள் வினைஞர் வேறுவே
றெடுத்தணி நடுவன விருநி லத்தினி
லடுத்தெழு குடிகளி னரசர் வான்பயன்
றொடுத்திட வவர்பகிர் தோற்றம் போலுமால். (கூ௪)

மாலுறு முழத்தியர் வதன நீள்விழி
போலொளிர் கின்றன வென்று பொற்பமர்
சாலியி னூடெழுந் தலர்ந்த தாமரை
நீலமுங் களையென நீத்து நிற்பரால். (கூ௫)

விளைந்தெழு சாலிகண் மேக மூடுபோய்
வளைந்ததி லடிபட வழங்கு நெற்குவை
யளந்தநீர் மாரிய தன்றி யம்முகி
றளைந்தநென் மாரியுஞ் சொரிதல் போலுமால். (கூ௬)

வரம்புறு கதலியின் வளர்ந்த நெட்டிலை
பரம்பிவிண் முகிலெனப் படர்ந்து நாடொறுங்
கரந்திரு சுடரொளி கண்ணு றுவகை
நிரந்தன வுலகினை நீழல் செய்யுமால். (கூ௭)

மெத்திய செம்மணி வெயிலு நத்துகு
நிலத்திலக் குவைதரு நிலவு மாமது
மெத்திய தண்டலை யிருளு மெங்கணு
மத்திரு நாட்டிடை யருத றைந்திடில். (கூ௮)

வேறு.

அடுத்த சூத வருங்கனித் தேனுடன்
விடுத்த வாழையின் மென்கனித் தேனுமேன்
மடுத்தெ ழுந்த வருக்கையின் றேனுமா
யெடுத்த வெள்ளங் கடையுக மேய்க்குமால். (கூகூ)

வேறு.

விளைஞர்கம் பலகை ளெங்கும் விரவுகம் பலகை ளெங்கும்
புனைமணிப் படுக்கை யெங்கும் பொருங்கயல் படுக்கை யெங்குஞ்
சுனைதரு மன்ன மெங்குந் துவைதரு மன்ன மெங்கு
மனையபூ மருத மெங்கு மலர்கொள்பூ மருத மெங்கும். (௪0)

காவினும் புயலே தூங்குங் கரையினுங் கயலே தூங்கும்
பூவினு மதுவே காலும் புறத்தினு மதுவே காலு
மோவரு கயங்கள் சூழு முதவுபங் கயங்கள் சூழுந்
தாவற வரம்பை யோங்குந் தாதலர் வரம்பை யோங்கும். (௪௧)

சாற்றிடி னெய்த லெங்குந் தடமலர் நெய்த லெங்குந்
தோற்றுநற் புளின முற்றுஞ் சூழ்கடற் புளின முற்று
மாற்றிடா வளங்க ணீடும் வயங்குநல் வளங்கணீடும்
போற்றுசெவ் வழியேசாரும் புகல்வசெவ் வழியே சாரும். (௪௨)

வேறு.

வண்டு பாயு மலர்களி னத்தின
மெண்ட ருந்தர ளக்குல மீன்பன
கண்டு புன்னயங் காவு மதற்கெதிர்
மொண்ட ரும்பெனு முத்தமு குக்குமால். (௪௩)

எய்த லன்றிப் பிரிந்தநல் லேந்தலைப்
பெய்து மென்று மடல்கொடு பேதையர்
நெய்த லந்திணை நிற்பது கண்டயற்
கைதை யும்மட லெய்துங் கரைதொறும். (௪௪)

பற்றி யங்கண் பரவர்தங் கன்னியர்
சிற்றில் செய்து சிறுசோ றமைப்பதுந்
தெற்று மாவணத் தின்கனிக் கீவது
முற்று நீள்பணி லத்தரு முத்தமே. (௪௫)

கண்டல் சூழுங் கழிக்கரை யின்புறம்
விண்ட தண்பனை மென்கனிச் சாறுபோய்
மண்டு கால்பரந் தோத மடுத்ததிற்
றண்டு நீடுவர் நாளுந் தவிர்க்குமால். (௫௬)

வேறு.

கறைகெழு தடநெடுங் கழிக டோறுமே
நிறைதரு குவளைகண் மலர நிற்பன
வறைதிரு நாட்டணி காண வாயன்மார்
புறைதிரு விழிபல வுறுத்தல் போலுமால். (௫௭)

வேறு.

இந்த லம்புகு மைந்திணை யியைந்துசூழ் நாடு
தன்னி லோங்கநா லெட்டறந் தழுவுநன் னாடு
பொன்னி யாகிய முனிநதி புகுந்துறை நாடு
மன்னு மும்பர்வாழ் நாடென வளர்திரு நாடு. (௫௮)

வேறு.

குறைவது மங்கண் மாதர் மருங்கலாற் குறையா நாடு
நிறைதருங் காவி னீடைம் புலனலா னிகழா நாடு
பொறைதரு மாயா ரூபத் தல்லது பொய்யா நாடு
பிறைதொறு மாரி மூன்றும் பிறங்குதல் பிழையா நாடு. (௫௯)

திருநகரச்சிறப்பு.

வேறு.

அத்திரு நாட்டிடை யமரர் மன்றினிற்
புத்தியு முத்தியும் புவியி னூடொறு
மத்தர் நின்றருடரு மறைசை யம்பதி
மெத்திய வளஞ்சில விளம்பு வாமரோ. (௬0)

பூமக டனக்கரும் பொருள்பு குத்தறை
நாமகட் கரனடி வழுத்து நன்மடந்
தேமக டனக்கரங் காய செய்தியம்
மாமறை வழிபடு மறைசை யம்பதி. (ருக)

வேறு.

விதி தங்குவ விழாவணி விரவுநான் மறையி
னீதி தங்குவ வவைதொறு நிகழிட மனைத்துஞ்
சாதி தங்குவ தத்தம தறநெறி தயங்குஞ்
சோதி தங்குவ மாதரா ரணியணி தோறும் (ருஉ)

நின்ற வந்நகர் மாளிகை நீடியர் பதாகை
சென்று வானுற வசைவன தெரியிலந் நகரந்
தன்ற னக்கம ராபதி தானுமே நிகர்வ
தன்றெ னப்புறங் கைகொடங் ககற்றுவ தனைய (ருங)

வேறு.

ஆலவன் சிலைகொடங் கழுத்து சாளர
மேலுறு மங்கையர் விழிகண் மாமுகங்
கோலநீ ணதிச்சுழி கொண்டு தாழ்ந்தெழு
நீலமுங் கமலமு நிழற்றல் போலுமால் (ருச)

அந்நகர் மேடைவா னளவ வாங்கமர்
கன்னியர் தாழ்ந்தெழு திங்கள் கண்டதன்
வெந்நிடை மறுவிலா விடினு நம்முகந்
தன்னுட னிகலுமென் றறைவர் சாந்தினை (ருரு)

மான்றகு விழியினை மாதர் சாளரங்
கான்றிட வெழுப்பிய கார கிற்புகை
யான்றவா னரங்கினி லழுந்து மாமணி
யீன்றிடு கதிர்க்கக விருளை யெய்க்குமால். (ருசா)

மீதுயர் பளிக்குமா மேடை வைகிய
மாதர்கள் விஞ்சைமா மாதர் விம்பமங்
கேதக வதையயன் மங்கை யென்றுதங்
காதல ருடன்றினங் கனன்று நிற்பரால். (ருஎ)

செவ்விய மாதர்தோள் செறிந்த கிள்ளைக
ளவ்வவ ரிதழொளி யடுத்த வெண்மணி,
யொவ்வருந் தம்பமீ தொளிர வாங்கவைதங்
கொவ்வையங் கனியெனக் கொத்தி நிற்குமால். (ருஅ)

மருவிய சூளிகை மாத ரார்நெடுஞ்
சுரிகுழ லொளிமுகி றோய மேனிலம்
விரிதரு சோலைகண் மேடை யெங்குமக்
கருமுகி லலதயன் முகில்கள் கண்ணுறா. (ருசு)

குலவுநீள் கொந்தளக் கோதை மார்நகை
நிலவுட னிதழிள வெயிலு நீடவாங்
கிலகிய வாவிகின் றிலங்கு நீலமு
மலகில்பங் கயமுமங் கலரு கிற்குமால். (சு0)

பொன்னணி வீதியும் பொருவின் முன்றிலு
மன்னகர் மாதரா ரலகு தூர்ப்பன
கன்னிய ரணியுகுங் கனக ராசியுந்
தொன்னலம் புகுநவ மணியின் றூசுமே. (சுக)

பெருந்திறன் முழவெதிர் பிறங்கு மோசையும்
வருங்கதி ரிரதநீண் மறுகி னோசையு
மிருங்கருங் களிற்றின மெடுத்த வோசையு
மருங்குயர் கடலொலி மாற்றி நிற்குமால். (சுஉ)

## புராண வரலாறு.

### வேறு.

மண்ணிலிவ் வாறு நீடு வளந்தரு மறைவனத்து
ளண்ணலா லயத்து முன்ன ரமரர்சூழ் மண்ட பத்துக்
கண்ணுதன் மாசித் திங்கள் விழாவணி கண்டு போற்றி
யெண்ணருந் தவத்தோ ரங்க ணிருந்தன ரிருந்த வெல்லை. (சுஙு)

அறையுமத் தவத்தோர் கூட்டத் தருணந்தி தேவன் பூவை
யுறைபரஞ் சோதி வேந்த வுகந்தசெந் தமிழி னாலே
மறைசையம் புராணந் தன்னை வகுத்திட வேண்டு மென்ன
விறையருண் முன்னூல் கண்ட வாறுகொண் டியம்பு கின்றேன். ()

## அவையடக்கம்

### வேறு.

சிற்றறிவால் வேதவன மேன்மைதனைத் தெரிந்து
கற்றுணர்ந்தோர் போற்றமிழாற் கழறுறயான் றுணிது
வுற்றதன்ற னளவறிந்து மறைவனமென் றோர்காற்
சொற்றவரு நற்கதிபெற் றிடுவரெனுந் துணிவால். (சுரு)

மேதினிமீ தெவரேனு மோர்கருமம் வேண்டில்
யாதெனுமோர் புன்பொருளுங் காரணமே லிகழா
ராதலினித் தலமேன்மை யறிதற்கா யானின்
றோதுறுமிப் புன்சொல்லு முகந்திடுவ ருயர்ந்தோர். (சுசு)

### நூல்வழி.

ஆதரவா லறிவிலனென் கினுமிறையோ னருளாற்
போதமிகு மூவாறு புராணத்திற் றெரிந்து
சூதமுனி புகன்றவட மொழிதமிழாற் றொகுத்து
வேதவன புராணமென விளம்புவன்யா னுலகில். (சுஎ)

சருக்கஅடைவு.

### வேறு.

வருத்தடைவிற் றலவிசிட்ட மிலிங்கோற் பத்தி மணிகன்னி யுண்மைமறை நதியின் வண்மை, சகத்குமரர் போற்றுகடற் கோடி யேற்றந் தமிழ்முனிக்கு மணக்கோலந் தந்த தன்மை, தொருத்தன் பின் புவனிவிடங் கேசர் தோற்றந் தொல்லரிக்கு வீரவதை தொலைத்த நன்மை, யிருத்தருளங் கொருபிரம சாரிக் கீந்த விறல்கோலா கலன்முத்தி பெற்ற மேன்மை. (௬௮)

மாகருணை மாவலிக்கன் றளித்த மாற்றம் வருசாபஞ் சவுதாசன் றனக்கு மாற்றல், பாகமுறுந் தவப்பயனைக் காதி மைந்தன் பரித்த படி குளகேசன் பான்மை மற்றுந், தாகமுறுந் தனபாலன் கதிமேற் றேவர் தருமன்ற நலந்தீர்த்தந் தன்றன் முத்தி, யாகவடை விளிற்பு கல்வான் றெடுத்த வற்று ளாதியினிற் றலவிசிட்ட மறைகு வாமால்.

முகவுரைச்சருக்கம் முற்றிற்று.

---

## தலவிசிட்டச்சருக்கம்.

### வேறு.

பற்றினர் பிரத்தி னுள்ளம் பாவமொன் றில்லார் செற்ற
மற்றவர் புலன்க ளைந்து மடர்ந்தவா னந்த ஞான
முற்றவர் பகையொன் றில்லா ரோடுமொன் றொக்க நோக்கு
நற்றவர் வாழ வாழு நைமிசா ரணியந் தன்னில். (௧)

சத்திர யாகஞ் செய்து சவுனக ராதி யாய
மெய்த்தவர் கூடி யங்கண் வீற்றிருந் தருளவ் வேலை
யுத்தம புராண மியாவு முணர்ந்தினி துரைக் கவல்ல
முத்தனுஞ் சூத னென்னு முனிவனை நோக்கிச் சொல்வார். (௨)

வேறு.

ஓதி யொக்கவு ணர்ந்தறி கேள்வியோய்
தீத கற்றுஞ் சிவாலய தீர்த்தமுன்
னேத மற்றிட வெங்கட் கனேகமாய்
வேத முற்றுரை கொண்டுவி ளம்பினுய். (௩)

சொன்ன வற்றுட் சுருதிக ளாய்ந்தவ
மன்னு வேத வனந்தனின் வைபவ
மென்னு மாங்க திசைத்திலை யின்றெமக்
கன்ன கேட்பதற் காதர வாயதால். (௪)

வேத மாதவ வென்றவர் வேண்டவே
யேத மொன்றிலா வெண்ணில்பு ராணநற்
போத மான தொருவடி வாய்ப்புகுஞ்
சூத மாமுனி சொல்லத் தொடங்குவான். (௫)

முன்னை யீசன் முகுந்தற் கருள்வது
தன்னை வேத வியாதன் றரும்படி
யுன்னி யோதுவ மாதவத் தீர்கணீர்
மன்னி யுள்ள மலைவறக் கேண்மினே. (௬)

கூறில் வெவ்வினை யாவுங் குலைப்பது
மாறில் வேத வனந்தனின் வைபவ
மீறில் துன்ப மெனுங்கொடுங் கானகஞ்
சூறை யாடுஞ் சுடரெனச் சொல்வரால். (௭)

புண்ணி யங்கள் பொருந்து சிவதல
மெண்ணி லாதன யாவினு மேலது
நண்ணு போகமு முத்தியு நல்குமா
மண்ண லாவுல கெங்கு மதிப்பது. (௮)

கனக மால்வரை மேவுங் கடவுளை
நினைய வல்லவர் நீடனு பூதிசே
ரனக ராகிய வட்டாங்க யோகியர்
சனக ராதி தபோதனர் வாழ்வது. (கூ)

கணங்கொ டேவர்கள் யாவருங் காதலால்
வணங்கு மாதலஞ் சாந்திவ ணக்கமாங்
குணங்க ளட்டமா சித்திகொ டுக்குமங்
கிணங்கில் வேண்டுவ யாவையு மீவது. (க0)

வேறு.

வினையினை யகற்றி யுள்ளம் விளங்கவே மிக்கா னந்தந்
தனையருள் கின்ற வேத வனந்தனைத் தார ணிக்கே
நினைபவர் துதிப்போர் காண்போர் நீடுல கிலைறஞ்சி நிற்ப
வனைவரும் பவங்க ணீங்கி யரனடி யடைவ ரன்றே. (கக)

தோற்றமா முயிர்தன் னாலுஞ் சூழ்ந்தவைம் பூதந் தாலுஞ்
சாற்றிய தெய்வத் தாலுஞ் சார்ந்திடு துயர மூன்று
மாற்றுமா தலமாம் வெள்ளி மால்வரை தன்னைப் பற்ற
வேற்றமா மனோல யந்தா னெய்துவ திறைவற் கென்றும். (கஉ)

கம்பனூர் கிரிஞ்சை புள்ளூர் சேதுமா யூரங் காழி
சம்புநீள் வனங்கா ளத்தி குடந்தைமுச் சயிலம் வெண்கா
டம்பரின் மதுரை வாஞ்சி யிடைமரு தருணை யைய்யா
றம்பல மாரூர் காசி யிவற்றினு மதிக மாமால். (கங)

மெத்துநீள் வேள்வி தானந் தவஞ்செபங் கல்வி மீண்டுஞ்
சித்தியை விரும்பிச் செய்யுஞ் சிவதரு மங்க ளெல்லா
மித்தலத் தினையொ ருக்கா னினைப்பதி னீரெட் டோர்கூ
றொத்திடா தென்னின் மேன்மை யுணர்ந்தினி யுரைப்ப தென்றே.

கொலையொடு களவு கள்ளூண் குருநிந்தை யுடன்பொய் யென்றே
யுலகினி லிவையைந் தாக வுரைக்குமா பாத கங்கள்
விலகிடு மொருகால் வேத வனமென நினைக்கில் வேறங்
கலகில்பா தகங்க ளீங்கு மென்பதற் கறைவ தென்னே. (கரு)

நானிலத் துயர்த லங்க ளடியாங் குகந்து சென்று
தானிருந் தீரைய் யாண்டு தவம்புரிந் தெவரே யேனு
மானநற் பயன்கள் சார்வா ரப்பய னொருகால் வேத
கானன மடைந்து மிக்க கடன்மூழ்கி னடைவர் கண்டீர். (கசு)

மறைவன நாதன் முன்னம் வாழ்மணி கன்னி யோத
நிறைபுன லளாவு வேத நீணதி கோடி யென்றுங்
கறையுமுத் தீர்த்த மேலா மப்பதிக் கவற்று ளாடி
யிறைவனைப் பணியிற் றிண்ண மெய்துவ ரின்ப முத்தி. (கஎ)

இந்துநீ டிரவி பேரா லிரண்டுபுட் கரணி யுண்டாங்
கந்தநற் றீர்த்த மாடி லரனொடொன் றுவ ரன்றி
முந்திய வவர்க ளூர்த்த மூழ்கிலவ் வவர்கள் வாரம்
பந்தமாந் துயர நீங்கி யவரவர் பதங்க ளாள்வார். (கஅ)

அகத்திய முனிவன் றங்கு மாச்சிரா மத்த வன்றுன்
பகுத்திடுந் தீர்த்த மொன்றுண் டப்புனல் படியி லெண்ணில்
சுகத்தினை யுதவு முன்னஞ் சுருதிக ளாத்த லத்தில்
வகுத்தவே தாமிர் தத்தின் மூழ்கினும் வழங்கு முத்தி. (கக)

யோற்றுமப் பதியிற் காதி புதல்வனாச் சிரமந் தன்னி
லேற்றமாந் தீர்த்த மொன்றுண் டாங்கதி லிசைந்து மூழ்கின்
மாற்றரும் பாத கங்கண் மாயுமற் றதுவு மன்றிச்
சாற்றரும் வன்னி யென்னுந் தருவுமொன் றுளதா லங்கண். (உ௦)

அரற்றுமவ் வன்னி போற்றி யதினுதிர் பத்தி ரத்தைத்
தரித்தவ ரிடர்த விர்த்துச் சாடுவர் பிணிகள் யாவுந்
தெரித்தவத் தருமூ லத்திற் செபிக்கினுஞ் சித்தி யாகு
மரத்தடி மண்ணைச் சென்னி வைக்கினும் வழங்கு முத்தி. (உக)

அறையுமத் தருமூ லத்தி லறுசுவை யதனு லன்ன
மறையவர்க் குதவிற் சிவன் முத்தராய் மகிழ்வ ரன்றி
நிறைதரு தென்பு லத்தோர்க் காகவந் நீழ றன்னின்
முறைகொடக் கடன்மு டிக்கி லவர்களு முத்த ராவார். (உஉ)

நாடியே திலதா னத்தை யணிகன்னி மூழ்கி நல்க
நீடுயர் கனக தான நிகமநன் னதியிற் றுேயிற்
கோடியிற் படியில் வெள்ளி கொடுக்கவே தாமிர் தத்தில்
ஆடினற் பூமி தான மதன்கரை யளிக்க மேலாம். (உங)

மாறிலா மறையோர் கேண்மின் மாமறை வனத்துள் ளாகக்
கூறுநீ ரோடை வாவி கூபமாம் பொய்கை யேரி
யாறுகால் தடாக மாதி சிறுகுழி முதல னைத்துந்
தேறுநீர்க் கங்கை தன்னே டொப்பெனச் செப்பு நூலே. (உச)

மாதவும் வேள்வி தானம் வரும்பெரும் விரத மற்றுந்
தீதறு தருமம் யாவு மியற்றினுஞ் சிவன்று னிந்த
வேதகா னனத்துட் டீர்த்த சேவைபோன் மிகவி ரும்பா
ஞுதலாற் றீர்த்த மேன்மை யாகுமித் தலத்துக் கம்மா. (உரு)

காசியி லிறக்க முத்தி கமலையிற் பிறக்க முத்தி
தேசுறு சிதம்ப ரத்தைத் தெரிசிக்க முத்தி யாகு
மாசிலா மேன்மை பூண்ட மறைசையம் பதியோ கூறி
லாசறு தீர்த்தந் தன்னி லாடவே யளிக்கு முத்தி. (உசா

கதிதரு மறைவ னத்தைக் கண்ணுத றன்னை வேத
நதியினைக் கோடி தன்னை நன்மணி கன்னி தன்னை
மதிகொடு நினைந்து மற்றோர் தலத்துழூழ் கிடினு மாறு
வதிகபா தகங்க ளேனு மவர்தமை யடையா தன்றே. (உஎ)

பறந்துமிங் கிருந்து மூர்ந்து நடக்குமப் பான்மைத் தாய
திறந்தகு முயிரி னேதொன் றுயினுந் தெரித்த வந்த
வறந்தரு மறைசைத் தாக வறையுமத் திருவெல் லைக்குட்
பிறந்தது பின்னர் மாயப் பிறப்பெனும் பிணியு றுதால். (உஅ)

நற்றவத் தோர்கட் கன்றி நாடரும் பாத கற்குச்
சற்றுமித் தலத்தி லாசை தரித்திடா சாற்றி லந்தோ
மற்றிதை நினையி லின்பம் வழங்குமிம் மாத லத்திற்
பற்றிடா தொழிந்த மாயா வைபவம் பகரற் பாற்றோ. (உகூ)

ஆபுநான் மறையோர் கேண்மி னவனியில் யாவ ரேனு
மாயவாழ் வதற லைம்பான் வயதள வாயுஞ் சென்று
தூயமா மறைகள் போற்றுந் தொல்பதி தொழாரே யென்னிற்
றீயினீ ணரக வற்குச் சிவனளித் திடுகை திண்ணம். (கூ0)

அப்பதிக் கொருகாற் செல்லி லருவினை யனைத்துந் தீரு
மெய்ப்பட விருகாற் செல்லின் மிக்கபுண் ணியங்கண் மேவுந்
தப்பற மூக்கா ற் செல்லிற் சாரூப மாகு மென்று
லொப்பியப் பதியிற் சேர்வோ ருறுங்கதிக் கெல்லை யுண்டோ. (கூக)

விருப்பமோ டிமைப்போ தேனும் வேதகா னனத்தி ருந்தோர்
திருப்பயின் றுலகின் மேலாஞ் சிவபத மடைவ ரென்று
லொருப்படு மூளத்த ராகி யத்தலத் துகந்தென் னுரு
மிருப்பவர் மேன்மை தன்னை யாரெடுத் துரைக்க வல்லார். (கூஉ)

சாற்றுமத் திருவெல் லேக்குட் சராசர மாகி யுள்ள
வேற்றரு முருவ மெல்லாஞ் சிவனுரு வென்று லங்கண்
டோற்றுவ திருப்ப தன்றித் துஞ்சுவ யாவுஞ் சேரும்
பேற்றினை யினைத்தென் றெம்மாற பேசிட லொண்ணு மேயோ. (௧௧)

வேறு.

மறைவ னத்தினின் மரித்திடு மன்னுயிர்க் கெல்லா
மிறைவ னப்பொழு திரங்கியே வலச்செவி மேலா
முறைய னைத்துப தேசமு மொழிந்திரு வினையாஞ்
சிறைய றுத்துடன் சிவப்பத மளிப்பது திண்ணம். (௧௪)

எத்த லத்தினி லிறக்கினு மிறந்தவர்க் கெனவந்
தித்த லத்தவர்க் குறுகட னியன்றகொண் டாற்றின்
முத்த ராவரே லாங்குடன் முடிந்தவர்க் கெனிலோ
மெத்து மப்பய னளவிட விளம்பவல் லவர்யார். (௧௫)

நாட்டி லெங்ஙன மிருப்பவ ரிறந்தவர் நாமஞ்
சூட்டி யோர்குசை முடிந்தவ ராகவே சொல்லித்
தீட்டு மித்தலத் தினிலொரு தீர்த்தமீ தெவரிட்
டாட்டு விக்கினு மவர்களு முத்தரே யாவார். (௧௬)

வேறு.

தருக்குநீள் கடலிடைத் தரையி லெங்ஙன
மரித்திடு மவர்நக மயிரெ லும்பினைத்
தெரிக்குமப் பதியது திருவெல் லேப்புறம்
பரிக்கினு மவர்சிவ பதத்தி ருப்பரே. (௧௭)

எடுத்தணு வாயினு மித்த லத்திலே
விடுத்தெவ ரீயினு மேரு வாமெனி
லடுத்துநின் றத்தலத் ததிக தானமே
கொடுத்தவர் பெறும்பயன் கூறற் பாலதோ. (௧௮)

நிலந்தனில் வறிஞராய் நிலையி லோர்க்குமித்
தலந்தனிற் கன்னிகா தான மீபவர்
குலந்தரு தலைமுறை கோடி கூடவே
நலந்தரு சிவபத நணுகி வாழ்வரால். (கக)

வேறு.

ஞான நீடப் பதியி னலங்கொள்கோ
தான மீபவர் தம்பிறப் பேழினு
ளான கோவதை யாயிர மன்றியு
மீன பாதகம் யாவு மகற்றுவார் (ச0)

வேறு.

முளைத்தெழு மருந்தினன் மொழியு மத்தலத்
திளைத்தவ ராதுல ரேதி லோர்கள்பாற்
றிளைத்தெழு பிணியறத் தீர்க்க நற்பொருள்
விளைத்திடு சிவபதம் விரும்பி வாழ்வரால். (சக)

அண்ணலவ் வாலயத் தற்ப மாயினும்
பண்ணிடும் பணிசிவ பதத்தை நல்குமா
லெண்ணருந் திருப்பணி யியற்றி னோர்பெறும்
புண்ணியந் தன்னையார் புகல வல்லரே. (சஉ)

வேறு.

சினத்த வெவ்வினை தீர்க்குந் திருமறை
வனத்தி லீசர் மணிமுடிக் கேறவே
தனத்தை நல்கியுந் தானெய்யு நந்தன
வனத்தை வைத்தவர் வானுல காள்வரே. (சங)

## வேறு.

முந்து வேள்விகண் முடிக்கினு முயன்றவப் பொருள்கொண்
டந்த நற்பய னுங்குறு மஞ்செழுத் தொருக்காற்
சிந்தை செய்யினா ருயிரஞ் செபபலந் தருமற்
றெந்த மந்திரஞ் செபிக்கினு முடன்சித்தி யெய்தும். (சச)

என்று நின்றிடச் சாலிநீ டியல்வள மூதா
ரொன்றி வேதியர் மாதவர்க் குதவினோ ரங்கண்
டென்று செல்வமு மின்பமுஞ் சுற்றமுந் தழுவ
வின்ற மேதினி புரந்துமேற் பரபத நிகழ்வார். (சரு)

மனைம டங்கொடுத் தந்தணர் மாதவர்க் கிருத்தி
னினைவ ருஞ்சிவ பதத்தினை நேருவ ரென்றுற்
புனையு மில்லறம் பொருந்தியே நாடொறும் புரிதற்
கனைய நல்கியாங் கிருத்தினர் பெறுங்கதிக் களவென் (சசு)

மன்னு மாதுலர் சமையிகள் வளரங்க ரினர்
முன்ன மாகத ரதிதிகண் முதலெவர் தமக்கு
மன்ன தானமத் தலந்தனி லளிப்பவர் மேன்மை
யின்ன வாறென வரனலா திசைப்பவ ரிலரே. (சஎ)

உச்சி யம்பொழு திரப்பவர்க் கொருபிடி யேனும்
பிச்சை யிட்டவர்க் கண்டவர் பாபமும் பேசி
னிச்ச யந்தீவிர்ந் தின்பமு நிகழ்வராங் கென்று
விச்சை யின்னமு தளிப்பவர் பெறுங்கதிக் கீறென். (சஅ)

## வேறு.

ஒத்தருங் கோடை தன்னி லொருபலந் தண்ணீ ரேனு
மித்தலத் துதவினாக மிரவியை யுறுங்கான் மேரு
வத்தனை பசும்பொன் மேலாந் தலந்தனி லளித்தா லொக்கும்
வைத்தவர் தண்ணீர்ப் பந்தர் மனிதரே யீச ராவர். (சகூ)

மறைவனத் துண்டி யின்றி மார்கழி முற்றும் வைகி
நிறைபுன லாடி நாளு நேர்ந்தளித் தியன்ற தான
மிறைவனை வில்வ மோரா யிரந்தழை யிட்டி றைஞ்சிற்
சிறையறுத் தவர்கு லங்க ளூறுடன் சிவத்தைச் சேர்வர். (ருo)

கழிபெருங் கடல்க ளொன்றுங் காலத்தும் விதித்த வேதா
வொழியவந் திடினு மந்தப் பதிதனக் கொருகா லத்து
மழிவிலை யன்றி மாயை தானுமாங் கடங்கு மேயால்
வழிதரும் புகலா மிந்த மறைசைமன் னுயிர்கட் கெல்லாம். (ருக)

யாவரே யெனினும் வேத வனந்தனக் கெய்த வெண்ணிற்
போவத னடைவு மூழ்கிப் புனன்முதற் புனித மேனி
தாவவெண் ணீற ணிந்து கண்டிகை தரித்து நாளும்
பாவனந் தருவ தாகப் பவித்திரம் பாணி சேர்த்தி. (ருஉ)

மோனமாய்ப் பிராணு யாம மூன்றுசெய் துளத்தில் வேத
கானன மடைந்தாங் கேய கடவுளைக் காண வேண்டி
யானெழு வதற்கவ் வண்ண விடையுள வாயத் தெல்லாந்
தானகற் றிடுதல் வேண்டு மென்றுசங் கற்பஞ் செய்து. (ருங)

போதுக வதன்பின் றங்கள் பதியினும் புறம்போம் போதி
லோதியஞ் செழுத்துந் தூய வுணவொரு போதுஞ் செய்து
மாதரார் கலவி வஞ்சம் பயனில்சொல் லெண்ணை மாற்றி
யாதுகை கவிகை யானம் பரித்திடா திலைய டைக்காய். (ருச)

உன்னரும் வருணத் தோர்க்கு மோதுமாச் சிரமத் தோர்க்கு
மன்னிநூ லுரைத்த நித்த நியமமும் வழாமன் மற்றுஞ்
சொன்னவின் னியமத் தோடுஞ் சுற்றிய குடும்பச் சூழ
றன்னொடு வறிதே யேனு மேகியத் தலத்தைச் சார்ந்து. (ருரு

சார்ந்துடற் சுத்தி செய்து தருமணி கன்னி தன்னைச்
சேர்ந்துசங் கற்பஞ் செய்து நிலமதிற் போட்டுத் தண்ட
மேந்திய கபால சூல வயிரவ னிருப தத்தை
யார்ந்தவன் மதனுற் போற்றி யவன்றனை தருண்முன் பெற்று. (ருசு)

ஓதரு வேதாந் தத்தி னுணர்வறு முணர்வே போற்றி
வேதகா ரணத்தாய் போற்றி விளம்புநீர்த் தங்கட் கெல்லா
நாதனே யாகி நிற்கு நற்பரஞ் சுடரே போற்றி
பாதக மனைத்து நீக்கும் பராபர போற்றி போற்றி. (ருஎ)

என்னுமிம் மந்தி ரத்தை யிசைத்ததின் மூழ்கி நாளும்
பன்னுநன் னியதி முற்றும் பரித்தபின் னதன்றீ ரத்தி
லுன்னருந் தென்பு லத்தோர்க் குறுகட னகை வோது
மன்னவை யியற்றி வேத நதியினு மதன்பின் சென்று. (ருஅ)

ஆடியே முன்பு சொன்ன வடைவினி லதன்றன் றென்பாற்
கோடியிற் சென்றோர் கல்லைக் கிருத்தியாங் கோதைக் கென்றிட்
டாடுக சங்கற் பாதி யனைத்தையு மியற்றி முன்போ
லாடிநின் றங்கங் கேற்ற தானமு நல்கி மீண்டு. (ருகூ)

வலஞ்செய்து முக்கா லைங்கால் வணங்கிமா மறைசை நாத
னிலங்குமா லயத்திற் சென்றாங் கியன்றனை திருமுன் னீர்று
நலங்குநற் றூப தீபஞ் சுற்றிமஞ் சனநீ ராட்டி
நலந்தர வியன்ற வன்ன நிவேதன நாதற் கேற்றி. (சுo)

உள்ளன பொருளுக் கீடாங் குலோபமே யின்றி யந்த
வள்ளலுக் குதவி யுண்டி யன்றியே யவர்முன் வைகித்
தெள்ளுமஞ் செழுத்தை யோதி நியதிகண் முற்றுஞ் செய்து
நள்ளிருள் கழித்து மற்றை நாளின்வை கறையெ முந்து. (சுக)

வேறு.

தீர்த்த மாடிநன் னியதிகள் செய்துசங் கரனை
யேத்தி யேவலஞ் செய்துட னிறைஞ்சியாங் கிருந்து
நாத்த ழும்புற வஞ்செழுத் தெண்ணிநன் பகற்கா
யேத்து நன்னிய மங்களு மீதுற வியற்றி. (௬௨)

இறைவ னுக்குளா மானந்த மெய்துதற் குணவு
மறைய வர்க்களித் தரனடி யார்க்குமா பூசை
குறைவ றக்கொடுத் தவர்கடம் மனுமதி கொண்டு
முறைமை யிற்றகு பாரணஞ் செய்துபின் முடிக்க. (௬௩)

இன்ன வண்ணமத் தலந்தனுக் கேகியிந் நியமந்
தன்னை யிப்பரி சியற்றினர் தாரணி யதனின்
மன்னி நீடியர் செல்வத்து வாழ்ந்தினி திருந்து
பின்னை யெய்துவர் சிவபதம் பேசிலீ துண்மை. (௬௪)

வேறு.

ஓதரு வேதங் கூவிக் குதவுவோர் நியதி செய்யாப்
பாதகர் தீய நஞ்சிட் டோர்பொருள் மனைவி பூமி
தீதுறும் வலியாற் கொண்டோர் பெரியரைச் சினந்தோர் மற்றும்
பாதகர் தமக்கு மந்தப் பதிபுகிற் பாவந் தீரும். (௬௫)

வேறு.

நற்றவரை மேதையினு லவையிற் சீற னல்குரவோர்க் குரைத்த தனை நல்கி டாமை, யற்றமறிந் தறவோர்த முண்டி மாற்ற லருந்திட நீர்த் துறைபுகுமா னிரைத டுத்தல், குற்றமுறுந் தன்னைவியந் துரைத்தல் கோவைக் கொன்றிடல்கோ ளரசர்செவிப் படவே கூறல், மற்றிவைகண் முதலான பாவ மெல்லா மறைஞர்வதை யொக்குமென மறைநூ லோதும். (௬௬)

ஆதரித்த கிரியைதனைச் சிவஞானத்தை யகற்றலர னடியார்பா லன்பி லாமை, யோதுதல்வஞ் சகக்காட்சி யவைமுன் னேறி யுண்ணார்தம் மிடத்திலனு மதியி லுண்டல், காதலினன் மதுவருந்து மாதர் தம்மைக் கலவியினிற் களித்தின்பங் கருதி நிற்கும், பாதகமற் றிவை யெல்லாங் கள்ளுண் ணென்னும் பாவமதா மென்றுமறை பகரு நாளும்.

கண்டிகைநெய் யுலோகங்க ளிலைய டைக்காய் கர்ப்பூர முதற் சுகந்தங் கரந்து கோட, லண்டினர்தம் பால்வைத்த பொருளை வவ்வ லாடைபல சாலிமுத லறியா வண்ணங், கொண்டிடுதல் கைமாவைத் துரகந் தன்னைக் கோநிரையை யரதனத்தைக் களவு கோட, லெண்டருமா பாதகங்க ளிவைமற் றெல்லா மிருங்கனகங் கவர்தனிக ரென் னு நூலே. (கூஅ)

மித்திரர்தன் னுடன்பிறந்தோர் தலையர் தங்கண் மெல்லியலார் தோள்சேர்தல் பகினி தன்னைப், புத்திரியைக் காமித்தல் செவ்வ ணிக்கே புகுமாதை யீனமடந் தையரைப் புல்க, லொத்தகுலத் தோ ளிருக்கக் கன்னி தன்னை யுதவாமற் குமரிருத்தன் முதலாம் பாவ, மித்தனையுங் குரவன்மனை யாளைக் கூடு மிரும்பாவ நிகரென்ன விசைக்கு நூலே. (கூக)

### வேறு.

இப்பரி சுரைக்கு மாபா தகங்களை யியற்றி னோரங்
கொப்பின ரதற்கொப் பாமென் றோதுமப் பாத கத்தோ
ரெப்பரி சினரே யேனு மிசைத்தமா மறைக ளோத்து
மப்பதி யணுகி னீங்கி நிற்பரவ் வினைய னைத்தும். (எ0)

மண்ணினிற் பிரம சாரி சுக்கிலங் கலிக்கின் வந்து
நண்ணியத் தலத்திற் றீர்த்த மூன்றினு நனைந்து வேத
வண்ணலைப் போற்றி யுண்ணு தஞ்சுநா ளஞ்செ ழுத்தை
யெண்ணிடி லோரி லக்க மிசைக்குமப் பாவந் தீரும். (எக)

இல்லறத் தினர்க்கும் வீழ்கில் வறிதிலிந் திரியம் பொங்கிச்
சொல்லுமத் தலத்தின் முன்னஞ் சொற்றதிற் பாதி செய்ய
வொல்லைய தகலுங் கான முறைபவர்க் கதிலி ரட்டி
வல்லநல் விரதஞ் செய்யின் மாறுமப் பாவ மங்கண். (எஉ)

துறந்தவர் தமக்கு மோர்காற் சுக்கிலங் கலிக்கிற் றிங்க
ளுறைந்துண வன்றி யங்க ணுரைத்தவப் பிரம சாரிக்
கறைந்தன போன்மற் றெல்லா மாற்றவப் பாவ நீங்கு
மிறந்தனூன் மாதர்க் கில்லோன் றன்னைநே ரியற்றத் தீரும். (எங)

அப்பதிக் கேகாக் கால்க ளரற்றிலொன் றுகாக் கட்டை
யொப்பியவ் வரனைக் கூப்பாக் கைகளோ வுதவாக் கொம்பு
மெய்ப்படத் தாழாச் சென்னி வீணினிற் சுமக்கும் பாரந்
தப்பறக் காணுக் கண்ணே பீலியின் றன்க ணாகும். (எச)

அவையலான் மறைசை யண்ண லரும்புகழ் நாளுங் கேளாச்
செவிகளோ வசேத னத்திற் செய்தவுட் டுளைக ளாகும்
நவையுறு வருந்த லத்தின் மேன்மைக ணவிற்று நாவோ
சுவைகளொன் றறியா நின்று தூங்கிடுந் தோலே யென்பார். (எரு)

சொன்னவப் பதியில் வாழுந் தோன்றலா லயத்தை யங்கந்
தன்னிறைல் வலஞ்செய் யாமற் றுங்குடல் சவமே யென்பார்
மன்னுமவ் வரனுக் கொத்த பணிவிடை வருந்திச் செய்யா
தன்னினின் றுலவு மெய்யு மூலவைகொ டுருத்தி யொக்கும். (எசு)

நரைதிரை வருமுன் போத நழுவுமுன் புலன்கள் கூற்றஞ்
சருவுமுன் றாதை லாலே தையலார் மக்கள் சுற்றம்
பொருவருஞ் செல்வம் யாவும் பொய்யெனக் கருதி நீத்து
மருவுக வின்பம் வேண்டி மறைவன மறிஞ ராஞோர். (எஎ)

துயிலினா லிரவு மாகாத் தொழிலினாற் பகலும் வால
வயதறி யாமை யாலும் வாலிப மாத ராலுஞ்
செயலழி வதனுன் மூப்புஞ் சென்றிறு மாத லாலே
உயிரிறு முன்னம் வேத வனமுற வுறுகி லின்பம். (எஅ)

உண்மையு மிதமு மாந்தர்க் குறுதியு மறிதி யாக
வெண்ணியான் மீள மீள வியம்புகேன் பிறவித் துன்பந்
திண்ணமா யகற்றி யின்பஞ் சேர்பவர் மறைவ னித்தை
நண்ணுவ ரன்றித் துன்ப நணுகுவோர் நணுகா ரங்கண். (எகூ)

பொன்றிடு முடலா லென்றும் பொன்றிடா வுடலைச் சார்வோர்
சென்றுமுத் தீர்த்த மாடிச் சிவனடி பணிய வங்க
ணன்றவர் சீவன் முத்த ராகுவ ரதற்கி யானு
யின்றுணர்ந் துரைத்த தன்று மறையதன் றுணிவு மீதால். (அ0)

வேதமா விந்தி ராதி விண்ணவர் சனக ராதி
மாதவர் சேட னாதி பணீந்திரர் மற்றோர் யாரு
மோதுமித் தலத்துக் கொப்பா யுலகமூன் றினுளும் வேறு
மாதல மில்லை யென்று மகிழ்ந்துகொண் டாடா நிற்பர். (அக)

வேறு.

அத்த லத்துநீ ராடலே யருச்சனை வேள்வி
மெய்த்த வங்களும் யோகமும் ஞானமும் வீடு
மொத்து மற்றுமத் தலம்புகுந் துலவிடப் பெற்றால்
முத்தி பெற்றிட வென்னொரு முயற்சிவேண் டுவதில். (அஉ)

வேறு.

அப்பதிக் கேகு வார்க்கென் றன்னபா னாதி யீவோர்
மெய்ப்பரி வேள்வி செய்வோர் மேவிடு முலகஞ் சேர்வோர்
செப்பிடி லீன ரேனு மத்தலஞ் செறிந்தோர் மேலோ
ரொப்பினுன் மறையோ ரேனு மத்தலத் துறாரே லீனர். (அங)

வேறு.

கங்கைநதி நதிகளுக்குட் பணியுட் சேடன் சற்குநாற் காலிக்கு ளாலுள் வேதம், பொங்கறத்துட் றேவுமையாள் சத்தி தன்னுட் புக றருவுட் கற்பதரு பொருப்புத் தன்னுட், டங்கமலே குருபரரில் ஞான நாதாத் தருவருணைத் தனின்மறையோ ரிமையோர் தம்மு, ளங்கணா மதிகம்போற் றலங்க ளாய வனைத்தினுக்கும் வேதவன மதிக மாயால். (அச)

வேறு.

திருந்தவாண் டன்றித் திங்கள் பக்கமே தினமொன் றேனு
மருந்திறற் கணமே யேனு மங்கதிற் பாதி யேனும்
வருந்தியத் தலத்துக் காக வருத்தவீ ரைங்கு ரோசத்
திருந்திடி லெங்ங னேனு மெளிதவர்க் கிசைக்கின் முத்தி. (அரு)

வேறு.

மாய னான்முகன் வாசவன் மற்றுளோர் தங்க
ளேயு நற்பதம் வேண்டினின் றிருந்தவம் புரிந்து
போயி ருப்பதின் மறைசையின் மலத்திடைப் புழுவே
யாயி ருப்பது நன்றென வருமறை யறையும். (அசு)

அந்த லத்தினின் மரித்தவர்க் கந்தக வாதை
யுய்த்தி டாதுமே லானவர் வல்வினை யொழித்து
சுத்தி யாருமவ் வைரவன் சூலத்தி னுதியில்
வைத்த ருத்துவித் தவர்க்குடன் முத்தியும் வழங்கும். (அஎ)

எந்த வல்வினை செய்யினு மித்தலத் தறுமென்
றந்த மேதையா லருவினை யாங்கியயற் றினரே
லிந்து வெங்கதி ருள்ளள விருநர குறுவர்
சிந்து மவ்வுடலாங்கெனிற் சேருவர் முத்தி. (அஅ)

துன்று மாசையைத் துரந்தவ ரத்தலத் திருப்ப
தன்றி யாசையே லருவினை யறுதியா யணுகு
மென்று மித்தலத் திருப்பவ ரியற்றுபுண் ணியங்க
ளொன்ற னந்தமாம் பாவமு மப்பரி சுயரும். (௨௯)

விளங்கு மத்தலத் தாதலால் வெவ்வினை புரியா
ரளந்த நல்வினைக் காய்ப்புரி பாவமு மறமாம்
வளங்கொ ளப்பதி யுறைதரு வைரவன் பாத
முளங்கொ டேத்தினும் வினையென வுளதெலா மொழியும். (௩0)

ஆற்றி டும்வினை யாவையு மத்தலத் தரன்பா
லேற்றி யானென தென்றிடா திருப்பவர் மீளத்
தோற்றி யன்னையர் முலையமு தருந்திடார் சொல்லின்
மாற்ற ருஞ்சிவா னந்தமா மதுவுண்டு மகிழ்வார். (௩௧)

வேறு.

மரித்திட வெவையுந் தாங்கு மூழியா மயான மீளத்
தரித்திடும் வினைக்கீ டாகத் தருமுட லித்த லத்தை
விரித்திடு முலகுக் கெல்லாம் வினையறுத் துடலை மீளப்
பரித்திடா தருளி னாலே யிறைக்கிது பரம யானம். (௩௨)

சத்திய சைல மாதி சேதுவா மறைசை தானு
வைத்தசெதன் கைலை தேவர் மன்றமா ஞான பூமி
நித்தர்வாழ் பரம யான மென்றுநீ டுலகம் போற்று
மித்தலம் வேறு வேறு நாமமு முடைய தாமால். (௩௩)

வேறு.

இத்த லத்தினிற் சிவநிசி யொன்றியற் றிடினு
மெத்தி யாயிரஞ் சிவநிசி மேன்மையை விளைக்கு
மித்த லத்தினி லத்தினத் தருந்தவர்க் கேதொன்
றுத்த ளிக்கினு மொன்றொரு கோடியா முரைக்கில். (௩௪)

சாற்றின் முன்னொரு சாலிகோத் திரனெனு மறையோ
னுற்ற நல்குர வகத்திய னேவலால் வந்து
போற்றி யந்நிசி யடைந்தனன் போகமும் வீடு
மேற்ற மாதலாற் சிவநிசி யியற்றலிப் பதிக்கே. (கூரு)

அதனை யன்றியு மப்பதி யணைந்தொரு வேத
பதியெ னும்பெய ரந்தணன் முனுமுன் பகர்ந்த
விதியி னூற்சிவ ராத்திரி விரதமே யியற்றிக்
கதிய டைந்தனன் மீண்டொரு கருவுறு வண்ணம். (கூசு)

பெருகு மிப்பதி வேலவன் முனுமுன் பேணிப்
பொருது சூரனை வாசவன் புகவுல களித்தான்
றரும னாதியாம் பஞ்சவர் தாமுமத் தலத்தை
மருவி யின்பமுற் றரசராய் மாநிலம் புரந்தார். (கூஎ)

வேறு.

வாசவன் றனக்கு முன்னாள் வருணரா சன்ற னக்கும்
பேசரும் பிரம கத்தி நீர்ந்தநித் தலத்தைப் பேணி
யாசறு வசிட்ட ருக்கு மகன்றது சரும ரோக
மேசிலா முனிமைந் தற்கு மகன்றதங் கீன சாபம். (கூஅ)

கோதறு குபேரன் முனு மித்தலங் குறுகிப் போற்றி
மாதொரு பாக னுரைத் தோழமை வரமே கொண்டான்
மூதுணர் சனக ராதி முனிவரு மநேகர் முன்னு
ளாதரித் தித்த லத்தை யட்டமா சித்தி பெற்றார். (கூகூ)

மண்ணிடை யனேகர் கூறின் மாதவர் தமில னேகர்
விண்ணிடை யனேக ரிந்தத் தலத்தினை மேவித் தீர்த்த
நண்ணினின் முடி வேத நாதனைத் தொழுது போற்றி
யெண்ணிநின் றருள்பெற் றார்க ளிப்படி யெண்ணி லார்கள். (க00)

நிறையறி வினர்க்கு மெட்டா நிகமகா னனத்து மேன்மை
சிறியனே புகல்வே னென்னிற் சேடனு முணரொ ணாதா
லிறைவனு ரெனில னந்த காலமீ தெண்ணிக் கண்டா
லறிவரோ வறியார் கொல்லோ வறிகில மிரண்டு மந்தோ. (௧0௩)

வேறு.

புகலு மத்தல விசிட்டமே புனைந்தவிச் சருக்கம்
பகரு மன்பினர் கேட்பவர் பாருல கிறைஞ்ச
நிகம கானனத் தரனது நீடரு டன்னு
லிகலி லாதநற் பரபத மெய்தியின் புறுவர். (௧0௨)

தலவிசிட்டச்சருக்கம் முற்றும்.

ஆ சருக்கம் உ-க்கு திருவிருத்தம் ௧எ௪.

## இலிங்கோற்பத்திச்சருக்கம்.



முத்தியை யுணர்கிலா மூடர் கட்குமே
சத்திநி பாதமாந் தலவி சிட்டமே
புத்திகொ டறிந்தமை புகன்ற மேலுநற்
பத்திகொ டிலிங்கவுற் பத்தி கூறுவாம். (௧)

வேறு.

சாற்று முன் னோர் சது முகன் றன்மொழி
லேற்ற கற்பத் திராமவ தாரமாய்த்
தோற்றி மாயன் றொலைவி லரக்கரை
மாற்ற வெண்ணி யவனியில் வந்தனன். (உ)

மண்ணி னீடிலங் கைக்கு வழிசெலற்
கண்ணி தென்றெணி யாதியி ராமனு
மெண்ணில் வானரச் சேனையோ டித்தல
நண்ணி யக்கடற் கோடி நணுகினன். (௩)

## வேறு.

செறிய வக்கட னதிகரந் திரையெனு முகத்தாற்
றுறைபு ரண்டுமென் மேலெழுந் தோங்கிய தோற்ற
மறைசை யம்பதி புக்கதன் மகவெனுந் திருவை
நிறைய மெய்தழீ மோப்பதற் கெழுவன நிகர்க்கும். (௮)

சென்று வாரிதி படிந்ததிற் சிறந்தநீர் பருகிக்
கன்று வாய்விடுத் தெரிபுறங் கான்றெழு மேகந்
துன்று பாற்பெருங் கடலிடைத் துயின்றெழுந் தோங்கி
நின்ற மாமலர்த் திருவுறை நெடியவன் போலும். (௯)

## வேறு.

கலையெனப் புடவி சூழ்ந்த கடனெடுங் கரையின் மீதோ
ரலைபுக வதன்பின் மற்றோ ரலைபுகுந் தலைக்குங் காட்சி
நிலையிலா வில்ல றத்தி னின்றவர் தம்மைத் தாவி
யுலைதுய ரொன்றின் மேன்மற் றொருதுய ருறுவ தொக்கும். (௰)

## வேறு.

விரவு நன்மணி யரும்பொருள் வேண்டவெ படைத்துக்
கரைக டந்திடா நின்றதக் கடலுல கத்தி
லுரைத ரும்பொருள் செல்வநீ டுறுபொருள் பெறினும்
பெரியர் தங்குல நெறியினிற் பெயர்ந்திலர் போலும். (௧௧)

கருங்க ழிப்புனல் படர்ந்திடக் கண்டவக் கடலுந்
தரங்க மோதிநீர்த் திவலைக டானுகுங் காட்சி
யரங்க மீதெனப் பாற்கட லகற்றிமா றுயில
வருங்கொ ளென்றுமுத் திறைத்தடி வணங்குதல் காட்டும். (௧௨)

வெண்டு கிற்படு பாய்பொதி மிருமரக் கலமுங்
கொண்ட னீடிய கிரிகளுங் குலவிட வதிருந்
தெண்டி ரைக்கடன் மேடையுஞ் சிகரகோ புரமு
மண்டி நீடொலி பரப்பிய மாநகர் மானும். (௯)

## வேறு.

கூறு மக்கடல் கொண்டெழு மவ்வளம்
வீறு மாயனுங் கண்டு வியப்புற
மாற ரும்பெருஞ் சேது வகுப்பதற்
கீறில் வானரச் சேனையை யேவினான். (௧௦)

ஏவி நீடணை பற்றி யிருங்கடற்
றூவி மட்டி லரக்கரைச் சாடியே
யாவ ருந்திரு மாதொட யோத்திமேற்
போவ தற்கென் றவணெழும் போதினில். (௧௧)

திரமு றப்புரி சேது நடுவுற
மருவு மத்திரு மாலை வலித்தவன்
சரம டர்த்த விராவணன் றன்னுடற்
பிரம கத்தி தொடர்ந்து பிடித்ததால். (௧௨)

பிடித்த போதி லவனுருப் போந்தள
மடுத்து நின்றனன் மாதவஞ் செய்துமுன்
றெடுத்தி ராமனைச் சூழ்துயர் மாற்றிநின்
றடுத்த மாதவர் கண்டன ராங்கதை. (௧௩)

கண்ட மாதவர் தங்கண் கலங்கியே
தண்டு துன்ப மெனுங்கட றுவுதற்
கண்டர் வேண்ட வறம்புனை சேதுவாய்க்
கொண்ட விண்டுவை நோக்கிமுன் கூறுவார். (௧௪)

ஆதி மூலமே யாதலி னீபுரி
சேறு மூலத் தணைந்து சிவன்றனை
யோது மூலத் துரைகொ டிறைஞ்சினு
லீறு மூலமா யேகுமிப் பாதகம். (௧௫)

உண்மையென் றெம்முரை கொள்வை யுண்மையா
யண்ண லூன்வந் துனக்கி தகற்றிடு
மெண்ணி லன்றியு லருக்கு மின்பமே
நண்ணி னின்றுப் காரமு நல்குமால். (௧௬)

என்று மாதவர் கூற விராமனு
மன்று தொட்டு மரக்கர்க ளிவ்வழி
சென்ற றங்கள் சிதைத்தற வோரையுங்
கொன்றி டாவகை கோதண்ட கோடியால். (௧௭)

உடைத்து விட்டாங் குவரியை மூன்றிடத்
தடைத்த கூலத் தறுபத்தெண் ணுயிரஞ்
சடைத்த லைத்தவ ரோடுந் தவஞ்செயற்
கெடுத்த நற்றல மேதென வெண்ணினான்.  (௧௮)

வேறு.

என்றுமிவ் வேலை தன்னி லியாவாலி யென்னு ஞானங்
கண்ணுளா னொருவ னந்த முனிவர்தங் கணத்து மேன்மை
நண்ணினோ னுலக னைத்து நாடியு மறிதற் கெட்டாப்
புண்ணியத் தலத்தை யாதி மால்பெறப் புகல லுற்றான். (௧௯)

உத்தர திசையி லார்க்கு முடனிரும் பவத்தை நீக்கி
யத்தனு முமையா டானு மகமலர்ந் தென்று முன்சா
னித்திய மாகி யங்க ணிட்டருள் கொடுக்கு மேன்மைச்
சத்திய கிரியென் றோதுஞ் சைலமொன் றுலகி லுண்டால். (௨0)

அந்தமா மலையி னுச்சிக் ககலம் யோசனை யிரண்டா
மிந்தநீள் சேது மூலத் தெய்திய தஃதி னூடும்
வந்துடன் மூழ்கி னோர்கள் மண்ணில்வந் துதியா வண்ணஞ்
சந்தத நல்கு மேன்மைச் சத்திய நதியொன் றுண்டால். (௨௧)

மடுத்தெழுந் திரைதோய் வாரி மறிக்கரீ வெண்ணிச் சேது
வடைத்திடும் போழ்தி லங்கண் கவையனே முதலா யுள்ளோ
ரெடுத்துமுன் கொடுவந் தோங்க விரும்பெரும் புனலிற் றூவ
விடுத்தபோ தளாவிற் றந்த நதியுமவ் வேலை தன்னில். (௨௨)

உத்தர காமி யாக வோடுமந் நதிநீ ராடிப்
பத்திகொ டதன்றன் மேல்பாற் பற்றிநீ தவம்பு ரிந்தாற்
சத்திய கிரியு ளீசன் சந்நித னாகி வேண்டுஞ்
சித்தியு மளித்து மற்றிப் பாவமுந் தீர்ப்ப னென்றான். (௨௩)

இவ்வண நின்று கூற யாவலி யிராமன் கேளா
மெய்வண மீதென் றெண்ணி விளம்பிய கிரியைச் சார்ந்தங்
கைவனச் சார லோடு மந்நதி நன்னீ ராடி
யுய்வன நியமந் தன்னோ டுயர்தவ முறவே செய்தான். (௨௪)

அத்தவத் துறுதி கண்டக் கிரியில்வா ழண்ண றன்பால்
வைத்திடு சுத்த நீர்தோய் மணிகன்னி யுடனே கூட
வுத்திரஞ் செறிபங் குனி யுவாவினி லுச்சி நேரஞ்
சித்தியை நல்க வாங்கே சிவலிங்க வுருவாய்த் தோன்றி. (௨௫)

ஆங்கதிற் சகள மாகி நதியுட னரவந் திங்க
டாங்கி யோரா யிரஞ்செங் கதிரொளி தயங்க நின்று
நீங்கருங் கருணை பொங்க மான்மழு நிகழ வங்கை
யாங்கிய விதழி யந்தா ருடன்றிரு வுருவங் காட்ட. (௨௬)

## வேறு.

கண்டவுடன் மாலுவகை கண்மலர்க வேவ
மண்டுபுள கங்கமொடு வாய்மலர்து திக்க
கொண்டவடி வம்பலகு றித்துளமு வப்பத்
தொண்டொடுப ணிந்தசிவ வாரிதிது ளைந்தான். (௨எ)

இத்தவமி யற்றியவி ராமனையு கந்தே
முத்திவழி நல்கவரு முக்கணனு ரைப்பா
னத்திறலி ராவணனை யன்றுவதை செய்ய
வுய்த்தமக பாதகமொ ழிந்ததினி யென்றான். (௨அ)

நின்பிரம கத்தியினை நீக்குதனி மித்தம்
வன்பவம றுக்குமணி கன்னிகொடு வந்தோ
மன்பொடுப ணிந்ததில றத்தொடுப டிந்தோர்
தம்பிரம கத்திமுத லாயவினை சாடும். (௨௯)

என்றரனி யம்புதிரு வாக்கினையி ராம
னன்றெனவு ளங்கொடுந லங்கொண்மணி கன்னி
துன்றுபுன லாடியெழு சோதியையவ ணங்கா
நின்றுவர மொன்றுளது நீயருள்செ யென்றான். (௩௦)

## வேறு.

பாத கஞ்செய வந்தெனைப் பற்றுமா
பாத கங்க டவிர்த்த பரமனே
நீத கற்றித் தினந்தொழு வோர்க்கெலாம்
போத நல்குநற் போகமு முத்தியும். (௩௧)

வென்று மீள விதித்தவிச் சேதுவி
னென்று மூலத் துலக மழியினு
மென்று மிங்ங னிருந்தரு ளல்கென
வன்று வேண்டினன் றதியி ராமனும். (௩௨)

நீடு மாலுக் கரனு நெகிழ்ந்துடன்
பாடு செய்தப் பருப்பதத் தர்௱தி
கூடு மேல்கரை யிற்குண திக்கையே
நாடி லிங்க வடிவுடன் நண்ணினான். (௩௩)

மூட்டி னீள்பரித் தேரின் முகுந்தனும்
பூட்டி யேறி யயோத்தி புகுந்தனன்
நீட்டு மாதவ ருஞ்சிவ லிங்கமுன்
னாட்டி யங்கண் பரகதி நண்ணினார். (௩௪)

ஆதி ராமனிக் கோடி தொடுத்தணை
யாதி காலத் தடைக்கையி னலிநு
வாதி சேதுவா மீதடி தன்னிலன்
னாதி யாக வரனு மிருந்தனன். (௩௫)

ஆத லாலிவ் விலிங்க மயன்பதம்
போது காலமு நாசம் பொருந்திடா
வேத மாகம மேதை சராசர
மோது மாயையு மீதி லொடுங்குமால். (௩௬)

ஏற்ற மாமிவ் விலிங்கத் துலகெலாந்
தோற்று காலந் தொறுமிறை தோன்றியே
போற்று நான்மறைப் போதத் தடைவெலாஞ்
சாற்றி நிற்குஞ் சதுமுக னுக்குமே. (௩௭)

வேறு.

சொற்றவிவ் விலிங்க மேன்மை தொகுத்திடின் முகுந்த னன்றி
மற்றுநான் முகத்தோ னானும் வந்தொரு கற்பந் தன்னிற்
பற்றிடுஞ் சராச ரங்கள் படைப்பதற் கரனை நோக்கி
நற்றவம் புரிவ தாக வக்கடற் கோடி நண்ணி. (௩௮)

இருந்தய னியாவ ராலு மியற்செரு வருந்த வங்கள்
வருந்தியு மிறைவன் வந்து வரங்கொடா வாறுகண்டே
யரிந்துதன் சிரமோ ரொன்ற யாகுதி செய்வே னென்று
புரிந்தனன் றென்பாற் செய்ய பூதலம் பொலிவ தாக. (௩௯)

உறைவுறு கமலத் தோனு மக்கணத் துகாந்தந் தோறு
மறைவுறு பொருளாய் நிற்கு மென்றுமுன் மதித்த லிங்கங்
குறைவறு கருணைக் குன்றாய்க் கோடிசெங் கதிர்க ளென்ன
நிறைவுறு தழற்பி ழம்பாய் நின்றிட நேரே கண்டான். (௪௦)

கண்டுளி மாரி தூவக் கண்டயன் கரங்கள் கூப்பிக்
கொண்டுமெய் புளகங் கொள்ளக் குரைகட னஞ்ச முண்டன்
றண்டர்தங் கிளைக ணிற்ப வருள்புரி கருணைக் குன்றே
தொண்டனேற் கண்டந் தோற்றுந் தொழில்புரி சுடரே யென்றான். ()

ஆய்கது கேளா முன்ன மரனுமவ் விலிங்கந் தன்னி
லோங்கொளி யுருவாய்த் தோன்றி யுவந்துநான் முகனை நோக்கி
நீங்கரு முன்ற வத்தா னெகிழ்ந்தன நெஞ்ச நம்பால்
வாங்கரும் வரமே யேனும் வழங்குவ முரைத்தி யென்றான். (௪௨)

நடுங்கிநின் றயனுஞ் சொல்வா னயந்தெனக் குலகுண் டாக்கி
யிடுந்தொழி லருள்வா யென்ன விறைவனுங் கேளா வெல்லா
மடங்கிய காலந் தன்னி லாரண மியாவு நம்பா
லொடுங்கிய தென்றா னென்றா யுலகிலந் தொழிலும் வல்லான் (௪௩)

அந்தநா ளொடுங்கி னின்ற வாரணந் தன்றோ ஞாலந்
தந்திடுந் தொழிலி னுண்மை தயங்குவ தாத லாலே
வந்துநீ முந்த நம்பான் மறைப்பொரு ளுணரா திந்தச்
சிந்தனை வந்த தென்று செப்பிமு னெப்பி லாதான். (௪௪)

அண்ணலிவ் வாறு கூற வயனுமீண் டடியிற் றழ்ந்து
கண்ணுத லேமெய்ஞ் ஞானக் கண்ணெனக் கருள்வா யென்னப்
பண்ணிநேர் மொழியாள் பாகன் பங்கயத் தயனுக் கப்போ
தெண்ணரு மறையி னுண்மை யாவையு முபதே சித்தான். (சரு)

மதித்திடு படைப்பி னுண்மை மறையினுட் கேளா முன்னம்
பதித்திடு சராச ரங்கள் யாவையும் படைக்கு மந்த
விதித்திற மனைத்துந் தோன்ற விளம்பிய வுபதே சத்தின்
கதித்திற மதனைக் கண்டு களித்துளங் கழலத் தோனும். (சசு)

சிரங்களிற் கரங்கள் கூப்பித் திரும்பவுஞ் சிவனை நோக்கிப்
புரந்தனைக் கரந்த கோவே புனிதனே யடிய னேற்காய்
நிரந்தர மிவ்வி லிங்க நீழலி னின்று நாளும்
வரந்தர வேண்டு மென்று வேண்டினன் மறைவல் லோனும். (சஎ)

வேறு.

நாக கங்கணன் றானுமன் னான்முகற்
காக வென்றவ் விலிங்க மதிற்கரந்
தேக மொன்றி யிருந்தனன் யாவரு
மோகமின் றின்ப முத்தி முயங்கவே. (சஅ)

அரிய யன்றொழு மவ்விலிங் கத்தினைக்
கருதி னுந்துதி செய்யினுங் காண்கினுந்
துரித மாயின யாவுந் தொலைந்துமேற்
பெரித மானந்த முத்தி பிறங்குமால். (சகூ)

வேறு.

ஊன்றிய தாகி நின்றங் குற்றிடு முகாந்தந் தோறு
மூன்றிய சராச ரங்கள் யாவுமே யொடுங்கி மீளத்
தோன்றிடு மிதனி லென்று சொல்லுறா லென்றுற் றானே
தோன்றிய விலிங்க மேன்மை யாவரே சொல்ல வல்லார். (ருо)

முத்தியை யுலகங் காக்கு முதன்மையை வேண்டி ஞேர்க
ளத்தலத் தரனைக் காண்ப தன்றியே நினைந்தாற் போதும்
புத்திரர் தார மில்லம் பூமியா வின்பம் போகம்
வித்தையெஞ் ஞான முண்மை தவம்பயன் விரும்பி ஞேரே. (ருக)

பங்கயன் றிருமா லாதி யமரர்தம் பதங்கள் வேண்டி
லங்கணர் வேத நாத ரடிதொழ வாகு மன்றித்
தங்குவன் கூற்றம் பாவஞ் சஞ்சிதம் பலரோ கங்கள்
வெங்கடுங் கோளி னீட்டம் யாவையும் விலக்கு மேயால். (ருஉ)

பகைவரை வெல்கை மிக்கப் பலகலை யறிகை பார்வைக்
ககல்பொருள் காண்ட லூனே யனைவர்க்கும் வரங்கொ டுத்த
லிகபர மாய சித்தி யாவுமுண் டாகு மிந்த
நிகமகா னனத்து ளீச னிமூலடி போற்று வோர்க்கே. (ருந)

அன்னவா றன்றித் தூரத் தணுகவே யிருந்தோ ரேனுஞ்
சொன்னமா மறைவ னத்துட் டோன்றலைத் தொழாரே யென்னிற்
பன்னருங் கன்ம பூமி யாகிய பரத கண்டந்
தன்னில்வந் துடலெ டுத்துந் தற்பயன் சாரா ரன்றே. (ருச)

பொன்னுல கினருந் தாமெப் போதுமே விரும்பா நிற்பர்
மன்னிய பரத கண்டத் துதித்துநான் மறைக்காட் டண்ண
றன்னடி பணிந்து நாளுந் தத்தம திகா ரத்தோ
டின்னமு மனேகங் கால மிருப்பமென் றெண்ணி யெண்ணி. (ருரு)

பாவமென் றுரைத்த யாவும் பரித்தபா தகரே யேனு
மோவரு மித்த லத்தி லுகந்துசென் றுடித் தீர்த்தந்
தாவரு மறைசை யண்ண றன்னடி கண்டோர் முத்த
ராவதற் கைய மில்லை யரன்றிரு வாணை யுண்மை (ருசு)

வலஞ்செய்து மதில்சூழ் வேத வரதனா லயத்தை முக்கால்
வலஞ்செயிற் பவநோய் தீரு மணிநெடுந் தேர்வீ திக்கே
வலஞ்செயி னரக மாயு மறுகிடை யங்கந் தன்னால்
வலஞ்செயி லான ருத்தா சனம்புகும் வாழ்வு நல்கும். (ருஎ)

இறைவனை யன்றி மற்ற விதரதே வதைகட் கெல்லா
நிறைதரு மீரெட் டாக நிகழ்த்துப சாரந் தானே
குறைவறு பூசை யென்பர் குவலயம் போற்று மெங்கள்
மறைவனத் திறைவ னுக்கே வலம்வரல் பூசை யாமல். (ருஅ)

எந்தையை வலஞ்செய் தற்கென் றெண்ணினாற் கருட ராச
மந்திரங் கேட்ட நாக மென்னவல் வினைகண் முற்று
மந்தர மறந டுங்கும் வலம்வரி லடிக டோறும்
வெந்திற லயுத கோடி வேள்விகள் செய்தா லொக்கும். (ருகூ)

ஏற்றினைச் சண்டன் றன்னை மீளவு மிடபந் தன்னைப்
போற்றியே வலமாய்ச் சோம சூத்திரம் புகுந்து மீளச்
சாற்றரு மிடபஞ் சண்டன் சூத்திர மீண்டுஞ் சண்டன்
றேற்றரு மிடபஞ் சாற்றிற் சோமசூத் திரமீ தாமால். (கூ0)

மாலையம் போதி விந்த விதியினால் வலமே செய்தன்
மேல்தாம் வறிதே யந்த விமலனை வலஞ்செய் தாலும்
ஞாலமேல் விசிட்ட மன்றி வலமிட றுடிச் சூழிற்
சாலவு மதனுக் கொன்றீ தாயிரஞ் சாற்றி லங்கண். (கூக)

விதித்திடு சோம சூத்ர விதிவலஞ் செய்தா லொன்று
கதித்திடு மிரண்டி லக்கங் கண்டுகண் டிறைஞ்சிற் கோடி
மதித்திடு மங்கந் தன்னால் வலஞ்செயி னூறு கோடி
யுதித்திடு புண்ணி யங்கள் வீதியி லொன்றனந்தம். (கூஉ)

பூ... யவ் வரனுக் கேற்றம் புரிகினும் வலஞ்செ யாரேற்
பூசனை யாகா தன்றிப் பூதலத் தெவரே யேனும்
பூசையொன் றியற்று ரேனும் போய்வலஞ் செய்தாற் போதும்
பூசையங் கதுவாய்க் கொண்டு பொழிந்திடுங் கருணை யென்றும். ()

ஆரண வனத்தோன் றன்னை யாதரித் திடுதல் வேறு
பாரமொன் றில்லை யன்பால் வலஞ்செய்து பணிந்தாற் போதுந்
தாரணி தன்னிற் றுஞ்சி யெழுகினுஞ் சடம்போ மந்த
நேரமு மிருந்தெங் கேனு நினைக்கினு முத்தி நல்கும். (சுச)

சிறந்திடு மறைக்காட் டண்ண றிரவியங் கவர்ந்த பேர்க
ளிறந்துட னிரைய மெய்தி யெண்ணிலா வீன ராவர்
மறந்துமப் பொருள்க வர்ந்தோர் வந்துபின் கூன ராவ
ரறிந்துமப் பொருள்க வர்ந்தோ ரந்தக ராவ ரன்றே. (சுரு)

சினத்திவர் பூமி தன்னைச் செந்நெலைக் கவர்ந்தோர் தாமுங்
கனத்தநீ ணரகந் தன்னிற் கற்பாந்த முழன்று மீளத்
தனத்திலை லறிஞ ராவர் தரையினி லதனால் வேத
வனத்தரன் பொருளென் றொன்றை வவ்வுத லாகா தன்றே. (சுசு)

வேதநின் றிறைஞ்சு கின்ற மெய்த்திரு மூலட் டானத்
தாதிநா யகன்றன் மேன்மை யறையுமிச் சருக்க நாளு
மோதினர் கேட்போர் கேட்ப வுகப்பவ ருலகி னூளு
மேதரு செல்வம் பெற்று மேவுவர் சிவப தத்தை (சுஎ)

இலிங்கோற்பத்திச் சருக்க முற்றிற்று.

ஆகச் சருக்கம ரு-க்குத், திருவிருத்தம் உருஅ.

---

## மணிகன்னிகைச் சருக்கம்.



முந்துமறை சைப்பதிமு ளைத்தெழுமி லிங்கத்
தந்தமில்வி சிட்டமத றிந்தமைபு கன்றே
மெந்தையுட னென்றறியி ரும்பவம கற்ற
வந்தமணி கன்னிகையின் வைபவமு ரைப்பாம். (க)

காசிதனில் வாழுமணி கன்னியென மூன்று
வீசனரு ளாலுலகி லியாவர்களு முய்ந்தே
பாசமக லும்படிப கர்ந்தமறை சைக்காய்த்
தேசுதர வைத்ததொர்தி ருக்குளம தாமால். (உ)

வேறு.

நிறைபுனல் கொடுபவ நீக்கிச் சந்திதிப்
புறமதி லிறைவலப் புறத்துக் கண்ணென
வுறைமணி கன்னியீ தூகந் தூழ்கின்மா
மறையவர் வதைமுதன் மாற்று விக்குமால். (௩)

அன்றுநண் பகற்பொழு தரனொ டெய்தலா
லொன்றியீ தாடுதற் குச்சி நேரமே
நன்றது வன்றியு நனைவ தற்கிதற்
கென்றுமென் னேரமு மெடுத்த காலமே. (௪)

நச்சிய காசியு ணவின்ற கன்னியி
லிச்சைகொள் காலையி லெழுந்து மூழ்கினு
மெச்சிய மறைசையில் விளம்பு மிக்குளத்
துச்சியின் மூழ்கினு மொக்கு மென்பரால். (௫)

வேறு.

அன்ன தன்மைய வாதலின் மாமணி
கன்னி யாடினர் காசியி லாடின
ரென்னு மாறலை தேற்றமு மெய்துவர்
துன்னு தீவினை யாவுந் துடைக்குமால். (சு)

வேறு.

சென்றுமா மறைதை யன்னை திருவரு ணிறைந்த தென்ன
நின்றுல களிக்கு நீர்மை நிகழ்மணி கன்னி தன்னி
லொன்றினை நினைந்து மூழ்கி லுதவுமாங் கதனை யுண்மை
யன்றிமற் றொன்று மெண்ணு தாடிலோ வளிக்கு முத்தி (எ)

நன்பக லாதி வார நனுகமை யோகத் தீதின்
றன்புன லாடி நாபித் தடமறை நீரி னின்றிங்
கன்பொடஞ் செழுத்தைப் பன்னீ ராயிரஞ் செபிக்கிற் சித்த
ரென்பரா மவர்க்கண் டோர்க்கு மிரும்பவ மியாவு நீங்கும். (அ)

வந்தறின் மகரத் திங்கள் வைகறை யாடி னோர்க்கு
மந்தக வாதை யில்லை யமருல காள்வர் மாகம்
புந்திகொண் டாடின் மற்றும் புண்ணிய காலத் தொன்றிற்
சிந்தைகொண் டாடி னோருஞ் சிவத்தினை யடைவ ரன்றே. (கூ)

ஆடினர்க் கரும்ப வங்க ளகற்றுமென் றதற்கோர் மேன்மை
தேடின ரதற்கிங் கேறச் செப்புவன் கங்கையாதி
நாடரு நதிகள் யாவு நானிலத் தோர்க டம்மாற்
கூடிவந் தாடி விட்ட கொடுவினை விடுவதாக. (கO)

கங்கையா டாவு திங்கள் கடுக்கைசூழ் சடையோன் வாழும்
பொங்குமா கைலை யெய்திப் புனிதனை திருத்தாள் போற்றி
யங்கணா நாளு மெம்பா லாடினர் விட்ட பாவ
சங்கையா லணைந்தோ மீது தவிர்ப்பதற் கருடாவென்ன (கக)

ஆங்கது கேளா முன்ன மடைந்தவர்க் கெந்த நாளுந்
தாங்கருந் துயரந் தீர்க்குந் தயாபர னுதை லாலே
தேங்கமழ் கமல மன்ன திருவருள் பொழியும் வாக்காற்
பாங்கமர் நதிக டம்மைப் பரமனு நோக்கிச் சொல்வான். (கஉ)

வேறு.

தென்றி சைக்கடற் கரையிடஞ் சிறந்திடு கமலை
யொன்ற நற்பதி மறைசையென் றுளொன் றுள தன்பா
னின்றி சைத்தவர் கரிசற நிகழ்மணி கன்னி
யென்றி சைக்குமா தீர்த்தமு மெண்ணிலொன் றுளதால் (கங)

அத்தி ருக்குள மணைந்துநீ ரனைவரு மதன்பாற்
சித்தி கூர்சிவ ராத்திரி தினத்துநீ ராடிப்
பத்தி கொண்டதி லெம்மையும் பணிவிரே லுங்கண்
மெய்த்தி றம்புகும் வல்வினை யாவையும் விலக்கும். (கச)

ஆவ தன்றியு மதுதனி லரிபிர மாதி
தேவர் யாவருஞ் சிவநிசி நாடொறுஞ் சென்று
மேவ ரும்புன லாடியே மீளுவ ரின்றுந்
தாவ ரும்பெருந் தம்பதந் தவறிடா வண்ணம். (கரு)

ஆதலான்மணி கன்னியை யணுகுமென் றன்பா
லேக நாயக னேவிட விருநதி யாவு
மாக மார்சிவ தினந்தனில் வந்துவந் தாடித்
தோகை பாகனைப் பணிந்துதந் துரிசறுத் தனவால் (கசு)

இந்த மேன்மைகண் டன்றுதொட் டிருநதி யாவும்
வந்து வந்ததிற் சிவநிசி மாதினந் தோறுங்
கந்த மார்புனன் மூழ்கிடுங் கங்கைமா நதியோ
சிந்தை கூர்ந்ததி லாடிடுந் தினந்தொறு மணைந்து. (கஎ)

வேறு.

இனிதென திருமையு மீயுங் கங்கையே
யனுதின மிதிலனைந் தாடு மென்பரான்
மனதினு மொழிகொடு மதித்தி தென்றதன்
றனதுயர் பெருமையார் சாற்ற வல்லரே (கஅ)

உன்னிய வேள்விகள் யோக மீகையென்
றன்னிய வறங்களா லாவ தென்கொலித்
தன்னிகர் மறைவனந் தயங்கு மாமணி
கன்னியி லாடவே கருத லாகுமால். (கசு)

இதுதனி லாடிடா தெய்திக் கங்கைமா
நதிதனி லாடினு நலங்கொ டாதது
விதிமுறை படிந்ததின் மீளச் செல்வரேற்
கதிபெற விருமையுங் கங்கை நல்குமால் (உ0)

வேறு.

மன்னு மேன்மை மறைசையுண் மாமணி
கன்னி யாடியங் கல்லது காசியிற்
றுன்னு கங்கையிற் றோய்ந்தும் பயனிலை
யென்னு மிவ்வுரைக் கேது வியம்புவாம். (உக)

வேறு.

கந்த மார்மலை நாட்டின்முன் கவுணியர் மரபில்
வந்த தோர்திரி புராரியா மறையவ னொருவ
னந்த லாந்துறைக் கங்கைநீர் நனைவதற் கென்று
சிந்தை கூர்ந்தெழுந் துத்தர திசையினிற் செல்வான். (உஉ)

மாற்ற ருங்கொடு மலைகளும் வனங்களு நாடு
மேற்ற மாம்பெரு நதிகளும் யாவையுங் கடந்து
போற்ற ருஞ்செக நாதமும் போற்றியே கங்கை
யாற்றை நேரிடப் போம்வழி யதனிடை நடவே. (உங)

## வேறு.

ஆங்கொரு தையலா ளவனெ திர்ப்படப்
பாங்குட னிவனவட் பரிந்து நோக்கியே
தாங்கரு மித்தடந் தனித்து வந்ததே
தீங்குநீ யார்கொலெங் சேகு வாயென. (உ௪)

சொன்னவந் தணனையத் தோகை நோக்கியே
மன்னிய யமுனைநான் மறைசை மாமணி
கன்னியிற் சிவநிசி கண்டங் காடுதற்
குன்னியான் போவதென் றுரைத்து மீளவும். (உ௫)

அந்தணன் றனையுநீ யார்கொ லெவ்விடஞ்
சிந்தனை யாதுநீ செல்வ தெங்ஙனென்
றிந்தநல் வகையெலாம் யமுனை கூறிடப்
புந்திகொ டத்திரி புராரி கூறுவான். (உ௬)

## வேறு.

என்பெயர் திரிபு ராரி யிருபிறப் பாளன் யார்க்கும்
பொன்பொழிந் துலகங் காக்கும் புகழ்மலை நாட்டி னின்று
துன்பமெய்ப் பிறவி யோடத் தொலைவிலா முத்தி கூட
நன்புனற் கங்கை யாட நாடியிங் கணைந்தே னென்றான். (உ௭)

## வேறு.

என்று கூறிய யிவன்றனை யமுனையு நோக்கி
நன்று கங்கைநீ ராடவே நணுகுதி யாகின்
மன்ற லம்பொழின் மறைசையுண் மாமணி கன்னி
சென்று மூழ்கிமீண் டாடுதி யல்லது தீதாம். (உ௮)

அல்ல தென்மொழி மறுத்தி நீயகலிலக் கங்கை
யெல்லை கண்டிடா தூன்றனக் கிரங்கிடா தருளச்
சொல்லி லந்நதி தானுமே சுருதிகா னனத்திற்
செல்லு நன்மணி கன்னிநீர் தினந்தொறு மாட. (உகூ)

நீயு மாதலாற் றிரும்பியா னிகழ்த்துமத் தலத்துத்
தூய மாமணி கன்னியிற் றோய்ந்துபின் செல்கென்
றேய தோர்மொழி யமுனைநின் றிசைப்பவு மிசையா
தாயவன் கங்கை மீளவு மாடவென் றகன்றான். (௩௦)

நேய மொன்றியே யாங்கவ னொடுந்துலை போயுந்
தூய கங்கையுங் காசியுந் தோன்றவுங் காணான்
றேய முள்ளன யாவையுந் தேடியு முழன்று
மாய மென்றுள மருண்டொரு மரத்தடி யிருந்தான். (௩௧)

உன்னரும்பெருந் தூரநா மோடியு முழன்று
மன்ன கங்கைநீர் படிந்திலோ மாயினு மதுதான்
பின்ன ராமெனிற் காணவும் பெற்றிலோ முன்னு
மென்ன பாவமுஞ் செய்தன மெனவிட ருழந்தான். (௩௨)

இந்த வாறவ னெடிதுயிர்த் திரங்கியே யிசைப்ப
வந்த வேலையி லந்தரத் தசரீரி யாக
வந்து கங்கைமா நதியொரு வாக்கவன் கேட்பச்
சிந்தை கூர்ந்துமின் றிசைத்தது திருவரு ளதனால். (௩௩)

என்ன தாகிய சகோதரி யெடுத்துனக் கிசைத்த
வன்ன வாய்மைமீ மறுப்பவந் தனைந்தநித் துயர
முன்ன மீண்டுபோய் மணிகன்னி முதுபுன லாடிப்
பின்னை வாவெனைக் காணவும் பெறவுமீ வேண்டில். (௩௪)

செல்ல லிங்கெவ ராயினுந் தென்மணி கன்னி
மல்ல லம்புன லாடியே மறைசையம் பதியா
மெல்லை தங்கிய விறைவனை யேத்திமுன் னியமத்
தல்ல றீங்குவந் தாடியு மாவதொன் றில்லை. (௩௫)

வருந்தி நண்பக லொடொரு மறைவனத் தன்னீர்
பொருந்தி யாடியே பவமெலாம் போக்குவ னென்றங்
கருந்த வந்தருங் கங்கைநின் றரற்றிய வதுகேட்
டிருந்த வந்தண னதிசயித் தெழுந்துள மகிழ்ந்தான். (௩௬)

திரும்பி யாங்கவ னெல்லையிற் றென்றிசை நோக்கித்
தரும்பெ ருந்தவ மறைவனஞ் சார்ந்தநி னியமத்
தரும்பு தோய்மணி கன்னிதோய்ந் தாரண நதியும்
விரும்பி யாடியே யாடினன் விளம்புகோ டியினும். (௩௭)

அன்பு கொண்டரு மறைவனத் தரனையும் வணங்கிப்
பின்பு முத்தர திக்கையே பெயர்ந்தவன் செல்லா
முன்பு கங்கையு மெதிர்நிற்ப மூழ்கியப் போது
மென்பெ ரும்புனன் மணிகன்னி மேன்மையை வியந்தான். (௩௮)

இத்து கைத்தன வாதலா லிருமணி கன்னி
யொத்த ரும்புன லாடியே யுத்தர கங்கை
யத்த கும்புன லாடவெ தாக்கமென் றறையின்
முத்தர் மூழ்கின ரிதிலென மொழிவது புகழோ. (௩௯)

கலிய தின்வலி நீக்கியே பவக்கடல் கடப்ப
வலிய தாரக மாகுமிம் மாமணி கன்னி
யொலித ரும்புனன் மூழ்கிடா துலகினின் மாந்தர்
மெலிவர் கொல்லருந் துயரினால் வீணினி லந்தோ. (௪௦)

## வேறு.

ஆடியுங் கங்கையி லருத வல்வினைக்
காடமா மறைசையங் கன்னி யாடவே
யோடிடு மன்றென வுரைக்கு மாலிதிற்
றேடிய வொருகதை செப்பு வாமரோ. (சக)

முன்னுயர் தென்றிசை மூயங்கு கவுசிக
னென்னுமோ ரந்தண னியம்பு கங்கைமா
நன்னதி யாடியே நலங்கொள் காவடி
தன்னுட னருநெறி தனித்து மீளுவான். (சஉ)

துணையரா ருமமே சொல்வ தன்றிவே
றணைபவ ரிலாதவிந் தாட விக்கொடுந்
திணையத னடுவவன் செல்லும் போழ்தினி
னிளைகொடு மறலித னியக்க மென்னவே. (சஙு)

தாங்கரு மிரண்டுவே தாள மோடிவந்
தீங்கிவ னமக்கிரை யிற்றைக் காமென
நீங்கரும் பசியினு னில்லு நில்லெனு
வாங்கவன் றனைவளைந் தடர வெண்ணியே. (சச)

கிட்டின வாங்கவன் கிளர்ந்த வஞ்செழுத்
தொட்டிய வாய்மைகேட் டொதுங்கி யோடியே
விட்டகன் றிவன்றனை வியந்து பேய்களு
மெட்டிநின் றுரைசில வியம்பு கின்றன. (சரு)

## வேறு.

ஒத்த வுணர்ந்ததும் யாங்களின் றன்றனை வதைப்ப
வத்த ருமமே நவின்றுநீ யணைதலா லுன்பால்
மெத்த வும்பயந் தகன்றன மேலவ யாங்க
ளித்த லத்துமுன் கொன்றபே ரெண்ணிலோ வனேக (சசு)

நின்னை யொத்தமெய்த் தவர்களாய் நேர்பட வொருவர்
முன்ன மிவ்வழிக் கண்டிலங் கண்டுமே தறிவோய்
யின்ன மிப்படி யாங்கணின் றிடருறு வண்ணை
நன்ன லத்தினை யருள்புக நல்கென நவின்ற (சஎ)

வேறு.

அவ்வுரை கேட்டவ னரற்று பேய்களைச்
செவ்விதி னோக்கியே திரும்பி யார்கொனீ
ரெவ்விட மிவ்வுட லெடுப்ப முன்செயும்
வெவ்வினை யாதுநீர் விளம்பு மின்னென. (சஅ)

அன்னதி லொருபசா சவனை நோக்கியான்
கன்னலஞ் சாறுபாய் காம ரூபமா
மென்னுமம் மண்டலத் திருந்த வந்தணன்
பன்னருங் குடும்பமும் பரிப்ப தாகவே. (சகூ)

ஆங்கிய விறந்தவே ளாள மன்னர்பால்
வாங்கருந் தானநான் வாங்கி யும்விலைக்
கோங்கரு மறைகளை யோது வித்துமித்
தீங்குசெய் யலகையாய்த் திறம்ப டைத்தனன். (ரு0)

உன்றனை, தருளலா லுய்வ தின்றினி
யென்றலு மற்றுநின் றிட்ட பேயுமான்
கன்றுகள் சாரலங் கலிங்க தேசியா
னன்றியு மறைக்குலத் ததிக னந்தணை. (ருக)

நாடரு மறையெலா நாளு நாடியுங்
கூடருங் காமனோய் கொண்டு தந்தைதாய்
தேடரும் பொருளெலாஞ் செலவ ழித்தும்யான்
வீடரும் பொருள்சில வேண்டி மீளவும், (ருஉ)

பற்றறு மூப்பினிற் பசிவ ருத்திடப்
பெற்றவர் தம்மையும் பேணி டாதுவிட்
டுற்றன னிரப்பர்போ லுயர்ந்த காசியின்
மற்றொரு மறையவன் மனையி டத்துயான். (௫௩)

சென்றிருந் தில்லறஞ் செறிந்த வன்றுயி
லன்றறிந் தவன்றலை யறைந்தொர் கல்லினாற்
கொன்றவன் மனையுளிற் குறுகிச் செம்பொனங்
கொன்றறக் கொண்டுமீண் டோடும் வேளையில். (௫௪)

பண்டெட லுறுவினைப் பற்றி நிற்றலாற்
கண்டனை நகரிகா வலர்க ளன்றிராக்
கொண்டறப் புடைத்துவெங் கோபத் தாற்றலை
துண்டம தாயிடத் துணித்து வீழ்த்தினர். (௫௫)

அந்தணப் பழிமுத லாக லானுமெய்ப்
புந்திகொள் களவினாற் பொன்னை வவ்வியும்
வந்திடு கொடியதுன் மரணத் தாலுமா
யிந்தமெய்ப் பழியுட லெனக்கு மாயதே. (௫௬)

ஆயினு மினியுன தருள்கொ டன்றியிப்
பேயுடல் போம்வகை பெயர்ந்து காண்கிலம்
நேயவெவ் வுயிரினு நினக்க றம்புகழ்
தாயெனப் பிறர்துயர் தவிர்த்த லாமென. (௫௭)

கூண்டிய வலகைகள் கூற வேறுவே
றுண்டகை கேட்டன வையை நோக்கியே
யீண்டெற வுங்களுக் கீண்டு யான்செய
வேண்டுவ கேளென விளம்பி டாமுனம். (௫௮)

அலகைக டொழுதுட னவனை நோக்கியே
யுலகினி லெங்களுக் குதவி செய்தியேல்
விலகியிவ் வழியினு மீண்டு மெம்முட
னிலகிய வடதிசை யெய்திக் கங்கையில். (ருகூ)

சென்றதின் மூழ்கிநீ சிந்தித் தெங்களுக்
கென்றுவண் கையினி லிடுக டன்களு
மொன்றற முடித்தியா லுனது செய்கையா
லன்றுறுங் கதியெமக் ககலு மிவ்வுடல். (சாo)

என்னநின் றலகைக ளிசைக்க மீண்டவை
தன்னுட னந்தணன் றானுங் கங்கைசென்
றுன்னரும் புனல்படிந் துகந்தி வைக்கெனப்
பன்னருங் கயையுறு பலியு மூட்டினன். (சாக)

வேறு.

அப்பொழு தங்கண் சென்ற வலகைக ளிரண்டின் முன்னஞ்
செப்பிய காம ரூப தேசிக்குக் கங்கை யாலே
யொப்பரு முத்தி யாய தோதருங் கலிங்க தேச
வைப்பினுக் கங்கண் முத்தி வந்தில மாபா வத்தால். (சாஉ)

மனந்துய ரற்ற காம ரூபியு மறையோன் றன்னை
யெனக்குநீ செய்த நன்றிக் கியான்செயுங் கைம்மா றென்னே
யுனக்கிரு மைக்கு மின்ப முறுகவென் றுரைத்து விண்மேற்
கனத்தநீள் விமான மேறிக் கைலையைச் சார்ந்த தன்றே. (சாங)

நின்றவந் தணனை முத்தி நேர்படா வலகை நோக்கி
யன்றியான் கங்கா தீரத் தந்தணன் றன்னைச் சென்று
கொன்றிடு பாவ மென்னுங் கொடுமையுங் கூடி யன்றோ
வின்றெனக் கிங்கு மூத்தி யெய்திய தில்லை மேலோய். (சாச)

### வேறு.

இனியென துறுபிணிக் கிரங்கித் தென்றிசை
தனின்மறை வனமெனுந் தலமுண் டாங்கதின்
மனிதரை யமரராய் வருக்க வின்னருள்
கனிபுன லணிமணி கன்னி யொன்றுளை. (சுரு)

போயதி லணிந்துதென் புலத்த வர்க்கென
வாயது மதன்கரை யாற்று விக்கிலிப்
பேயத னுருவலாற் பெரும்ப வங்கள்போய்
மாயமின் முத்தியும் வருமெ னக்கெனு. (சுசு)

கேட்டிடு முடனவன் கிளர்ந்தெ ழுந்துசொற்
றீட்டிய வலகையி னேடு தென்னிடை
நாட்டணி கடந்துபோய் நன்மை சான்மறைக்
காட்டணி வளர்மணி கன்னி யெய்தினன். (சுஎ)

அதுதனி லன்புடை யலகைக் காகவே
விதிமுறை மூழ்கியே வேண்டித் தென்புல
முதிர்கட னதன்கரை முடித்து வேதமா
நதியொடு கோடியு நணுகி யாடினன். (சுஅ)

ஈண்டிய வலகையி னிடர றும்படி
வேண்டிநன் மறைகண்முன் வேண்டு மீசனை
காண்டகு மாமணி கன்னி மேன்மையான்
மூண்டரு ளலகையு முத்தி பெற்றதால். (சுகூ)

ஆனபின் னதுவுமுன் னனைய ரூபமாய்
வானிடை நின்றுமா தவனை வாழ்த்தியே
மேனகை யவர்தொழ விமான மேறியே
யூனமில் சிவபத முகந்த ணைந்ததால். (எ0)

சானவி யாடியுந் தவிர்த்தி டாவினை
யானதீங் கொருவனுக் காக மற்றவன்
றானடைந் தாடவுந் தவிர்ந்த தாதலின்
வானுயர் பெருமையார் மதிக்க வல்லரே. (எக)

இக்குளக் கரையினி லேதொன் றீயினு
மக்கதி வினவிலொன் றனந்த மாயிடுந்
தக்கதென் புலத்தவர் சடங்கென் றென்றுசெய்
விக்கினு முகாந்தமாய் விளங்கு மப்பயன். (எஉ)

வீடரும் பொருளெலாம் விளைக்கு மித்தட
நாடினர் புகழ்ந்தவர் நயந்து கண்டவர்
தேடரும் பவமெலாந் தொலைப்ப ரென்னிலீ
தாடினர் பயனையா ரறிய வல்லரே. (எங)

வேறு.

நீல வெள்விடை விடுத்தவர் நிமலனைக் கொண்டங்
கூல மீத்தனு ரோமமொன் றினுக்கவர் குலத்துட்
சால முன்னிறந் தோருடன் பெயதந் தன்னின்
மேலு மின்பமுற் றிடுவரோன் டாயிரம் விளம்பில். (எச)

வேறு.

ஓதாமணி கன்னிகையின் பெருமை யுரைப்போ
ராதரவி னுடனினை ரும்பொருளு மக்கேபோர்
பூதலமே லிக்கமிகு போகமெத நுகர்ந்தித்
திதகல நின்றபரா முத்திநெறி சேர்வர். (எரு)

மணிகன்னிகைச் சருக்க முற்றிற்று.

ஆகச் சருக்கம் ௬-க்குத் திருவிருத்தம் ௩௧௧.

---

வைத்தவத் தடத்து மூழ்கி மணிகன்னி யாடி நாளு
முத்தம முவரிக் கீதென் றோதிய காலந் தோறுஞ்
சத்திய நதியி லாடிச் சைவவை திகமா மாற்று
லத்தனைப் போற்றி நாளு மருச்சனை புரிந்த வன்றே. (௬)

நானில மனைத்தி னுக்கு நற்றவஞ் சரியை யாதி
தானவின் மறைக டாமே சரீரியாய் வந்து பூசை
மானிலத் தியற்று மென்றான் மற்றதி னடைவிங் கெம்மாற்
றானிதென் றளவு பற்றிச் சாற்றிடுந் தகைமைத் தேயோ (எ)

அருமறை யனைத்து மிவ்வா றருந்தவம் புரியு நாளின்
மருவியங் கொருநா ளுற்ற மார்கழி வெதிபா தத்தி
னிரவிதன் னுதய காலத் தெழுந்துவா ரிதியி லாடி
விரவியைங் கரனைப் போற்றி வேண்டுகோள் செய்யும் போழ்தில். (அ)

அருவமா யிருந்த சோதி யருவுரு வதனி னின்று
முருவமா யெழுந்து முன்னின் றுயர்மறை தன்னை நோக்கி
மருவியங் கிவ்வா றெம்மை வழிபடு மன்பர்க் கெம்மா
லொருவர மேனு மீதற் கரிதென வுரைக்கற் பாற்றோ. (௯)

சத்திய கிரியா மீதிற் றவம்புரி வோர்க்கு நாமே
சத்திய மாகித் தோன்றித் தானருள் கொடுத்த லாலே
சத்திய கிரியென் றிந்தத் தலந்தனக் குகந்த நாமஞ்
சத்திய மாக வாய தென்றரன் சாற்றி நின்றான். (௧௦)

அரனருள் செய்த மாற்ற மாரணங் கேளா முன்னந்
தரைமிசை வீழ்ந்தெ ழுந்து தாங்கரு மகிழ்ச்சி பொங்கக்
கரமலர் சிரமே லேறக் கண்மலர் மாரி தூவப்
பரவினின் றயன்மால் காணாப் பரம்பொரு டன்னை நோக்கி. (௧௧)

வேறு.

நெற்றிவிழி யாயுனது நீடருளி னாலின்
றுற்றதுயர் யாவையுமொ ழிந்ததிக வாழ்வும்
பெற்றனமெ மக்கரிய பேறிவைக ளல்லான்
மற்றுமுத வத்தருவ ரங்களுள மன்றே. (கஉ)

பூமகளி றந்துலகு பொன்றியிடு காலத்
தோமமுதல் வேழ்விகளொ ழிந்திடினு முன்பால்
யாமகலி டாவகையி ருந்தலர்கொ டென்றுஞ்
சேமவழி பாடுகொடு சேவைசெயு மாறும். (கங)

வேறுமுல கத்தயன்வி திக்குமதி காரந்
தோறுமிரு கம்பறவை தாறுசெடி யூர்வ
வீறில்வடி வம்பலவெ டுத்துநரர் காணு
வாறுபுக ழித்தலம ருங்குறையு மாறும். (கச)

ஓதரிய வித்தலமொ டுண்மைநன திக்கு
மேதமற வின்றுமுத லெங்கள்பெய ராலே
வேதநதி வேதவன மென்றுரைவி ளங்க
மூவுலக மெங்கணுமொ ழிந்தியலு மாறும் (கரு)

பேதமற வின்றுனது பேருமுயர் வேத
நாதனென நின்றிடவு நங்கடட மாமிவ்
வேதவமிர் தந்தனில்வி ரும்பிநனை வோரும்
பாதகம கற்றியருள் பற்றியிடு மாறும். (கசு)

மார்கழியி னின்னருள்வ ழங்குவெதி பாதத்
தார்கவிகொள் வேதிநதி யாதிமடு வொன்றி
நீர்கழுவி வைகறையி னின்னடிப ணிந்தோ
ரார்கொலெனி னுஞ்சிவம தெய்தியிடு மாறும். (கஎ)

இந்தவர மொன்றறவெ மக்கருள்செ யென்றே
வந்தனைசெய் தாரணம்வ ணங்கவிறை யோனு
மந்தவர மியாவையும ளித்தருளி மேலு
முந்தமறை யைப்பெரிய முன்னவனு நோக்கி. (கஅ)

வேறு.

அருந்திரு மறைகா ணீவி ரந்தணர் முகத்தெங் நாளு
மிருந்திடக் கடவீர் நும்மை யேத்தியா றங்கத் தோடும்
பொருந்திட வோதி னோரும் புகுவர்நம் பதத்தை யென்றும்
பரிந்தருள் கொடுத்து முன்போற் பரமனுங் கரந்து நின்றான். (கக)

ஆதலா லன்று தொட்டு வேதநா யகனென் றிந்த
நாதனார் தமக்கும் வேத வனமென நாடு மந்த
மாதலந் தனக்கு முண்மை நதியெனும் வாரி திக்கு
வேதநன் னதிய தென்றும் விளம்புவ நாம நாளும். (உ0)

நாடினர்க் கருள்கூர் வேத நாதன்முன் புணரி பற்றி
யோடிநின் றதிற்கா லீரைந் தியோசனை பரந்து நீண்டு
வீடினை யுகப்போர்க் கென்றும் வீடதாம் வேத தீர்த்தத்
தாடினர் சிவன் முத்த ராவதற் கைய மின்றே. (உக)

புனைந்திடு முலகம் யாவும் புகன்றிடு வேத தீர்த்த
நினைந்தவர் புகழ்ந்தோர் கண்டோர் நேர்படப் பரிசித் தோரு
மனைந்தபா தகங்க ளேனு மகற்றுவ ரென்று லங்கீர்
நனைந்தவர் முத்த ரென்று நவில்வது புதுமைத் தேயோ (உஉ)

மற்றுமந் நதியி லாட வல்லவர் யாவ ரேனுந்
துற்றிடு செல்வ மாயு டொல்புக ழிளமை யாவும்
பெற்றமெஞ் ஞானம் பெற்றுப் பின்புமெய்ப் பிறப்பி றப்பு
மற்றொருக் காலு மீளா வானந்த வீடு சேர்வார். (உ௩)

## வேறு.

இருந்து வேதமா நதியெனுந் தீர்த்தமீ தாடி
லருந்தி வாயுவை யநேகரு ளருந்தவ மியற்றப்
பொருந்து ஞானமும் பொருந்திடு மென்றுநூல் புகலி
லிருந்த வந்தரு மிந்நதி மேன்மையா ரிசைப்பார் (உச)

அன்ப ராகிவந் திந்நதி யாடினர் முத்த
ரென்ப ராலிதின் மூழ்கிமின் றித்தலத் திறைவன்
றன்ப தாம்புயந் தன்னையும் பணிவரேற் றரையில்
வன்ப ராயினும் பெறுங்கதி மதிக்குமா றுளதோ. (உரு)

சால வந்நதி யாடியே சதுமறை வணங்கு
நீல கண்டனை வணங்கினர் நினைந்தன பெற்று
மேலு முத்தரே யாவர்கள் விரிக்கிலோ மிதுமுக்
காலு முண்மையென் றுலகர்முன் கையெடுத் துரைப்பாம். (உசா)

## வேறு.

பயின்று வேதம் பகர்ந்திடு மேன்மைதான்
முயன்று சேடன் மொழிந்து முடிவுரு
தியன்ற வாறநங் கீசனுக் கன்றிமா
லயன்ற னுலு மறிவரி தாருமால் (உஎ)

தீர்த்த மேன்மையைச் செப்பு மறைகளே
யேத்த மேனிகொண் டிங்குவந் திந்நதி
நீத்த மாடி நிறைகலிநீ த்ததா
லார்த்த மேன்மை யறியுந் தகையதோ. (உஅ)

பன்னு தன்பெரும் பாவ மகற்றநற்
பொன்னி யாறு புகுந்திதி லாடியே
தன்னி தானந் தருந்தின மென்பரா
லிந்த திக்கிணை யார்கொ லியம்புவார். (உகூ)

வேறு.

போற்றுமிந் நதிக்குத் தெய்வ பூடண மென்று முன்னஞ்
சாற்றரு நாம மொன்று தானுமுண் டதற்குந் நாம
மேற்றதற் கேது வேதென் றியம்பிடி னுலகின் முன்றோட்
டோற்றிய மனுவில் வைவச் சுதமனு நடத்து நாளில். (௫0)

இந்தமா நதியி லாடற் கென்றுவா னுலகி னின்று
வந்துநா ரதன்முன் வேத மாநதி யாடி யீசன்
கொந்துலாம் பதங்கள் வீணை கொண்டிசை கோடா தேத்திச்
சிந்தைகூர்ந் தொருகா லந்தத் திருவெல்லை வைகும் போதில் (௫௧)

அப்பொழு தங்க ணேர்பா டாகவே யிலங்கை வேந்த
னொப்புற வணைந்து யாவு முணர்ந்தநா ரதனை நோக்கித்
தப்பரு மமர லோகந் தனைவிட்டுத் தனியே போந்திங்
கிப்பெரு வனத்தில் வந்த தென்னென விறைஞ்சி நின்று. (௫௨)

முதிருமெய் யன்பாற் கேட்ப முனிவனு மவனை நோக்கிப்
பதிகளி லனந்த மேன்மை படைத்தநற் றீர்த்தந் தம்மு
ளதிகமென் றறிந்தி ருக்கு மாடிய யிந்த வேத
நதியெனும் புணரி யாட நாடியிங் கணைந்தோ நாமும். (௫௩)

இந்நதி தன்னி லீச னுமையுட னெந்த நாளுஞ்
சந்நித னாகி வைகு நரைதிரை தானு நீங்கு
மந்நதி யாடில் வேண்டுஞ் செல்வமு மளிக்கு மன்றி
மன்னுமிப் பிறவி நீக்கி முத்தியும் வழங்கு மென்றான். (௫௪)

என்றவம் முனியை நோக்கி யிராவணன் யாவி னுக்கு
மொன்றிடும் புகலா யெல்லா முதவுகா ரணமாய் வேதா
வன்றிமா யனுக்கு மெட்டா வரனுமை யுடனத் தீர்த்த
நின்றலங் கரிப்ப னென்று மென்பது நிகழ்த்து மென்ன. (௫௫)

ஆங்கவ னுரைத்த போதி லருமுனி யவனை நோக்கி
யீங்கிதற் கேது மூன்றாட் பருப்பதத் திறைவன் றன்னை
யோங்கரு மாணி மாவென் றொருவன்மா பூசை செய்து
நீங்கரு மன்பால் வேண்ட நிமலனு மவனை நோக்கி. (௩௯)

இன்றுநீ யெமக்கு வீந்த பூசைகண் டின்ப முற்றே
முன்றனுக் கென்பால் வேண்ட வுளதெனி லுரைப்பா யென்ன
வன்றவ னரனை நோக்கி யடியனேற் காக நாளு
நன்றமர் மறைசை வேத நதியினி லுமையா ளோடும். (௩௭)

ஆன்றவைங் கரன்க ணங்க ளறுமுக னமரர் சூழத்
தோன்றிநின் றிந்த வேத நதியினிற் றோய்ந்தோர்க் கெல்லா
மேன்றமா பாவ நீக்கிப் பிணியறுத் திளமை நல்கித்
தான்றரு முத்தி மேலுஞ் சார்வதற் கருடா வென்றான். (௩௮)

என்னுமிம் மாணி மாவுக் கிறைவனு முடன்பா டுந்தாங்
கந்நதிக் கணியாய்த் தோன்றி யன்றுதொட் டிருத்த லாலே
பொன்னுல கோருந் தெய்வ பூடண மென்ப ரின்று
மன்னுமந் நதியி லண்ணல் மாதொடு வடிவங் காட்டும். (௩௯)

பணிமல ரணங்கி றோடா பரணமா யிருத்த லாலே
புனிதநன் னதியுந் தெய்வ பூடண மென்றே யோங்குந்
தனிதரு மின்ப முத்தி தன்னையு மளிக்கு மென்று
முனியுரை செய்யக் கேட்டு முகமலர்ந் தரக்கர் கோனும். (௪0)

சென்றுடன் பணிந்து வேத தீர்த்தமீ தாடி யேறி
நின்றவ ளினையும் போதி னிகழ்த்திய படியே யீச
னன்றவன் றனக்குக் காட்சி யாங்கருள் செய்யக் கண்டு
துன்று மெய் புளகங் கொள்ளத் தொழுததி சயித்துப் போற்றி. (௪௧)

இருபது கரமு முச்சி யேறிட விருதா ளாட
விருபது விழியுங் கூட விறைவன்மே லேரு நிற்ப
வொருபது சிரமுந் தாழ வுரைதரு மறைக டங்கு
மொருபது முகங்க ளாலுந் துதித்தன னுவந்து நின்று. (௬௨)

வேண்டிய வரங்கள் பெற்று விடைகொண்டா னிலங்கை வேந்த
மீண்டுமிப் படிப்ப டிந்தோ ரெவர்க்குநன் னதியி லேமின்
றூண்டகை யருளை நல்கி யதையலங் கரித்த லாலே
பூண்டபே ரதற்குத் தெய்வ பூடண மான தன்றே. (௬௩)

இன்னமிந் நதிக்கோர் மேன்மை யியம்புமே னகைதா னென்பாண்
முன்னுறப் பிறப்பின் மானின் முதுகுலப் பிணையா யிந்த
நன்னிலத் துதித்த வேத நதியதன் றீர நண்ணிப்
புன்னையங் கானச் சூழல் பொருந்துறத் திரியும் போதில். (௬௪)

சித்திரைப் பரணி தன்னிற் சிறுபிறை மூன்றும் பக்க
மொத்தெழு மிரவி வாரத் துச்சியம் பொழுதோர் வேட
னத்திறத் துழையைக் கண்டாங் கடர்ந்திடக் கலங்கி யோடிச்
சத்திய நதியில்வீழ்ந்து சரத்துட னிறந்த தன்றே. (௬௫)

மானதன் றுடல்வி டாமுன் மாநதி வீழ்ந்த தன்ற
னுனகம் பலகொ ணீரி லமிழ்ந்திய வறத்தா லங்கண்
டானகண் டிதமெஞ் ஞானந் தனையடைந் தரம்பை மாரின்
மேனகை யென்னு மந்த மேன்மையும் பெற்ற தன்றே, (௬௬)

அருந்தவ முனிவர் கேண்மி னுதலா லன்று மானுக்
கிருந்தவப் பயன ளித்த விந்தமா யோகந் தன்னிற்
பொருந்தியந் நதிநீ ராடிற் பொருவில்பா தகரே யேனுந்
திருந்தரு மின்ப வீடு சேர்வதற் கைய மின்றே. (௬௭)

### வேறு.

வென்ற டெங்களைக் கொல்கிநீர் வீழ்ந்ததே பரமா
யொன்ற றிந்திடா மிருசமு மும்பர்நா டடைந்த
தென்று நூல்பல வியம்புமா லின்னதி யின்பாற்
சென்று மூழ்கினர் பெறுங்கதி தெரிக்குமா றுளதோ. (௪௮)

### வேறு.

இருந்தர னருளிந் லீவ னென்பராற்
பொருந்தியக் கடல்படி புனிதர் மீண்டுமெய்
வருந்திய பிறவியில் வந்து தாய்முலை
யருந்தில ரென்பதற் கறைதல் வேண்டுமோ. (௪௯)

ஈனமி லிதன்கரை யிடத்தி யன்றவா
தானமென் றிரணியந் தரணி தான்முத
லானதொான் றீயினு மநந்த மாயவர்
வானமர் சிவபத மருவி வாழ்வரால். (௫0)

இறந்தவர்க் குறுகட னிந்ந திக்கரைப்
புறந்தனி னியன்றிடு பொருள்கொண் டாற்றினுஞ்
சிறந்தவர் வானினுந் தேவர் போற்றிட
வறந்தரு சிவபத மடைந்து வாழ்வரால். (௫௧)

### வேறு.

அருகு தாகத் தருந்தித் திலோத்தமை
மிருக சாபமும் விட்டன ளென்பரா
லுருகு மன்புகொண் டோதுமிவ் வோதநீர்
பருகு மேன்மை பகர்தற் கெளியதோ. (௫௨)

### வேறு.

பேசி லின்னமந் நதியதன் பெருமைமுன் னுலகிற்
றூசு மாரனென் பானொரு நரர்பதி துன்ப
மாசை யால்வரு மென்றர சாட்சியை யகற்றித்
தேச மெங்கணுந் திரிந்தன னீர்த்தயாத் திரையில். (௫௩)

கங்கை யாதிநற் றீர்த்தமீ தாடியே காசி
யங்க ணன்றன தாலய முதற்பணிந் தணைந்தாந்
தங்குலத் திறந் தோர்க்குறு கடன்களுந் தகவீந்
தெங்க ணுந்தொழு தணைந்தனன் பருப்பதத் திறையே. (ருச)

பருப்ப தத்துறை யிறைவனைப் பணிந்துதன் னுளத்தில்
விருப்ப மாஞ்சில சித்திகள் வேண்டியங் கிருந்து
மருப்ப யின்றமஞ் சனமலர் நிவேதன வகைகொண்
டொருப்ப டுங்கருத் துடனரிச் சனைபுரிந் துகந்தான். (ருரு)

பரவ நின்றவன் வள்ளலும் பரிந்தவன் றனக்குப்
பொருளு டன்குணம் பொழுதெனப் புகன்றிடும் யாவும்
விரவி யொன்றையொன் றுகவே விடுத்திடுஞ் சித்தி
வரவ ளித்தனன் மன்னவ னெண்ணிய வண்ணம் (ருசா)

இன்ன வாறவன் சித்திக ளத்தலத் தெய்திப்
பின்னர் தென்றிசை யாலயம் பிறவுமேற் பணிந்து
பொன்னி யந்திரு நாட்டணி புகுந்தநி சயித்துத்
தொன்ன லந்தரு மாங்குள சிவாலயந் தொழுதான். (ருஎ)

சென்ற வாற்றிலவ் வரசனுந் தென்கடற் கோடி
யென்று ரைக்குமா மறைவசையு ளெய்தியத் தேவர்
மன்ற மாதியா மந்நகர் வளமெலா நோக்கி
நின்ற போதினிற் கண்டன னிகமவா ரிறையை. (ருஅ)

கண்ட போததி லுமையுடன் கண்ணுத லுறு
மண்ட ரோடெதிர் தோன்றிநின் றொல்லையி லகலக்
கொண்டு ளத்திலீ தென்கொலென் றதிசயங் கொள்ளா
விண்டு கண்களா னந்தநீர் விடுப்பமெய் விதிர்த்தான். (ருக)

நாடி யத்திரு வுருவினை நாரணன் முதலோர்
தேட ரும்பொருள் வெளிப்படச் செய்தவிக் கடலின்
கூட ரும்பெரு மேன்மையா தென்றுளங் குறித்து
மூடி வெவ்விழி நின்றனன் பரவச மூளா. (௬0)

அன்ன வேலையிற் புலத்திய னெதிர்பட வவனை
மன்ன வண்பணிந் தாங்குற வயங்குமப் புதுமை
தன்னை யொன்ற றச் சாற்றியித் தலத்தினில் விசிட்ட
மின்ன வாறென விளம்புகென் றிவனவற் கேட்டான். (௬க)

சங்கை யுற்றவம் மன்னனைத் தாபத ரேக்கி
யெங்க ளும்புகழ் மறைவன மென்னுநீ டமரர்
தங்கு மன்றமாந் தலமிது தன்னிருல் வேதம்
பொங்கு வாணியாம் வேதநன் னதியதிப் புணரி. (௬உ)

இந்த வாரிதி யிடத்தினி லிரவிகோ லொன்று
மந்த நாளினு மாரலும் வியாகமு மணுகி
வந்து சேர்நிறை யுவாவினும் வள்ளல்சந் நிதானந்
தந்தி டுங்கிரி மாதுடன் யாவர்க டமக்கும். (௬௩)

வேறு.

முன்பய னமரர் வேண்ட மொழிந்தவிம் முத்தி நத்து
மென்பணி யிறைவன் றனேசந்நித னுகி யீதி
லன்புட னடைந்தோர்க் கெல்லாம் பேரின்ப மளிக்கு மன்றி
நன்புனல் படிந்தோர்க் கெந்த நாளினும் வடிவங் காட்டும். (௬௪)

ஆதலா லுரைத்த வேத நதியினி லாடி னோர்கள்
பாதகம் யாவு நீங்கிப் பரபத மடைவ ரீதற்
கேதுவொன் றிசைப்பன் முன்னோ ரந்தண னிரும்பா வத்தாற்
பூதல மிகழ மிக்க பிரமராக் கதனுய்ப் போந்தான். (௬௫)

பிரமராக் கதனாய் நின்று பெரும்பழி விளைக்கு மந்த
வொருவன்மா தவனு மிக்க வொருவனை வணங்கி நின்று
மருவுமிப் பழியை நீக்கி யான்கதி மன்னு மாறென்
னிருவினை யின்ப துன்பம் யாதுகொ லியம்பு கென்றான் (சூசு)

## வேறு.

என்றவன் வேண்டிட விசைந்த வந்தண
னன்றெனா வவன்றனை நயந்து நோக்கியே
நின்றுநீ யென்னுட னினைந்து கேட்டதற்
கொன்றற வுணர்ந்துனக் குரைப்பன் கேளெனா: (சூஎ)

புண்ணிய மடைவுறப் புரிவ தற்கரி
தெண்ணியங் கதிர்சில வெளிதி யம்புவ
னண்ணுபல் லுயிரினு மிரக்க முடியே
பண்ணுவ தறமெனப் பகரு மாமறை. (சூஅ)

## வேறு.

மோன மாவதிங் குண்மையை மொழிதன்மே லோர்க்குத்
தான ருத்திமிக் கிலகறத் தன்னதா மன்ன
மான வுண்டியே நத்தநின் றருந்துவ தாகும்
ஞான மாவது பொறுமையா நற்குண மனுகல் (சூகூ)

வீதி லாதவீண் வாய்மையை யிகழ்வதே யியம
நீதி நூல்வழி நிற்பதே நியமமா் நியமம்
போது தப்பற வேளையிற் புரிவதே விரத
மோத ருச்சனை பரர்க்குப காரமே வுதவல். (எ0)

அன்றி நற்றுதி யாவது புறஞ்சொலா தறைத
லொன்றை யுங்கொலா தொழிவது தவந்தற வுரைக்கிற்
றன்ற னில்லவ ளல்லர்பா லாசையைத் தவிர்தல்
நன்று தீதென விரண்டற நன்புல னடக்கல், (எக)

இணைய றும்பெரி யோருட னிணக்கமா தனமாந்
தணவி லாதவுட் டுய்மையே தகவுறுஞ் சமாதி
யுணர்வின் மாயையி னுருத்தெரிந் தறுவதே யோக
மணுவு டன்பர னியக்கமங் கறிவதே ஞானம். (எ உ)

பேற ளிக்குமிந் நல்வினை பேசினூல் வழிக்கு
மாறு பட்டதே செய்வது வல்வினை யதுதா
னூற ருஞ்சின மோகநீ டாசையால் வருமிக்
கூறுமுக்குண மகற்றிலே கூடுநன் முத்தி. (எ௩)

## வேறு.

ஞான மேதரு முத்தியம் முத்தியாற் பேரின்ப நணுகு
மான தற்குநல் லறங்களே யேதுவா மஃதுணர்ந் துரைக்கில்
வானி னுந்தரை யிடத்தினு மின்பமே வழங்கிடு மற்ற
வீன மாகிய வல்வினை யிருமையுந் துன்பமே யீயும். (எ௪)

## வேறு

என்று ரைத்தலு மீளவு மிராக்கத னிசைப்பா
னென்று நும்முரை யிருமையு முதவிடும் வினைக்கீ
டொன்று மின்பதுன் பங்களே தருவதெவ் விடமீ
தன்றி முத்தியா லடைவதென் னெனவவ னறைவான். (எ௫)

## வேறு

பண்ணு நல்வினை புண்ணியந் தீவினை யாவது பாவம்
புண்ணி யந்தருந் துறக்கமே பாவமோ புகுத்திடு நரக
மெண்ணி லிந்திர பதமுதற் சுவர்க்கமு மொன்பதா மின்ப
நண்ணி டந்துய ரவுரவ மாதியா நரகநா லேழாம். (எ௬)

வேறு

அருந்தி யின்பதுன் பங்களாங் கறைந்தவக் கால
மிருந்து மீண்டபின் னிம்பர்வந் திருவினைக் கீடாய்ப்
பொருந்து மெய்யில்வந் தின்பதுன் பங்களும் புகுவர்
திரும்ப விம்பரி லின்பதுன் பேதெனத் தெரிக்கில் (எஎ)

மாந லந்தரு மனைவிநன் மைந்தர்கண் மற்று
மான நற்புவி நற்பொரு ளனைத்தையு முடைத்தா
யீன முற்றிடு மூலச்சலு மிரணமும் பிணியுந்
தான கற்றலே சகத்துறு மின்பமாய்ச் சாற்றும். (எஅ)

குற்ற முற்றிடு மனைவியுங் கொடுமைசெய் மகவு
மற்று மீனமாம் புவிபொருள் வரும்பகை பிரியா
துற்ற நோயுட னிரணமு மூலச்சலு முடைத்தாய்
நிற்ற லேயிகத் துறுந்துய ராகநூ னிகழ்த்தும். (எகூ)

துன்னு மிவ்விக பரத்துறு மின்பதுன் பங்க
டன்னை யென்னினு மனித்தமவ் விருவினை தவிர்ந்தான்
மன்னு முத்தியு முத்தியாற் பேரின்ப மருவு
மென்ன மற்றவன் றனையெதி ரிராக்கத னுரைப்பான். (அ0)

ஆத்தி ரத்திலும் பரர்க்குப காரமே யியற்றி
லத்த வத்திறற் போசமு முத்தியு மாமென்
றுத்த ரைதனி ராதலா லுரைத்தவிப் பவம்போய்
முத்த னும்வகை யெனக்கினி மொழியுமி னென்றான். (அக)

இந்த வாறுரை செய்திடு மிராக்கதன் றனையவ்
வந்த ணன்பரிந் ததற்குவீ டடைவதற் குபாயஞ்
சிந்தை கொண்டதி சயித்தறச் செய்யவா னந்த
முந்த நீர்விழி புளகமெய் யரும்பநின் றுரைத்தான். (அஉ)

மறைசை யம்பதி வைகிய வேதவா ரிதியின்
றுறைப டிந்துநீ யெழுந்ததிற் றேன்றிநின் றெளிரு
மிறைவ னைப்பணிந் திடிற்பவ மியாவையு நீக்கி
யறையு மிவ்வுட லகற்றிமா முத்தியு மடைவை. (அங)

என்னு மூதுரை யவனுள மேறுத னிமித்த
முன்ன நீடுகோ லாகலன் முதற்சிலர் முத்தி
மன்னி யத்தலத் துய்ந்தவை பவமெலா முரைப்பத்
தன்னு ளம்மகிழ்ந் திராக்கத னவனடி தாழ்ந்தான். (அச)

வந்து வேதவா ரிதியெனும் வாணிதீர்த் தத்தின்
மூந்த மூழ்குமுன் னவ்வுடல் மோசன மாகி
யிந்து சேகர னுமையுட னுங்கெழ விறைஞ்சிச்
சிந்தை கூர்ந்தவன் றுனுநற் சிவத்தினை யடைந்தான். (அரு)

பேசி வின்னன வாதியாம் பெருமைபெற் றனவென்
றுசில் வேதவா ரிதியத னடைவெலாந் தொகுத்துச்
சூசு மாரனுக் கம்முனி சொற்றிடக் கேளா
நேச முற்றுட னரசனு நெடிதவற் பணிந்தான். (அசா)

வேத வாரிதி சென்றுடன் மூழ்கியவ் வேந்து
மீதெ ழாமுன முன்புபோல் விமலனு மதன்பால்
மாது வேலவ னிடம்புக வானவ ருடனப்
போது தோன்றினன் கண்டனன் கொண்டனன் புளகம். (அஎ)

அதிச யித்தவ னுணர்ந்த வாரிநின் றுடிப்
புதி யமஞ்சன மலர்நிவே தனங்கொடு பூசை
விதியி னுற்புரிந் தாங்குறை விமலனைப் போற்றிக்
கதித ரும்பர மானந்த வாரிதி கண்டான். (அஅ)

## வேறு.

புகலுவர் சூசு மார பூசித மென்று நாம
மகவிடத் ததனு லந்த வாரிதிக் குதவு மன்றி
யிகலிலா வறிவு மங்க ணுடினற் செய்த லாலே
சகலரும் வாணி தீர்த்த மென்றுமே சாற்ற நிற்பர். (அகூ)

மற்றினி யுரைப்ப தென்னோ வள்ளலா பரண மாக
வுற்றுநின் றருளே யங்க ணுதவலா விதனுக் கொப்பாய்ச்
சொற்றருந் தீர்த்த மின்று லுலகினிற் சுருதி தோயப்
பெற்றவத் தீர்த்த மேன்மை யார்கொலோ பேச வல்லார். (கூ0)

## வேறு.

மாறி லாமறை நதியதன் வைபந் தெரிந்து
வேறு வேறினி யியம்பியென் சுரர்குரு முதலோர்
நூறு காலமிங் கோதினு நுவலொணு தென்னிற்
கூறு கேனென வறிவிலா யான்கொலோ குறிப்பேன். (கூக)

## வேறு.

பகர்ந்தவிந் நதியின் மேன்மை பரமரா சியமாம் பார்க்கி
லகந்தவாக் கின்றி யார்க்கு முரைப்பரி தாகுமீது
சகந்தனிற் படிப்போர் கேட்போர் தரும்பொருள் சாற்றுவோர்க்கு
மிகந்தனில் ஞான முண்டா மிதற்கினி யைய மின்றே. (கூஉ)

வேதநதிச்சருக்கம் முற்றிற்று.

ஆகச் சருக்கம் ரு-க்குத் திருவிருத்தம் சூ0ரு.

# கோடிதீர்த்தச்சருக்கம்.



நாடி வேத நதியதன் வைபவந்
தேடி யாங்கண்ட வாசில செப்பின
மாடி னோர்க ளரும்பவ நீக்கிடுங்
கோடி தீர்த்தத்தின் மேன்மைகள் கூறுவாம். (க)

## வேறு.

திரைகடற் றனது தென்கீழ்க் கோடியாய்ச் செப்ப லானுந்
தரைபட ராதி ராமன் றனுக்கோடி யாத லானு
முரைகட லாடி னன்மை யொருகோடி யாத லானுங்
குரைகடற் கோடி தீர்த்தம் பெறும்பெயர் கோடியாமால். (உ)

ஞாலத்தில் யாவ ரேனு நாரண னடைத்த சேது
மூலத்தி லாத லாயன் மூட்டிய வில்லாற் கீறுங்
கூலத்தி னிறைந்த வாரிக் குழுவினி லாத லெந்தக்
காலத்தின் மூழ்கி லேனுங் கருதரு முத்தி சேர்வார். (ங)

அணுகுநல் வெதீபா தங்க ளயனசங் கிராந்தி மற்று
முணர்வுறு வுடுவி ரண்டா முதையங்க ளுபரா கங்க
ளிணருறு முவாவி ரண்டென் றிசைத்தாற் றினங்கள் யாவும்
புணரியி லாடற் காய புண்ணிய கால மாமால். (ச)

வீறுறு மன்பா லெந்த வேளையி லாடி னோருந்
தேறரு முத்தி சார்வ ரென்றிடிற் றிரைக டற்காய்க்
கூறிய காலத் தொன்று கூடுமேற் கோடி யாடி
யேறிய மாந்தர் பேறிங் கெடுத்தெவ ரிசைக்க வல்லார். (ரு)

நண்ணிமுன் கடலா டற்கு நாடிமுன் வரைந்த சொன்ன
புண்ணிய காலத் தல்லான் மற்றொரு புணரி யாட
வெண்ணினுந் தீங்குண் டாகு மியம்புமிக் கோடி யின்றன்
கண்ணுற மூழ்கு தற்கோர் காலகற் பனைக ளின்றே. (௬)

பொய்க்கடன் மூழ்கி மாபா தகங்களைப் புரிந்தோ ரேனு
மெய்க்கடன் மூழ்கி னோரை வேதத்தை யிகழ்ந்தோ ரேனுங்
கைக்கடன் மூழ்கு மாதி ராகவன் கண்ட கோடி
யிக்கடன் மூழ்கி னோர்க ளிரும்பவக் கடலின் மூழ்கார். (எ)

வேறு.

நினைய வாயினும் புகழினுங் காண்கினு நிகழ்த்தி
வினைய தாயுள தகலுமால் விளம்புமிக் கோடி
நனையு மாந்தர்கள் பெறுங்கதி நாடியே நம்மா
லினைய வாறிதென் றியம்புதற் குலகிலிங் கெளிதோ. (அ)

வேறு.

தந்தையைத் தாயை நிந்தை சாற்றின ரேனும் போற்று
மெந்தையைக் குருவை நிந்தித் திகழ்ந்தவ ரேனுந் தம்பால்
வந்தணைந் தோரை நம்பி னோர்களை வதைத்தோ ரேனு
மிந்தநற் கோடி யாடில் யாவரு முத்த ராவார். (௯)

வேறு.

ஓடி யையிரண் டாண்டிருந் துத்தர கங்கை
யாடு மப்பய னாடிலீங் கொருதினத் தாமே
நாடி நாளுமிக் கோடியி னனையவர் மேன்மை
தேடி யேயெடுத் திஃதெனச் சிறியனோ புகல்வேன். (௧௦)

உரைசெ யிக்கடற் கோடியி லொருபொழு தாடிற்
பரிந டத்திய யாகமே முதற்பல யாகம்
புரியு மப்பயன் றன்னினுங் கோடிபுண் ணியங்கள்
விரியு மற்றெனிற் கோடியின் மேன்மையார் விரிப்பார். (௧௧)

அண்ட ருக்கர னதிகனா மாறுபோ லவனி
யெண்டி சைக்குள தீர்த்தங்கள் யாவினு மேன்மை
கொண்ட நற்கடற் கோடியி னாடினோன் றிவலை
பண்டு தாக்கிட விருவர்முன் பெற்றமை பகர்வாம். (கஉ)

வேறு.

நலங்களி லதிக நலம்புனை செந்தமிழ் நாட்டிற்
குலங்கிளர் வணிகர் குலத்துமுன் குபேரனா மென்னத்
துலங்கிய செல்வத் தொகுதியிற் றோன்றின னொருவ
னிலங்கிய பேரா யுலகிலே மாங்கத னென்பான். (கங)

வேறு.

திருந்து தன் றொழிலினாற் கோடி செம்பொருள்
வருந்தியுந் தேடியவ் வணிக னாடொறும்
பொருந்திநல் லறநெறி புரிந்தி டாமலே
யருந்தினன் மனைவியோ டளவில் போகமே. (கச)

ஈனமு துதவிய விளமை யானது
போனபி னறநெறி புகுந்தி லோமரன்
றனெனு நினைவொரு சற்றி லோமென
ஊனமில் வணிகனு முளத்தி லெண்ணினான். (கரு)

ஒன்றிய செல்வமு மொக்கு மென்னெனி
னன்றிதோர் நிலைமையாய் நாடி நம்மைநேர்
நின்றிடு கொடியவர் நீணி லத்திலை
யென்றவ னளவற விதய நொந்தனன், (கசு)

மிருந்துய ரொடுமவன் மேல்க திக்கொரு
தருந்துணை தேடுவான் றன்முன் றேடிடப்
புகுந்தன முளதெலாம் பொருந்து யாதியாய்ப்
பகுந்தன னரனடி பகுந்து கொள்ளவே. (கஎ)

அத்தன மதிலொரு கூற றஞ்செய
வைத்தொரு பாதியை மைந்தர் கட்களித்
தித்திறல் வணிகனு மில்லம் யாவையும்
புத்திரர் பரமென வைத்துப் போயினான். (கஅ)

மறந்துநன் னெறிவழா மனைவி தன்னுடன்
சிறந்திடு கமலைநன் னகரிற் சென்றவ
னறந்தனி லிதனிலொன் றனந்த மென்றறிந்
துறுந்தரு மங்களாங் குதவி நின்றனன். (க௯)

வேறு

வழிதொறுஞ் சாலை தண்ணீர் பந்தர்கள் வந்தோர்க் கெல்லா
மொழிவுறு வன்ன சாலை யுதவிநந் தனவ னங்க
ளழிவுறு தியற்றி நாளு மணைந்துற நின்ற பாசப்
பழியுறு வாறு கோயிற் றிருப்பணி பலவுஞ் செய்தான். (உ0)

இப்படிச் சிறிது கால மியம்புறு வணிக னுந்தன்
கைப்பொரு ளுள்ள சேரக் கதிதரு தருமத் தாக்கி
யப்பெரு மனைவி தன்னோ டருமர ணத்தாற் கூட
வொப்பரு முத்தி பெற்றா னுயர்தல மரணத் தாலே. (உக)

வேறு.

சென்ற பின்னவர் புதல்வ ரானசு தேவ னும்வசு தேவனு
மென்று பேர்பெறு மிருவர் தாமுமி யாவ ரும்பழி பேசவே
நன்ற லாநெறி பலவி யற்றியு நாடொ றும்பொது மகளிர்பா
லென்று மாதர வாகி யேமது வுண்டு கூடியு வந்தனர். (உஉ)

இவ்வ ணம்மக பாத கம்புரி யிருவ ரும்பொரு ளுளதெலா
முய்வ ணந்தெரி யாத மூடர்க ளோடு கூடி யொருங்குற
மெய்வ ணந்தெரி யாத நாடகர் வீணர் காயகர் வேசியர்
கைவ ணங்கிடு முன்கொ டுத்தொரு காசி லாம லழித்தனர். (உ௩)

நாளி லேபொருள் வீணி னிப்படி நாச மானபி னிருவருங்
கோளி லாநக ரங்க ளிற்பொருள் கொள்ளை கொள்வது கண்டபின்
வாளி னுலக காருந மன்னனு மண்ட லங்கள் புறம்விட
வாளி லாதிருண் மூடி யாளி யடர்ந்த கான மடைந்தனர். (உச)

வாட வெம்பசி யாலு ளங்கண் மயங்கி வாணிப முற்றியே
நாடொ றுமிரு கங்க ளைக்கொடு நஞ்ச ணைந்திடு வெஞ்சரத்
தோட வோட வடர்ந்து நாளுமவ் வூன ருந்தி வருந்தியே
வேடர் போலவர் கான கந்தொறு மேவி யேதிரி வேளையில். (உரு)

வேறு.

பெருங்கொலை முன்னவன் பிரிந்த வாற்றிலே
நெருங்கிய வராகமீ னிரைவ தைத்திட
வருங்கரு நாகமற் றவனைத் தீண்டிட
வொருங்குற விருவரு முடலொ ழிந்தனர். (உசா)

உடல்விடு மிருவர்த முயிரை யும்மெம
படருற நணுகினீள் பாசம் வீசியே
தடமணி கதிர்விடு தரும பீடிகை
யிடமுறு மறலிமு னெய்து வித்தனர். (உஎ)

மறலியு மிவர்வினை வழியை யெண்ணியே
யறவினின் மூழ்கமுன் னவனை வீழ்த்தியே
விறல்வசு தேவனை விரும்பி நோக்கியே
திறலம ருலகைநீ செல்க வென்றனன். (உஅ)

என்றிடு மறலியை யிளைய னேக்கியே
யொன்றிநின் றிருவரு முடன்பி றந்தந
மின்றதும் புரிந்தது நேர தாமுயிர்
கொன்றுவன் கொலையினுங் கூட மாய்ந்தனம். (உகூ)

தொன்னெறி யிருவருந் தொடர்ச்சி யொக்குமேன்
முன்னவன் றனையறன் மூழ்க விட்டெனைப்
பொன்னுல கணுகெனப் புகன்ற வாறிதிங்
கென்னினி யருள்செயன் றிறைஞ்சி நின்றனன் (௯0)

கூறிய வணிகனைக் கோதி லந்தக
னூறிய கருணைகொண் டுகந்து நோக்கிமுன்
வீறிய பிறவியில் வியந்து னக்குவந்
தேறிய புண்ணிய மியம்பக் கேளெனா. (௯௧)

விரிந்திடு மடவியின் மிருகந் தேடியே
திரிந்திடு நாளினிற் சென்ற வாற்றிலே
பிரிந்தொரு வேளைநீ பெரிய மால்கரை
புரிந்திடுங் கோடியின் புறமணைந்தனை. (௯௨)

அணைந்திடு மளவினி லன்று கோடியி
லிணைந்திடு தையமை யினில நேகராய்ப்
புணர்ந்தெழு புணரியம் புனலி லாடியே
மணந்தரு மதன்கரை மருங்கு நின்றனர். (௯௩)

அந்தணன் னலத்தவ ராடை வீழ்த்திடச்
சிந்திடு திவலையுன் சிரத்திற் பட்டிட
முந்திய வல்வினை முழுது நீங்கியே
வந்ததன் றுனக்குயர் வாழ்வ தென்றனன். (௯௪)

எண்ணிய கோடியி லியங்கு மாருத
நண்ணிய கோடியோ சனைகொள் ஞாலமும்
பண்ணிய கோடிமா பாவ நீங்கியே
புண்ணிய கோடியைப் பொருந்தி நிற்குமால். (௯௫)

பேற்றினை முன்னவன் றனக்குப் பேசினீ
யாற்றுநல் லறம்பதி ஞறி லேயொரு
கூற்றினை யுதவினுங் கூட வானமின்
றேற்றுவ னவனையு மெனவி யம்பினன். (கூகு)

வேறு.

வருந்திறன் மறவி கூற வசுதேவன் கேளா முன்ன
மருந்துநல் லறந்தி லோர்கூ றளித்திடச் சுதேவன் முனு
மிருந்திற னரக நீங்கி யெழுந்திட விருவர் தாமும்
பொருந்திய விமானத் தேறிப் புகுந்தனர் பொருவில் வானம். (கூஎ)

துங்கவன் கோடி தன்பாற் றோய்ந்தவ ராடை நின்றும்
பொங்கிய திவலை தோய்ந்த புண்ணியன் மட்டு மல்லா
லங்கவன் வேண்டி ரேற்கு மமருல களித்த தென்று
லிங்கிதன் பெருமை நம்மா லினைத்தென வியம்பற் பாற்றோ. (கூஅ)

வேறு.

கோடி தீர்த்தத்தின் மேன்மைகள் கூறுமிச் சருக்க
நாடி யோதினர் கேட்பவ ருகப்பவர் நாளு
நீடு செல்வமு மருந்திமே னிமலனோ டொன்றாய்
வீடு சார்வரீ துண்மையாம் விளம்பின்மே தினிமேல். (கூகு)

கோடிதீர்த்தச் சருக்க முற்றும்.

ஆகச் சருக்கம் கூ-க்குத் திருவிருத்தம் சசச.

## மணவாளச் சருக்கம்.



விண்ணொடு மண்ணோ ரேத்துங் கோடிதீர்த் தத்தின் மேன்மை
யெண்ணரி தேனு மெம்மா லியன்றவா றியம்பி னோமே
னண்ணியத் தலத்தன் னீச னன்மண வாளக் கோலங்
கண்ணுற வகத்தி யற்குக் காட்டிய வாறு சொல்வாம். (க)

விந்தமா மலைக்கு முன்னாள் விளம்புமா மேரு வக்கு
மிந்தமா நிலத்தின் மேலோன் யானென யான்றா னென்ன
வந்ததோர் கலக மேன்மேல் வளர்ந்திட வொன்றி னுக்கொன்
றந்தவே லையினி னேர்பா டாகநா ரதனங் குற்றான். (உ)

அப்பொழு தவனை நோக்கி யந்தமா மலையி ரண்டு
மிப்புவி தனிலி யாங்க ளிருவரிற் பெரியர் யாரென்
றொப்பிநீ யுரைப்பா யென்ன வுலகிலீ தறியார் யார்கொல்
செப்பின்மா மேரு வன்றோ மேலென்றான் சிகரிக் கெல்லாம். (௩)

வேறு.

என்று ரைத்திட முனிவ னப்பொழு திகலி னின்றிடு விந்தமு
நன்று ரைத்தனை யினியென் மேன்மையை நாடு நீயென வாடியக்
குன்றி னைப்பட வுயரு மாறு குறித்தெ ழுந்து மறைத்துவான் [ம்.
றென்றி சைப்புவி யடைய மேல்கொடு திசைதி சைப்புற முளதெலா

புடைப ரந்து வளைந்து கொண்டெழு பூத லங்க ளியாவையு
மடைய மோதி நெருக்கி யெங்கணு மண்ட கோளகை முட்டியே
தடைப டும்படி வான னுடர்க டாமு மிக்க சராசர
மிடரு றும்படி யறவி மிர்ந்துட னிகலி னின்று வளர்ந்ததால். (௪)

வளர விப்படி விந்த மால்வரை மாறி வானிரு கதிருநீ
டொளிரி யற்படு முதைய மத்த மனங்க ளற்றிட யிருளினாற்
றளரு முற்று மியங்கி டாவகை தான டங்கிட வாயுவுங்
கிளரு நித்திய நியம வேள்விகள் கெடலு மித்திற முலகெலாம். (சு)

ஆன போதினி லவனி யிற்பய னற்ற தேவர்க ளனைவரும்
வான நாடனொ டொன்று கூடி மதித்து ளங்கள் வெதுப்புறு
வீன மாமொரு விந்த மோவல கிந்த வாறிடர் செய்வதென்
றூன மானவை தீர நான்முக னுடன ணைந்துரை செய்தனர். (எ)

விதியு மவ்வுரை கேட்ட போது விரைந்து விண்ணவ ரோடுசென்
றெதிரி லாதமு குந்த னுக்கஃ திசைப்ப வந்தமு குந்தனு
மதியி னாலய னமர ரோடு மதித்தி தற்கினி யீசனே
கதிய லாதிலை யென்ற ணைந்தனர் கைலை மால்வரை யனைவரும். (அ)

வேறு.

தரையினி லியற்றிய தவங்க ளின்பய
னிரையொரு வடிவமாய் நின்ற தென்னவே
யுரைதர வரனரு ளோங்கு வெள்ளிமால்
வரையதி னுளசில வளமை கூறுவாம். (கூ)

செயல்பெறு நீற்றொளி சிவணும் வெண்மையிற்
புயலெனுங் கரியுரி போர்த்த சாயலான்
மயிலியல் கந்தரம் வைத்த கொள்கையாற்
கயிலையு மதிலுறை கடவுள் போலுமால். (க0)

தாங்கரும் பரமனைத் தாங்கு மால்வரை
யாங்கத னருகுசூ ழசல கோடிகள்
பாங்குற வொருசுமை பரிப்ப வன்றனக்
கோங்கிநின் றுதவிசெய் வோரை யொக்குமால். (கக)

இறையடி பணியவந் திழிந்த தேவர்க
ணிறையதன் பாங்கரி னிறுத்த தேர்பல
பொறைபடு பொருள்கொளப் போயி ழிந்தொரு
துறைபடு மரக்கலத் தொகுதி போலுமால். (கஉ)

மணவிடை வெயில்விடு மகுட மாயிரம்
புனைதரு கயிலையின் பொலிவு சங்கரன்
றனைமுடி பரிப்பவெத் தலமுந் தாங்குவ
தெனவெழு சேடன தெழிலை யொக்குமால். (கங)

மழைவளர் கைலையம் மருங்கில் விஞ்சையர்
முழைதொறும் பண்ணொலி முழக்கும் போதய
லிழையுற வதனிடை யெடுத்த வோசையாற்
கழையுமப் பண்ணிசை காட்டல் போலுமால். (கச)

காரகி லிருசுடர்க் காந்தத் தம்மலைச்
சாரலில் வெயினிலாத் தாக்க விண்டதி
லேருநன் கனலமு திரண்டு மங்கணன்
வீரமுங் கருணையும் விளைத்தல் போலுமால். (கரு)

வேறு.

தெற்றி யண்டர் தினந்துதி செய்தவை
பற்று வேறு பயிற்றுவ கிள்ளைகள்
மற்று மாடர மங்கையர்க் கங்கெதிர்
சுற்றி நின்றுடன் ரேகையு மாடுமால். (கசா)

கொழுந்தென வரனைமேற் கொண்ட வம்மலை
வழிந்ததெள் ளருவியான் மணிமு கிழ்ப்பிறை
லழுந்தெதி ரொலியினு லன்பர் கண்ணினீர்
பொழிந்துமெய் விதிர்த்தருள் புகழ்தல் போலுமால். (கஎ)

## வேறு.

தருத ழற்கணீள் கயங்களத் தாழ்வரை சூழ்ந்து
குருதி கக்கிடச் சினத்துவெங் கோட்டினுன் மேன்மேற்
பொருது நிற்பன வரனுரை பொருப்பென வுளத்திற்
கருதி முற்பகை முடிப்பது காட்டுத னிகர்க்கும். (கஅ)

முன்ற யங்கிய மின்னொளு முழைமுழை தோறு
நின்றெ றூழ்ந்தட னிமிர்ந்திட நின்றகே சரிக
டன்ற னேர்பெற விறைவனைத் தாங்குதற் கெனவக்
குன்ற மீன்றிட வருமலைக் குருளைகள் போலும். (ககூ)

மற்று மாங்குறை சவரிகண் மயிரிடை கோத்துச்
சுற்றி யீர்த்திடு முலவைகள் சொன்மலை யரசுக்
கெற்று சாய்மரை யிரட்டுரு தேகுவா ரளகம்
பற்றி மீளெனும் வேளைதேர் பரிசன நிகர்க்கும். (உ0)

அடிப ணிந்திட வணைந்திடு மமரர்பொன் மகுடப்
பொடிது தைந்தெழ வெள்ளிபோய்ப் பொன்மலை யாகு
முடிப ணிந்தெழு பணீந்திரர் முடிதொறுஞ் சிந்தி
யடிப டுந்திரண் மணிகளான் மாணிக்க மலையாம். (உக)

இந்த லம்புனை கயிலைசென் றெய்திய விமையோர்
பன்ன ரும்பெருங் கடவுளாம் பரன்றிருக் கோயின்
முன்னி லங்கிடு கோபுர முதற்றிருக் கோயின்
றன்னி னின்றுடன் றுதித்தனர் தாணுவை நோக்கி (உஉ)

## வேறு

மண்ணொடு விண்ணின் முர்ப்ப வானவ ரெடுத்த வோதை
கண்ணுதல் கோயில் வாயிற் காவல னந்தி கேளாத்
துண்ணென வெழுந்து முக்கட் சோதியைத் தொழுமவ்வேளை
யெண்ணிடா தரற்று மாறிங் கென்னென வெகுண்டு சென்று, (உங)

கடைத்தலை வாயி னின்ற கரியவன் முதலோர் தம்மைப்
புடைத்தனன் றுரந்து கையிற் பொற்பிரம் பதனு லப்போ
துடைத்துடல் பின்பா ராமற் சுரர்கணை மோடக் கண்டு
படைத்தவன் றானு மாலும் பதைபதைத் தொதுங்கி நின்றார். (உச)

மெல்லவந் தணைந்து நந்தி மெய்ப்பதம் போற்றா நின்ற
வெல்லையி லவர்பா னந்தி யிரங்கிநீ ரஞ்ச வேண்டா
மொல்லைநின் றிடுமி னங்க ளுத்தம னிமைய மீன்ற
மல்லலங் குழலா டன்னை வதுவைசெய் திடுவ தாக. (உரு)

இன்றெழு முனிவர் தம்மோ டேகாந்த மியம்பும் வேளை
சென்றதங் கறிந்து மீள்வன் றிரும்புறு மளவு நீங்க
ளொன்றுமிங் குரையா டாம லொதுங்கிநின் றிடுவீ ரென்று
குன்றமர் வில்லி வைகுங் கோயிலி னுட்பு குந்தான். (உசு)

சாலவங் கவன்செ லாமுன் றாணுவுக் குமையா டன்னைக்
கோலநன் மணஞ்செய் தற்குக் கூறவென் றிமவான் பக்கல்
ஞாலமெண் வசிட்ட ராதி நற்றவ ரெழுவர் தாமு
மேலவ னேவ லாலே விடைகொடு புறம்போந் தார்கள். (உஎ)

போனவின் வேளை கண்டு புனிதனை வணங்கி நந்தி
வானவ ருடனே கூடி மாலய னணைந்தா ரென்று
தானவின் றருளேக் கத்தின் றருகுறிப் பறிந்து மீளா
வானபோ தருளிப் பாடென் றறைந்தன ரமரர் கேட்ப. (உஅ)

அங்கவன் மாற்றங் கேட்ட வரியயன் முதலாம் வானோர்
மங்குலி னோசை கேட்ட மயிற்குல மென்ன வுள்ளம்
பொங்கிடக் கடிது சென்று புக்கர னடிவ ணங்கி
யிங்கித மொழியான் மெல்ல விரங்கிநின் றேத்த லுற்றார். (உகூ)

அங்கண போற்றி நாளு மடியவர்க் கெளியாய் போற்றி
திங்கணால் மகுட போற்றி சிவசிவ போற்றி நாக
கங்கண போற்றி யாண்ட கைலையங் கடவுள் போற்றி
யெங்கண யகனே போற்றி யீசனே போற்றி போற்றி. (௩௦)

என்றவர் துதியா முன்ன மிறையுமா தவன்முன் னாக
நின்றவா ளவரை நோக்கி நீங்கருங் கருணை வாக்கா
னன் றுமுன் வினவி மாய னான்முகன் றனைவி யந்து
மன்றலந் துளப மாலே வந்ததிங் கென்னோ வென்ன. (௩௧)

மற்றது கேளா முன்ன மாலுமே வளைந்து கையாற்
பற்றிவாய் புதைத்து நின்று பணிந்துவிண் ணப்பஞ் செய்வா
னற்றுணை யாகி யாண்ட நாதநீ யிருக்க வெங்கட்
குற்றிடு துயர மின்றே யெனினுமொன் றின்று கேண்மோ. (௩௨)

மாநில முழுதும் விந்த மால்வரை வளைந்து கொண்டு
தானற வுயர்ந்த துன்பந் தனைநினக் கறிக்கை செய்ய
வானவர் கூடி யின்று வந்தனர் மற்றி தற்குன்
றனைபே ரருளே யல்லா லாரினி யடக்க வல்லார். (௩௩)

வேறு.

என்று மாதவ னுரைசெய விறைவனு மமரர்க்
கன்று தானுடன் பாடுசெய் தருள்வதற் கிரங்கா
நின்ற வேளையி லிமயமா னெடுவரை யிடத்துக்
கொன்றை வேணியர் புரிமணக் கோலமே காண்பான். (௩௪)

சித்தர் சாரணர் முனிவர்க டேவர்கின் னரர்கள்
பத்தர் யோகிக டானவர் பசாசுகள் கணங்கள்
வித்தி யாதர ரியக்கர்கள் விரிசுடர் மற்று
மெத்தி சைக்குளா ரனைவரு மீண்டிவந் தணைந்தார். (௩௫)

ஓரி டத்தில்வந் தனைவரு முறைதலா லுவரி
நீர முற்றிடு மரக்கல நிகரெண வவனி
பார முற்றற வொருபுடை படிந்திடத் தென்பாற்
சேர வப்பொழு துயர்ந்தது திசைப்புற வெவர்க்கும். (௫௬)

அண்ட மிப்படி மாறுபா டாகுமப் புதுமை
கண்ட மெய்த்தவர் சிலர்மிகக் கலங்கியு ணடுக்கங்
கொண்டு மெய்விதிர்த் தஞ்சலி கூப்பியே யோடிப்
பண்டு முப்புர மெரித்தருள் பரனடி பணிந்தார். (௫௭)

ஆதியே யெமை யாண்டரு ளபயநல் கென்றென்
றோதி மாதவர் முறையிடு மோசையைக் கேளா
மாது பாகனு முனிவர்தந் துயரமு மதித்துத்
தீதில் வானவர் புகன்றதுந் திருவுளத் தடைத்து. (௫௮)

சகத்தி னுக்கிடர் தவிர்ப்பதற் றயைபுரிந் தருளி
நகத்தி னுக்குமுன் னுதியா நந்தியை நோக்கி
மிகத்த வம்புரி முனிவரின் மேலவ னென்று
மகத்தி யன்றனை யொல்லையி லழையிவ ணென்றான். (௫௯)

ஓடி நந்தியுங் குறுமுனிக் குடனரு ளருளிப்
பாடி யம்பவந் தருமுனி பரனடி பணிந்து
தேடி யிங்கெனை யழைத்ததென் றேவனே யடியே
னாடி யின்றுசெய் பணிவிடை யாதென நவின்றான். (௬0)

என்றி சைத்திடு முனிவனை யிறைவனு நோக்கி
நன்றி சைத்துல குக்கற நல்குப கார
மொன்று கூறுவ மீண்டுநீ கேண்மிக வுயர்ந்த
தென்றி சைத்தரை முன்புபோற் றிருத்துக சென்று. (௬௧)

செல்வி லன்றியு மவ்வழித் தேவர்சொல் விந்தத்
தல்ல நீருநின் றனுல கடர்ந்தவா தாவி
வெல்லு வில்வல னென்பவர் மேதையும் வீயு
மெல்லை யில்புக ழுனக்குறு முலகிட ரெய்தா. (சஉ)

அன்றி நீசெலா திருந்திடி லவனியு மிடையே
யின்று கோத்திடு முகாந்தநீ ரென்னவொன் றறவே
பொன்று மாதிலா வுலகிடர் போக்குவ தன்றோ
நன்ற தாங்கடி தேகென வுதனு நவின்றான். (சஙூ)

வேறு.

இறையவ னருள விவ்வா றிறைஞ்சிமா முனிவன்சொல்வான்
குறைவறு கருணைக் குன்றே குறித்திடு மயன்மா லாதி
முறையிடு மமரர் கட்கு முனிவர்க்கு முடியா விந்தப்
பொறைபடு துயரம் யாறோ போக்குவ னஃது மல்லால். (சச)

பண்ணம ரிமைய மீன்ற பாவையை மணஞ்செய் கோல
நண்ணிநின் றிறைஞ்சு கைக்கு நற்றவர் தமக்கு முன்னே
யெண்ணருந் தவங்கள் செய்தே னில்லைகொ லெனினு மிவ்வா
றண்ணலே நின்று லேவ வருந்தவஞ் செய்தே னென்றான். (சரு)

சாற்றியிவ் வாறு நின்ற தமிழ்முனி தன்னை யீசன்
றேற்றியே யொன்றி னுக்குஞ் சிந்தைநீ மலைய வேண்டா
மேற்றநங் கருணை நின்பா லிருக்கவுன் றனக்க டங்கா
தாற்றிடும் பொருள்வே றுண்டோ வவனியி லரியதாக. (சசூ)

நாவல வுனக்கீ தன்றி நம்மணக் கோலங் காண்டற்
காவலு முண்டேல் விந்த மடக்கிவா தாவி யோடுந்
தாவுவில் வலனு மென்பான் றன்னையும் வென்று தென்பாற்
பூவலை யங்க ளோக்கப் பொருந்துமுன் போலச் செய்தால். (சஎ)

கோதையை மணஞ்செய் கின்ற கோலமு முனக்குக் காட்ட
வேதமுன் னிறைஞ்சுந் தென்பால் வேதகா னனத்தி னூடும்
போதுவங் கண்டுன் னலைப் பூமியு முய்யு மந்தத்
தீதறு தலமு மன்று தென்கயி லாய மாகும். (சஅ)

ஆதலாற் கடிது நீபோ யவனியின் றுயர்த விர்த்துக்
கோதிலா மறைக்கா டெய்திக் கோடியின் வடபா லாக
மாதுலாந் தலத்தின் றென்பால் வைகியஞ் செழுத்து மோதிக்
காதலா லிருப்பா யென்று கண்ணுதல் விடைகொ டுத்தான். (சகூ)

வேறு.

கண்டு டன்விடை கொண்டபின் கரியவன் முதலா
மண்டர் மெய்த்தவ ரழிதுய ரற்றிட வருநஞ்
சுண்டு கப்பவர் தமதரு ளொன்றுமே துணையாக்
கொண்டு தென்றிசை போந்தனன் கும்பமா முனியும். (ருo)

சென்றி டும்வழி நாப்பணச் சேணுயர் விந்தக்
குன்றெ திர்ப்படத் தடைபடு கும்பமா முனியு
நன்றெ மக்குநீ வழிவிடு நடந்திடத் தென்பா
லென்றி சைக்கவு மிசைந்திடா திசைக்குமக் கிரியும். (ருக)

கனத்தமேருவோ டெனக்கமுக் கலகமா யினவா
லுனக்கு யான்வழி விடேனென வுரைப்பமா தவனு
மெனக்குநீ விடிற் றென்றிசை யிலங்குமா தீர்த்தந்
தனக்கு ளாடியே மீளுவன் சடுதியீங் கென்றான். (ருஉ)

இத்தி றத்துரை செய்யவு மிசைந்தில தப்போ
மெய்த்த வக்குறு முனிவனும் வெகுண்டுதன் மகிமா
சித்தி யின்வடி வெடுத்தனன் சென்னிமீ தொருகை
வைத்த டக்கினன் பாதலத் தாழவம் மலையை. (ருகூ)

சொல்லி லிவ்வகை யாவருந் தொடரொணு வெற்பை
நில்லெ னுவொரு குறுமுனி நிறுத்தின னென்று
மெல்லை யில்லிவ னியற்றிய விருந்தவந் தனையோ
வல்ல தங்கர னருளிய வருளையோ புகழ்வோம். (ருச)

ஆவ தன்றியு மம்முனி யகல்வழி புகுவா
தாவி வில்வல னென்பவர் தம்மையு மடர்ந்து
தேவர் மானிடர் வியப்புறத் தென்றிசை நடந்து
போவ தன்முன மொத்ததப்பூ தல முன்போல். (ருரு)

இன்ன வாறுல குற்றிடு மிடரெலா மகற்றிப்
பன்ன ருந்தமிழ் முனிவனும் பகர்ந்தமா மறைசை
தன்னி லெய்திமுத் தீர்த்தங்க டன்னினு மூழ்கி
முன்ன மாதவன் றொழுவரு முதலையும் பணிந்தான். (ருசூ)

வேறு.

அத்திரு மூலட் டானத் தண்ணலுக் கயலே தென்பால்
வைத்தொரு குரோசந் தன்னில் வைகுதற் காச்சி ராமம்
பத்திகொ டிலிங்க மொன்று பதித்துடன் மணலா லங்கே
நித்தலு மரிச்சித் தேத்தி நிகமநா தனையுஞ் சென்று. (ருஎ)

அனுதினம் புதுமைத் தாய வன்புகொ டிறைஞ்சி மீண்டு
புனிதநன் னடனங் காத்த பொதுவுறை முனிவ ரென்ன
வினிதிறை மணஞ்செய் கோல மெய்துநா ளென்று ளென்று
தனிதமிழ் முனிவ னெண்ணிச் சதுமறை வனத்தி ருந்தான். (ருஅ)

மெய்த்தவம் புரிந்து நாளு மேவலா லவனி ருந்த
வத்தல மன்று தொட்டே யகத்தியான் பள்ளி யாய
தித்தலத் திவனிவ் வாறிங் கிருத்தலுங் கைலை நின்று
நித்தனு மணஞ்செய் கோல நிகழ்முனிக் கருள்வா னுக. (ருகூ)

வானவர் முனிவர் யோகம் வல்லவர் வசுக்கள் சித்தர்
தானவ ரியக்கர் பூதத் தலைவர்கின் னரர்க ணங்க
ளானவ ரயன்மான் மற்று மன்றுடன் கைலை நின்ற
வேனைய ரோடுங் கூட வெய்தினன் மறைவ னத்தில். (௬0)

எய்தியங் கரிகள் சூழ விலங்குபத் திராச னத்திற்
செய்தழற் றூமத் தன்று சிவந்திடு கடைக்கண் மாதுங்
கைதரக் கலந்தி ருந்த காட்சியுங் காப்பு மாகப்
பெய்தவக் குறுமு னிக்குப் பெருந்தகை கோலங் காட்ட. (௬௧)

கண்டனன் காதல் வெள்ளக் கடலிடைக் கரையோ காணன்
கொண்டனன் புளக மெய்யிற் குறித்துமற் றொன்றுட் கொள்ளான்
றண்டினன் றலைமேற் கைக டாள்களோ தரைமேற் றண்டான்
விண்டனன் றுதிகள் வாக்கால் வேறுமற் றொன்றும் விள்ளான். ()

என்னையோர் பொருளாய் வந்திங் கியன்மண வாளக் கோலந்
தன்னையின் றெனக்க ளித்த தாணுவே போற்றி திங்கண்
மன்னுசெஞ் சடையாய் போற்றி மறைதொழு மணாளா போற்றி
நன்னுதல் பாகா போற்றி நாதனே போற்றி யென்று. (௬௩)

தாளிவீழ்ந் தும்ப மீன்றோன் றனையுகந் தெடுத்து நாதன்
றோளினுற் றழுவிக் கையாற் றுடைத்துடல் கருணை வாக்காற்
கேளுநீ வரங்க ணம்பாற் கேட்கரி தேனு மிற்றை
நாளினுந் தருவோ மென்ன நற்றவன் பணிந்து சொல்வான். (௬௪)

ஈறிலாக் கருணை யென்பா லியைந்தனை யாக வெந்தாய்
வேறுயான் வேட்ப தென்னோ விண்ணப்ப முலக முய்யக்
கூறின்மா திருந்த விந்தக் கோலமோ டெந்த நாளு
மாறிலா திருப்பா யிந்த மறைவனத் தெவருங் காண. (௬௫)

மற்றுமொன் றெனக்கிக் கோலம் வழங்குசித் திரையாந் திங்க
ளொற்றுநீள் பிறைசேர் பக்கத் தேழுறு மிரவி வாரத்
துற்றநண் பகல்கூ டிந்த யோகத்தி லுரைத்த தீர்த்த
முற்றினு மூழ்கி யுன்றன் முழுமணக் கோலங் கண்டு. (கூசு)

வணங்கிமுன் வலமாய் வந்து வன்னிமூ லத்தி ருந்தங்
கிணங்குமஞ் செழுத்து மோதி யேத்தினர் தமக்கு மாசிக்
குணங்கொண்மா மகத்தில் வந்திக் கோலமே குறித்தோர் கட்குங்
கணங்களும் போற்ற மேலாங் கதியினை யளிப்பா யென்றும். (கூஎ)

அருந்தமிழ் முனியீ தெல்லாங் கேட்டலு முடன்பட் டன்பாற்
றருந்திரு மூலட் டானந் தனக்குமேல் பால தாகப்
பொருந்திய கோலத் தோடு புனிதனுங் கீழ்பா ணேக்கி
யிருந்தன னன்று தொட்டே யிவனுமங் கிருந்தி றைஞ்ச. (கூஅ)

வேறு.

அண்டருட னண்ணலதி லன்றணைத லாலே
யெண்டகைய தென்கயிலை யென்னுமொரு நாமங்
கொண்டபதி யப்பதிகு லாவுமிறை கோலங்
கண்டவர்பெ றுங்கதிக ணிக்கவரி தாமால். (கூகூ)

முந்துபொதி யக்குறுமு னிக்கருண்ம ணக்கோ
லந்தனது மேன்மையைய ளப்பவரு கப்போ
ரெந்தைதர மங்கலமெ ணளுமுற லல்லால்
வெந்துயர மென்றிருமை மீதுமடை யார்கள். (எ0)

மணவாளச் சருக்க முற்றிற்று.

ஆகச் சருக்கம் எ-க்குத் திருவிருத்தம் ருகச.

---

## புவனிவிடங்கச் சருக்கம்.



அவனி யிடந்தென் றமிழ்முனி வற்கங் கருள் கோலப்
பவனி யடங்கும் பெருமை பகர்ந்தோம் பரிவான்மேற்
புவனி விடங்கன் றனைமுசு குந்தன் புகல்வேதத்
துவனி யடங்கும் பதிவரு வித்தமை சொல்வாமல். (க)

பண்டொரு காலத் தவுணரோ டேறிப் படைவானோர்
தண்டு முறிந்தே யோடிவை குந்தத் தலமீதே
கண்டரி தன்னோ டதுரை செய்யக் கரியோனுந்
தொண்டு புகுஞ்சீ ரண்டரை நோக்கிச் சொல்கின்றான். (உ)

பொன்னுல கட்டன் றவுணர் புகாமற் பொருதற்கங்
கென்னினு மீறுந் திறன்முசு குந்த னெனும்பேரோன்
மன்னுள னீண்மா நிலமுழு தாளும் வரதுங்க
னன்னவ னோடீ துரையுமி னவனு லாமென்றான். (ங)

விண்ணவர் தாமும் விடைகொடு மீண்டவ் வேந்தன்பா
னண்ணி யெமக்கா யவுணர்கண் மாள நடந்துள்ளன்
பெண்ணி முடிப்பாய் சயமென வேந்து மிசைந்தானத்
தண்ணளி யன்றோ விரவி குலத்திற் றலையாய. (ச)

சால வவற்கன் றிசைமுசு குந்தன் றானுந்தன்
பாலனை வைத்தெண் டிசைமுழு தாளும் படிஞாலத்
தேலமு னைவர்க் குதவிசெய் மாலே யென்னப்போர்
மேலவ ரோடங் கேற நெடுந்தேர் மேல்கொண்டான். (ரு)

பரிகரி திண்டேர் தனதுப தாதிப் படையோடும்
விரிதரு விண்ணோர் படையு நெருங்கி வெகுண்டேறிச்
சொரிதரு தூளிற் றரையெண வானுந் தூர்ந்தேறத்
தரியல ரூர்புக் கவர்பதி சூழ்வுந் தருவித்தான் (சு)

வேறு.

ஆன போதிலங் கயங்கணின் றனுமனிப் பனவு
மேன டப்பவுந் தேர்கரி பிளிறவு மேன்மேன்
மான வீரர்தம் படைச்செருக் கொலியுமாய் வயங்கிக்
கான லந்திரைக் கடையுகக் கடலெனக் கலிப்ப. (எ)

கேட்டி டாமுன மவ்வொலி கிளர்ந்தெழுந் தவுணர்
கூட்ட மாகிநாற் படையொடுங் குறுகிவெஞ் சமர்கண்
மூட்டி யொன்றொடொன் றெதிர்பொர முறிந்துவிண் ணுள்ளோர்
தேட்டு ருவகை யகன்றனர் திசைதிசை தோறும். (அ)

தான வர்க்கவர் முறிந்தறத் தயங்குதல் கண்டு
வான வர்க்குமுன் னுதவியாய் வருமுசு குந்த
ஞான மற்புய வேந்தனு மடர்ந்துதே ரவுணர்
மேன டத்தினன் பொழிந்தனன் சரமழை மேன்மேல். (கூ)

வேறு.

தோள றச்சிலர் கரம றச்சிலர் தொடைய றச்சில ரறவுநீள்
தாள றச்சில ருடல றச்சிலர் தலைய றச்சிலர் தலையின்மீ
மூள றச்சிலர் தரும னுக்கிவை முறையி டச்செலு மாறுபோன்
மாளு றச்சில ராக விப்படி வாளி தொட்டனன் மீளியும். (கo)

பாக ரோடு கயங்க ளும்பரி யோடு வாதுவர் தாமுநீள்
மேக மார்தரு தேர்க ளோடு விடுத்து நின்றிடு சூதரும்
வாகு வேறு சரங்க ளோடெதிர் மாறு கொண்டப தாதியுஞ்
சோக மாகி மடிந்தி டும்படி சூறை வாளியி னூறினன். (கக)

சேர விப்படி மடிய வேறிய சேனை காவலர் தம்மையுஞ்
சோர முற்றுடல் வேறு வேறு துணித்து வெங்குரு திக்கடல்
பேர முற்றுமு னெஞ்சி நின்றிடு பேரு நீடு நிகாந்தரஞ்
சார மற்றெதி ரற்று நின்று தரித்த னன்சய சங்கமே. (கஉ)

அங்கண் மாதவ னென்ன நின்றவ னன்று வெற்றி யெடுத்தகைச்
சங்கி னீடொலி சென்று வானவர் தஞ்செ விப்புகு தாமுனம்
பொங்கு மார்வ மருந்தி மீண்டு புரந்த ரன்முத லோருமவ்
வெங்க ளந்தனை வந்து கண்டனர் வேறு வேறு களிப்புற. (கங)

வேறு.

ஒருபுடை யலகைக ளதினிறை யுதிரம திழிவுன றுளேவன
பருகுவ சிலபல குணலைகள் படுகுறை யுடலுட னடுவன
வருகதை யணைசெய்வ சிலபல வவுணர்க ளவயவ மறுகொடு
செருகுவ சிலபல வெதிரெதிர் தறிபடு தலைகள்கொ டெறிவன. (கச)

மாநில மதிலுள மென்றசை மாநிண முடனெதிர் தின்பவர்
தானனி யெழிலின மும்பகை தானென நினைவ நிகர்த்தயல்
சேனமு நிறைகழு கும்படு சேனையு ளவுணர் நெடுங்குட
லானவை தசைமுத லொன்றற வாவலோ டெதிர வருந்தின. (கரு)

நிறைதரு மமரரை நிந்தைக ணிகழ்த்தின வெனவு மரம்பையர்
குறைவறு வடிவின் முயங்குதல் கொளுவிய தெனவு நினைந்துயர்
மறலியு முலகினர் கண்டிட வரவிடு வனவென வந்துடன்
முறைமுறை கொடிகளு மங்கவர் முகமொடு விழிகள் பிடுங்குவ. ()

குரைகட னிகரென நிறைவன குருதிக ளதினிடை மருவிய
வரையெனி வடுமுடல் குவிவன மறிவன கரநிரை திரையென
நிரைநிரை மடிவுறு மவுணர்க ளிமிர்தலை குமிழிக ணிகர்வன
வுரைதரு மிவைமுத லடுகள முதவிய புதுமைக ளளவில. (கஎ)

வேறு.

அண்டரு மிவ்வா றட்ட வடுகளம் பாரா வார்வ
மண்டினர் வாகை சூடி வருமுசு குந்தன் றன்னைக்
கண்டனர் வியந்து சென்று கைகளாற் றழுவி மோந்து
கொண்டனர் மேன்மே லாசி கூறினர் கூறு முன்னம். (கஅ)

சுற்றிய சேனை பற்றச் சுடர்மணித் தேர்மீ தந்தக்
கொற்றவன் றன்னைக் கூடக் கொண்டுவா னவர்வா னேற
மற்றவன் குறாு மங்கண் வாசவன்பதி கண் டோகை
யுற்றன னதிறு லாசை யொழிந்தன னயோத்தி தன்னில் (கக)

அப்பொழு தவன்கை பற்றி யமரர்கோன் சென்று தன்றன்
செப்பரு மில்லத் துள்ள சிறப்பெலாங் காட்டி மீள
வொப்பருங் கால மாறி லுள்ளது மொருகா லத்திற்
றப்புறு துதவு தன்னந் தனவன மருங்கு சார்ந்தான். (உ0)

வேறு.

பொற்பமர் வனமதன் புதுமை காட்டிட
மற்புய வேந்தனு மகிழ்ந்து கண்டனன்
கற்பகத் தருவதிற் கலர்ந்து நிற்றலா
லற்புத முளதெண வறைதல் வேண்டுமோ. (உக)

ஆங்கத ணுப்பணொரால யத்தின்மா
தாங்கரி யாசனந் தன்னிற் றையலு
நீங்கருங் குமரனு நிகழ வேயிடத்
தோங்கொரு பரமனை யுகந்து கண்டனன். (உஉ)

பார்க்கு முன்னம் பகர்முசு குந்தமன்
றுக்க மெய்விதிர்த் தானந்தக் கண்ணினீ
ரேற்க நின்றவர் யார்கொலென் றெண்டிசை
யோர்க்கு முன்னவ ளேடோன் றுரைசெய்வான். (உக)

சேணு ளோர்புகழ் தேவர்க டேவயான்
காண வின்பங் கசிந்தருள் கின்றவித்
தாணு வென்னும் விடங்கர் தமைத்தர
வேணு மென்றுமென் மேன்மிக வேண்டினன். (உச)

## வேறு.

நன்றமை விடங்கர் தம்மை நல்கவு மாட்டான் வென்றி
மன்றலந் தடந்தோள் வேந்தை மறுக்கவு மாட்டா னாகி
நின்றன னிமையோர் போந்து நிகழ்த்தனன் முக்கொ டென்று
சென்றனன் வேறொன் றெண்ணித் திரும்பவு மவன்ற னோடே. (உரு)

எய்தியே யிலகு மில்லத் திருந்தவ னறியா வண்ண
மைதிகழ் வான நாட்டு மயன்றனை யழைத்து நன்மை
பெய்தருள் விடங்கர் போலப் பேதமற் றிடவே றொன்று
செய்துவந் தழைப்பா யென்று தேவர்க டேவ னேவ. (உசு)

அடுத்தவக் கணத்திற் சென்றங் கவனுமவ் விடங்கி தென்னத்
தொடுத்தொரு மேனி யுள்ளத் தோளினு னல்க வாங்கி
விடுத்துமுன் பிருந்த வீதி விடங்கரை யவரி ருந்த
விடத்தினி லவரை முன்போ லிருத்துவித் திமையோர் வேந்தும். ()

மன்னவன் றனக்குப் பின்பு மணிகண்முத் தாடை மாடை
பொன்னணி பலவு மீந்து புகழ்ந்துப சரித்து நோக்கி
யென்னைநீ வேட்டுக் கேட்ட வெமதிறை யெனும்வி டங்கன்
றன்னையுங் கொடுநீ நுங்க ளயோத்திமேற் றகச்செல் லென்றான். ()

என்றவனேவா முன்ன ரிவனுநந் தனவ னத்திற்
சென்றுபின் வேறு வைத்த திருவுருக் கண்டு முன்போற்
றன்றன்மெய் புளகங் கண்ணீர் தந்தில வாத லாலீ
துன்றென மீள வுஞ்சென் றமரர்கோன் றனக்குச் செப்ப. (உகூ)

கேட்டட னும்பர் கோனுங் கிளர்வடி வைந்து முன்போ
லூட்டுவித் தொன்றொன் றாக நரபதிக் கறியா வண்ணங்
காட்டவும் புளகங் கண்ணீர் கண்டில னதனால் வேந்தும்
வாட்டமுற் றன்றன் றென்று மறுத்தன னனைத்து மிப்பால். (௩0)

இத்திறங் கண்டு வானோ ரிறைவனு மியற்று வித்து
வைத்திடு விடங்க மாமவ் வாறையு மாற்றித் தானே
மெய்த்திறங் காட்டும் வீதி விடங்கரைக் காட்ட வேந்து
மொத்துளங் கண்டு முன்போ லுடல்கொளா னந்தங் கண்டான். ()

கண்டபோ திவரா மென்று காதலித் திவரை நல்கென்
றண்டர்கோன் றன்னை வேண்ட வவனுமன் றிவனுக் காகக்
கொண்டிடு முருவ மாறுங் கூட்டியவ் விடங்கே ழாக
மண்டணிற் கொடுபோய் நாட்டென் றீந்தனன் மன்னற் கன்பால். ()

மன்னவன் மேவிக் கேட்ப வாசவன் மருத வண்ணற்
றன்னுயிர்க் குயிரா யுள்ள சங்கரன் றனையு மீந்தா
னின்னல்வந் துற்ற காலத் தினிதுகந் துதவி செய்வோர்க்
கன்னதன் றுயிரு மீதல் பெரியவர்க் கறமே யன்றே. (௩௩)

விண்ணவர் வேந்த னேழு விடங்குமிவ் வாறு நல்க
மண்ணவர் வேந்தன் வாங்கி மகிழ்ந்துடன் மணித்தே ரேற்றி
யெண்ணரு நன்மை கூறி யிமையவர் விடைகொ டுப்ப
நண்ணின னயோத்தி மீள நாற்பெருஞ் சேனை யோடும். (௩௪)

வந்திக ளேத்தெ டுப்ப வந்துதன் னகரி யெய்தி
யிந்திரன் கொடுத்த தேவ ரெழுவர்க டமையும் போற்றிச்
சிந்தைகூர்ந் தங்கண் வைகிச் சிறிதுநாட் கழித்த பின்ன
ரந்தநற் றேவர் தம்மை யவனியிற் பொலிவ தாக. (௩௫)

வேறு.

பரித்து வந்தவத் தேவரைப் பாருளோ ருய்ய
விருத்து நற்றலம் யாதென வெண்ணியா கமத்தால்
விரித்த தற்குளோர் வீதிசேர் விடங்கரை முதலே
கருத்தி லன்புகொண் டிருத்தினன் கமலையம் பதியில். (௩௬)

அடங்க லாதமா மேன்மையென் றறிந்துபின் மறைசை
யிடங்க ணித்திரண் டாவதென் றிசைத்திடும் புவனி
விடங்கர் தம்மையு நாட்டியே மீண்டு நன் ஞகை
தொடங்கி மற்றுள விடங்கமு மிருத்திமுன் ஞெழுதான். (௩எ)

போற்றி யெங்குமா பூசையும் புரந்தர னெனவே
யேற்று வித்துமா மன்னனு மித்தனைக் குரிய
பேற்றை யாம்பெறப் பெற்றன மென்றவண் பெருகத்
தேற்ற முற்றனன் றீர்ந்தனன் றீவினை யாவும். (௩அ)

இந்த வாறுல குய்ந்திட விவனுகந் திருத்து
மந்த நல்விடங் கேழினு மதிகமா மறைசை
தந்த வவ்விடங் கேசர்பாற் றடையிலன் புடனே
வந்து வந்துநற் பதாம்புயம் வணங்குவ ஞெனும். (௩௯)

வேறு.

பேசரு மறைவ னத்தின் பெருமைகண் டிவ்வி டங்கை
வாசவன் ஞனும் வந்து வணங்குவ னன்பா ஞெ
மீசனு ரூரூர் தன்னி லிருத்திய விடங்கின் மிக்க
நேசமிவ் விடங்கில் வைத்து நின்றருள் கொடுப்ப னென்றும். (௪0)

வேறு.

ஆத லான் முசு குந்தனன் ஞதரித் திடுமிவ்
வேத கானனந் தனிலுறை விடங்கரைத் தொழுவோர்
மாது பாகனுர் தம்மொடு மொன்றுவர் மற்ஞேர்
பேத மாமுட லெடுத்துமோர் பெறுபய னிலரே. (௪௧)

வேறு.

அண்டர்தொழு மிப்புவனி யாகியவி டங்கைக்
கண்டவர்து தித்தவர்க ருத்துறநி னைந்துட்
கொண்டவர்க ளிப்பெருமை கூறுமவர் கேட்போர்
பண்டுபுர மட்டவர்ப தம்பெறுவர் திண்ணம். (சஉ)

புவனிவிடங்கச்சருக்க முற்றிற்று.

ஆகச் சருக்கம் அ-க்குத் திருவிருத்தம்-ருருசா.

---

## வீரகத்திச்சருக்கம்.

அருந்திறன் மன்ன னுக்கன் றமரர்கோ னளிக்க வந்திங்
கிருந்தருள் விடங்கர் மேன்மை யிசைத்தன மியன்ற வாமேல்
வருந்திற லிலங்கை வேந்தை வதைத்திட விராமன் றன்பாற்
பொருந்திய வீர கத்தி போக்கிய வாறு சொல்வாம். (க)

வானவர் மண்ணோ ரேனோர் வருந்துயர்ப் படாது மிக்க
தானவ ரிடும்பை மாற்றத் தசரத னிடத்துப் பின்ன
ரானதோர் கற்பந் தன்னின் மாதவ னிராம னாக
நானிலத் துதித்துப் பஞ்ச வடிக்கரை நண்ணு நாளில். (உ)

சீலமே துணைய தாகுஞ் சீதையைக் கூட வென்றம்
மாலுமுன் கவிகளோடு மயேந்திர கிரியைச் சார்ந்த
வேலையி லிலங்கை நின்று வீடணன் முன்னோன் றன்னைச்
சாலவே விடுத்தி ராமன் சரணமே சரணென் றுற்றான். (ங)

வேறு.

வந்த வன்றனக் கரும்புகல் வாய்மையொன் றருளிச்
சிந்தை கூர்ந்தினி யிலங்கைமேற் செல்வதற் குதவி
தந்தி டென்றுவா ரிதியையுஞ் சம்மதப் படுத்து
விந்தை காந்தனை நோக்கியே வீடணன் சொல்வான். (௪)

அண்ண லேயுளா தொன்றிதற் கடுத்திடக் கேட்பா
யெண்ணு மாதல மறைசையென் றுங்கநி லியாம்போய்ப்
பண்ணி னேர்மொழி பாகனைப் பணிந்தருள் வேண்டி
நண்ணி மீண்டனை யடைத்திடி னன்குறுங் கருமம். (௫)

என்ற வன்பணிந் துரைத்திட விராமனுங் கேளா
நன்றி தென்றுடன் வானர நாயக ரொடுஞ்
சென்று வேதநன் னதியினுந் தென்மணி கன்னி
மென்ற கும்புன லதனினும் வேண்டிநின் றாடி. (௬)

அத்த லத்தினுக் கனுகுண மாயது மனித்து
மெத்து மன்புட னிராமனும் விரைந்துசென் றுலகி
லெத்த லத்தினு மேலதென் றிசைத்திடு மறைசை
யத்தர் தாளினின் முறைமுறை வணங்கிமு னின்று. (௭)

ஏற்ற மாகிய துதியினு லிரங்கி யென் புருகப்
போற்றி செய்தவன் வேண்டிடப் புனிதனும் வெளியே
தோற்றி நின்றுதான் மீளவுந் தொழுதெழு மவனைத்
தேற்றி யிங்குனீ வேண்டிய தேதெனச் செப்ப. (௮)

நின்று மாயனும் பணிந்துட னின்மலா மற்றென்
றன்று சீதையைக் கொடுசெலு மரக்கனை மாளக்
கொன்று மீளவச் சானகி தன்னொடுங் கூடற்
கின்று நின்னரு ளடியனேற் கிரங்கிடென் றிசைத்தான். (௯)

ஆகொ டென்றவன் வேண்டிய தனைத்துமங் கருளிப்
போக நாயகன் மாயனும் புகலரு மிலங்கைக்
கேக நாமனை யடைப்பதெவ் விடந்தொடுத் தென்றே
யூக நாயகர்க் கேட்பமுன் னொருமூதவ ருரைப்பார். (௧௦)

கண்ண நந்தமக் கெவ்விடங் கழறிய விலங்கைக்
கண்ணி தவ்விடந் தொடுத்தணை யடைப்பதே யன்றோ
வெண்ணா மாதலா லிக்கடற் கோடிதொட் டியற்றி
ணண்ணு கின்றதா மென்றுவா னரங்களு நவில. (௧௧)

ஆயி லித்தலந் தொடுத்தணை யடைமினென் றினிமே
லேயு மத்திற மறிந்திடா திராமனு மேவப்
போய டுத்தவக் கணத்தினிற் பொருவில்வா னரங்க
டோயு மக்கடற் கோடியைத் தொடுத்தணை தொடங்கி. (௧௨)

மெத்து மாமரஞ் சிலையொடு மேருநேர் கிரிக
ளெத்தி யேகொடு வந்திழிந் தொன்றொடொன் றிகலிப்
பத்து யோசனை யளவொரு பகலினின் முடியக்
கத்து வாரியை மறித்தணை கட்டுமப் போதில். (௧௩)

வரைகள் வந்துமேன் மேல்விழ வாரிதி பொங்கிக்
கரையு ரண்டுசென் றருங்கதி காட்டுமா மறைசைத்
தரைய டங்கவுங் கொள்ளவத் தலத்துளோ ரமிழ்ந்தா
வுரைகொள் வாய்முறை யோமுறை யோவெனக் கதறி. (௧௪)

ஆதி யேயெமை யாண்டரு ளாண்டரு ளென்னும்
போதி லாரண நாதனும் புணரியை நில்லென்
றோதி யேதடை செய்யவாங் குறையுநர் தம்மை
வாதி யாவகை மீண்டதவ் வாரிதி முன்போல். (௧௫)

என்று மாருயிர்க் கிரங்கிவந் திரும்பவக்கடலு
ணின்றெடுத்தலைவ யடக்கிய நின்மலன் றனக்கீங்
கொன்றுமிக்கட லடக்கியாங் கொருவரு மிழந்து
பொன்றி டாவகை காப்பது புதுமையோ புகலில். (௧௬)

இந்த வண்ணமவ் வாரிதி யிறைவனுக் கொல்கி
வந்த வண்ணமே மீண்டுபோய் மறிபடா வேகத்
தந்த வானரத் திரளிடு மணையெலா முடைப்பச்
சிந்தை நொந்தனன் மாலுமச் சேதுவை நோக்கி. (௧௭)

வேறு.

நொந்து நான்மறை நூல்பயி லீசனைச்
சிந்தை கொண்டுயர் மாலுந் திகைப்புற
வந்த வண்ண மறிந்தவன் றம்பியும்
வந்து துன்ப வழியில் வருந்தினான். (௧௮)

தேறு மன்ன ரிருவருஞ் சிந்தையிவ்
வாறு நொந்து வருந்த விவர்க்கெதி
ரேறு வாலியி ராவணன் றம்பியர்
வேறு வேறு நினைந்து வெதும்பினார். (௧௯)

இந்த வாறவர் யாவரு மின்னல்கூ
ரந்த வேலையி லாரண நாதனும்
வந்து தோன்றி யுமையுடன் மாலவன்
சிந்தை வெந்துயர் தீர வுரைசெய்வான். (௨0)

மாத வாயிதற் காக மனந்தள
ராது கேளிவ் விடத்தணை யாயிடின்
வேத கானனத் துக்கு மிகவிடர்
போது மீது நமக்கும் பொருந்துறும். (௨௧)

மன்ன வாதலான் மற்றேரி டத்தனை
தன்னை நீசெயென் றேவவத் தானுவைப்
பின்னு மேத்திப் பெயர்ந்தனை கட்டுவ
தின்ன வாறெவ் விடந்தொடுத் தென்றனன். (உஉ)

இறைய வன்றனை யிவ்வாறி ராகவன்
குறையி ரப்பவக் கோவுமு ரைசெய்வான்
மறைவ னத்தணி யாமிந்த வாரிதித்
துறைத னக்கு நிருதியிற் றேன்றலே. (உங)

வாவி யெட்டி மயிடா சுரன்றனை
தாவி யட்டரு ளவ்விடத் தந்தரி
தேவி பட்டண மென்றன்று செய்யநன்
ருவி மட்டுறு நன்னக ரொன்றுள. (உச)

சால வன்னகர் தன்னிற் றெடுத்துவி
சால மாகச் சலதி கடக்கநீ
கூல மேசெயிற் கூடவு னக்கனு
கூல மேசெயுங் கூறிலவ் வாரிதி. (உரு)

வேறு.

ஈது மன்றிநீ யடைத்திடு மிக்கடற் கோடிச்
சேது வின்க ணிருசுடர் சேருதன் முதலாம்
போது கந்துநீ ராடினர் புரிந்தமுற் பஞ்ச
பாத கங்களு மகன்றுநற் பரகதி யடைவர். (உசு)

எந்த வல்வினை யாயினு மீதின்மூழ் கிடினும்
புந்தி யெண்ணினும் புகழினும் போமிதன் கரையில்
வந்தி றந்தவர்க் குறுகடன் வழங்கிலோ வுலகஞ்
சிந்து மன்றள வுகப்பர்க டென்புலத் தவரும். (உஎ)

கங்கை யிற்பதி னாயிரங் காலமா டுவது
மிங்கி திற்புகுந் தாடிலன் றெய்தலா மற்றும்
பொங்கு நற்பெரும் புண்ணியம் யாவுள புவியி
லங்க தற்கிது கோடியா மாடிலிக் கோடி (உஅ)

என்று வள்ளலு மிவ்வண மிசைத்துட னேக
நின்று மாயனு மகிழ்ந்தர னிகழ்த்திய படியே
சென்று வாரிதி யடைத்ததிற் சென்றரக் கரையும்
வென்று சானகி தன்னையும் வெவ்வழன் முகத்தால். (உகூ)

மீட்டு டன்கொடு வீடணன் றனக்குமேன் மகுடஞ்
சூட்டி யன்றளித் திலங்கையுந் தொடுத்திடு பயணத்
தீட்டு மந்தண வதையற விராமனு தனையு
நாட்டி யப்பெருஞ் சேதுமே லயோத்தியை நாடி. (ங0)

தந்த மும்முகிர் தானுமே தரிக்குமா யுதமாய்
வந்த வானரச் சேனையும் வழிவிடு மரக்கர்
தந்தி றற்பெருஞ் சேனையுந் தானுமாய் மீளச்
சிந்தை கூர்ந்தலர் விமானமேற் செல்லுமப் போதில். (ஙக)

வேறு.

கூற்றென விருண்டெழு கோலத் தோரணங்
காற்றிடைப் பின்றொடர்ந் தணுகச் சேதுவின்
மேற்றிருந் தாயனும் வெருவி நோக்கியே
சாற்றினன் யார்கொனீ யெனவத் தையலும். (ஙஉ)

அடாதென வவனிவிண் ணதிர மாயனைத்
தொடா தெதிர் தட்டியத் தோகை கூறுவா
டடாதகை யிராவணன் றன்னை நீகொல
விடாதுனைத் தொடர்ந்திடும் வீர கத்தியான். (ஙங)

இன்னமுன் றன்னுட னெய்தி வந்துநின்
ருென்னகர் புகுந்துநுந் துணைவர் தன்னுட
ஞுன்னையு மன்றியுன் குலத்தி லுள்ளவர்
தன்னையும் வதைப்பன்யா னென்று சாற்றினள். (கச)

அவ்வுரை கேட்டபோ தயர்ந்தி ராமனு
மிவ்வினை யொழிப்பதற் கிலிங்க மின்னுமொன்
றுய்வகை யிங்ஙன முகந்து நாட்டுதல்
செய்வகை யாமெனத் தெளிந்த போதினில். (கரு)

தொழுந்திற விராகவன் றுயரெ னுங்கன
லொழிந்திடும் படிக்கரு ளுதவு மின்னருள்
பொழிந்திடு முகிலெனப் பொருவில் வானிடை
யெழுந்தது வாணியொன் றிராமன் கேட்பவே. (கசு)

வேறு.

தாங்க ருஞ்சிலை தாங்கிய மாயனே
யீங்கு நீசிவ லிங்க மிருத்தினு
னீங்கி டாது நினைத்தொட ரும்பழி
யாங்க தற்கொன் றறைகுவன் கேளினி. (கஎ)

ஆன நற்றிரு வாரூர்க் கயலுறும்
வான நாடும் வழுத்து மறைசையிற்
ருனி லிங்கந் தகைபெற நாட்டிடி
லீன மாகிய விப்பழி நீங்கிடும். (கஅ)

வேறு

இரத ராயிதற் காகநீ சிறிதுநாட் டரிக்கிற்
பரத னுங்குநின் வரவையே பார்த்துநின் றதுவோர்
விரத மாயிறை தாழ்க்கினும் வெவ்வழல் வீழ்க
நிரத னுயுயிர் விடுதற்கு நினைந்திருக் கின்ருன். (கக)

வேறு.

பண்டுனை விட்டேனென் றுன்பின் பற்றிய பரதனுக்குத்
தண்டக வனத்தி னீமுன் சாற்றிய வேளை தப்பின்
மண்டுவெவ் வழலில் வீழ்ந்து மாய்ப்பனு ருயிரப் போது
கொண்டவிப் பழியைப் பற்றக் கொடுந்துய ருனக்குக் கூடும். (௪0)

ஆதலாற் கடிது போய்நீ யயோத்திசென் றவனி காக்குந்
நீதிலா மகுடஞ் சூடித் தீர்த்துநற் பரத னுற்ற
கேதமா னவையும் யார்க்குங் கிளர்ச்சியை நல்கி மீள
வேதகா னனத்தில் வந்துன் வெம்பழி விடுவதாக. (௪க)

மன்றலந் தடந்தோண் மாலே மகிழ்சிவ லிங்கமங்க
ணொன்றுநீ தாபித் தேத்தி லுனையடர் வீர கத்தி
யன்றுபோ மறையோர்க் கங்க ணருளினின் பேரா லோரூர்
நன்றர னுகந்தப் போது நன்மக வுனக்கு நல்கும். (௪உ)

துங்கவெண் கவிகை மாலே தொடர்ந்தவிப் பழியை நீக்க
வங்கணீ யிருத்து மந்த வருஞ்சிவ லிங்கங் கண்டோர்
பொங்குவெண் கயிலை சென்று பொருந்துவ ரன்றி மீள
விங்குறும் பிறப்பி றப்பென் றெய்திடா ரெக்கா லத்தும். (௪௩)

வேறு.

இக்க டற்புரி சேதுவி லிருத்திய விலிங்கம்
புக்கி றைஞ்சினு மறைவனம் புகுந்தினி மேனீ
வைக்கு மச்சிவ லிங்கம திறைஞ்சினு மண்மே
லொக்கு நற்பய னுரைக்கின்முக் காலுமீ துண்மை. (௪௪

இத்த லத்துநீ யியற்றுமிவ் விராமசே துவுக்கு
மத்த லத்தின்முன் னீபுரி யாதிசே துவுக்கு
மொத்த மேன்மையே யன்றிமற் றொன்றினுக் கொன்று
மெத்து மென்பதுங் குறைவதும் வேறிலை விளம்பில். (௪௫)

பூத நாயக னென்பெயர் பொருவில்பிங் கிருடி
வேத நாயகன் விடுக்கநின் வேதனை நீங்க
வீது நானுரைத் திடுவதற் கிங்குவந் தனனென்
றோதி நாரணற் கொழிந்ததங் குடனச ரீரி. (சகூ)

அந்த நன்மொழி கேட்டபோ தாயனு மறைசை
யெந்தை தாளுளங் கொண்டட னேகியே பரதன்
வெந்த முற்புகா தயோத்தியை மேவிமே தினிக்குந்
தந்தை தானெனத் தரித்தனன் றரணிமா மகுடம். (சுள)

தரிக்க நீண்முடி தரித்தபின் றன்னுட னணைந்த
வரக்கர் வானர முதல்வர்க்கு மாடையா பரணம்
பரிக்கு மாறளித் தவர்தமை யனுப்பிநற் பார்தான்
புரக்கு நாளினிற் சிறிதுநாட் போயபின் பொருநாள். (சுஅ)

கொண்ட வஞ்சனக் கோலமுங் கொழுந்துகுஞ் சியுமாய்ப்
பண்டு சேதுவிற் பின்றொடர் பழியெனு மணங்கை
மண்டு கங்குலிற் கனவிடை வந்திட மீளக்
கண்ட னன்றுயி லகன்றுமெய் நடுங்கவக் கரியோன். (சுகூ)

எண்ணி யஞ்செழுத் திருள்புலர் காலையி லெழுந்து
புண்ணி யப்புன லாடியே புரிந்துமா நியதி
பண்ணி நித்திய தானமும் பகர்பெருங் கொலுவை
நண்ணி யாங்குளோர் தமக்குமக் கனவினை நவின்றான். (ருo)

குற்ற முற்றிடி விசைப்பது குருபரர்க் கன்றோ
மற்ற வர்க்குரைத் தென்னென வசிட்டரை யழையா
வுற்ற வெங்கன வுரைத்தவர்க் குரைக்கிலீ திலங்கை
வெற்றி செய்தநாட் பின்றொடர் வீரவெம் பழியாம். (ருக)

அன்று சேதுவி லீதெனை யடர்ந்தவப் போது
நின்ற வாணியொன் றிப்பழி நிகமகா னனத்திற்
சென்றி லிங்கமொன் றிருத்தியாங் கல்லது தீரா
தென்றி சைத்தது வானிடை யாவருங் கேட்ப. (ருஉ)

வேறு.

பன்னரு மிலிங்க மொன்று பதித்தலாற் சேது மீதின்
முன்னநம் பிரம கத்தி மோசனமாய திப்பால்
மன்னுமிவ் வீர கத்தி மாய்வதற் குரைத்த வேந்த
னன்னக ரணைந்தி லிங்க நாட்டநின் னருணல் கென்றான். (ருங)

அவ்வுரை கேட்ட போதி லருந்தவ னதுவா மென்று
செவ்விதின் மாலை நோக்கிச் செப்புவான் மறைசைக் கொப்பா
யெவ்வுல கத்து மில்லை யாவர்க்கு முத்தி நல்கும்
வெவ்வினை யொழிக்கு மேன்மேல் விளைக்குநல் வினைக ளென்றும். ()

எண்ணின ரத்த லத்தை யியம்பின ரேக வென்றங்
குண்ணினைந் தவர்கள் செல்வோ ரோதுமத் திருவெல் லைக்கே
நண்ணின ரதனைக் கண்டோர் நாளுமங் குறைவோர் மேவும்
புண்ணிய மினைத்தென் றெண்ணிப் புகலொணா தாகு மம்மா. (ருரு)

வேறு.

புண்ணி யம்புரி பவர்க்குமூ வுலகினும் பூவுல கேற்ற
மெண்ணி லங்கதின் மேலதா நாவலந் தீவஃ தினுந்தா
னண்ணரும் பரத கண்டமே நலனுடைத் திந்தனன் னலஞ்சேர்
மண்ணின் மிக்கது தென்றிசை யதனினு மறைவன மதிகம். (ருசு)

வேறு.

இன்றி வேள்விகள் வானுல கேறவு நியதி
யொன்று மன்றியு மப்பய னுறவுமெஞ் ஞான
மன்றி முத்திலைய யடையவும் வேண்டின ரதன்பாற்
சென்றி ருக்கவே பெறுகிலப் பயனெலாஞ் செறிவர். (ருஎ)

அத்த லத்திடை வைகினர்க் ககிலதீர்த் தழும்போய்
நித்த மாடிய பயனுறு நிகழ்பவம் யாவுஞ்
சத்தி யந்தவிர்ந் திடுமொரு சாந்தியு மிலாது
மெத்து தீப்பழி விளியுமென் றுரைப்பது வியப்போ. (ருஅ)

வேறு.

இன்னண முனிவன் கூற விராமனுங் கேளா முன்னம்
பன்னரு ஞாலங் காக்கப் பரதனை யிருத்தி வேத
நன்னகர் நோக்கிச் சீதை நாளுமெய் பிரியாத் தம்பி
தன்னுடன் வசிட்டர் முன்பு சென்றிடத் தான்பின் சென்றான். (ருகூ)

போம்பொழு தவனைப் பற்றிப் போகலென் றந்த வீர
மாம்பழி யணங்கும் பின்பே யடர்ந்தடர்ந் தலறிச் செல்லத்
தேம்பிய வுளத்த னாகித் திரிந்திடர் தந்த மாலும்
வாம்பரித் தேர்க டேன்றி மறைசையம் மருங்கு வந்தான். (சு0)

அத்தலத் தனையும் போதி லவன்றனை யடரும் வீர
கத்தியுங் கனன்று பொங்கிக் கடையுகக் கனலா மென்ன
மெத்தவும் வெகுண்டு சென்று வேதகா னனமட் டன்றி
யெத்திசை யோரு மேங்க விடியென வாய்விட் டார்த்து. (சுக)

மேற்றிசை யெழுந்த வந்த வீரவெம் பழியி னோசை
சாற்றிய மறைசை வாழுஞ் சங்கர னருளாற் கோயில்
வீற்றிருந் தருளும் வீர வேழமா முகத்தோன் கேளாத்
தோற்றிய வொலியே தென்று துண்ணென வெழுந்து சென்று. (சுஉ)

குடக்கினை வேண்டி நின்று கொடியவெங் கூற்ற மென்னத்
தடக்கைமா தவன்பின் பற்றித் தான்றொடர்ந் தோடி யேறுந்
தொடக்கெனும் பழியா மந்தத் தோகையைக் கண்டு கோபித்
தடக்கின னுாஉங்கா ரத்தா லவன்றனை யடரா வண்ணம். (சுஙு)

ஆங்கவ னுணக் கஞ்சி யதுவுமத் தலம்பு காம
னீங்கிய தன்று தொட்டு நிகழ்த்துமைங் கரத்தோன் றானுந்
தீங்கடை யாம லங்கண் டிரும்புமத் திசையை நோக்கி
யோங்கிய தாளி னோடு முறைந்தன னுலகம் போற்ற. (௬௪)

௵

வீரனை வதைக்க வந்த வெம்பழி யகலக் கண்டு
நாரணன் றானும் போத நயந்துமெய் மகிழ்ந்தன் றிந்த
வாரண வனத்தின் மேன்மை யழகிதென் றதிச யித்தவ்
வாரண முகத்தோன் றாள்கள் வணங்கிவந் தனைகள் செய்தான். (௬௫)

இன்னமு மென்னை மீள விப்பழி யணுகா வண்ண
நின்னரு டருவா யென்ன நெடியவன் வேண்ட வுற்றோர்
தன்னிடர் தவிர்க்க வல்ல தயாபர னாத லாலே
யன்னதற் குடன்பா டிந்தா னனைமா முகத்தோன் றானும். (௬௬)

வேறு.

இந்த வாறடர் வீர கத்தியை யேக வாது புரிந்தவத்
தந்தி மாமுக னைப்ப ணிந்தவர் தாரி டத்தவ ரேனுமற்
றந்த ணப்பழி யாதி யாய வரும்ப வங்க ளகற்றிநற்
சிந்தை யுற்ற வரங்கள் பெற்றருள் சேர்வ ரீங்கிது திண்ணமால். (௬௭)

அங்க தன்பின் மகிழ்ந்த மாலு மடைந்து மாமணி கன்னிநீர்
முங்கி வேத நதிக்கு ளன்பொடு மூழ்கி மூல விலிங்கமாங்
கங்கை யாளர் மணாளர் தாளொடு கண்டி றைஞ்சி விடங்கரா
மங்கை பாகர் மலர்ப்ப தங்களும் வாழ்த்தி வந்தனை செய்தனன். ()

குறைவி லாதுயர் நாளி னண்பகல் கூடு மெல்லையி லீறிலா
மறைக ளோது விதித்தி றத்து வசிட்டர் கூறிய வண்ணமே
யறையு மப்பழி தீர நாசம தாயிடும்படி யத்தலத்
திறைவ னுக்கய றென்பு றத்தி லிருத்தி னன்சிவ லிங்கமும். (௬௯)

### வேறு.

நாட்டிய வவ்வி ராம நாதனைக் கண்டோர் நாளு
மீட்டிய மாபா வங்கள் யாவுள வெனினு நீங்கி
வாட்டிய பிறவி யென்னும் வாரிதி கடந்தா னந்த
வீட்டினை யடைவர் மேலும் விளம்பிலீ துண்மைத் தாகும். (எ0)

இருத்தியிவ் வாறி லிங்க மிறைஞ்சியந் தணர்க்குஞ் சாலத்
தருத்திகழ் பழனஞ் சூழ்ந்த தலத்துமேல் பால தாகப்
பொருத்தம துடனி ராம சந்திர புரமென் றேரூர்
விருத்தியு மாக வீந்து விடைகொண்டா னயோத்தி வேந்தும். (எக)

தோரண மறுகு சூழ்ந்த சுருதிகா னனத்திவ் வாறு
நாரணன் றனக்கி லிங்க நாட்டிய மேன்மை யாலும்
வாரண முகத்து வள்ளல் வண்பெருங் கருணை யாலும்
வீரனை யொழிக்க வந்த வெம்பழி தீர்ந்த தன்றே. (எஉ)

### வேறு.

இத்த கைத்தனை யியற்றிரா மேச்சுரந் தன்னி
லொத்த லிங்கமன் றிருத்தியு மொழிந்திடாப் பாவ
மித்த லத்தின்வந் தெய்துமுன் னேகிய தென்று
லத்த லத்தினின் மேன்மையா ரளவிட வல்லார். (எங)

### வேறு.

சொற்றவப் பதியு ளீசன் விடங்கனற் சோதி நீற்றை
நெற்றியிற் றரிக்கின் முத்தி நிச்சய நிகழ்வ ரன்றி
மற்றுமங் கிராம நாத னீறிட வல்வி டங்க
னூற்றிடுங் துரித மென்னு மடவிகட் கனலு மாகும். (எச)

வேறு.

மாத வன்றனக் கரும்பழி மாற்றுமிச் சருக்க
மோது கின்றவர் கேட்பவ ருகப்பவர் யாரும்
போத ரும்பிர மகத்தியே யாதியாப் புகன்மா
பாத கங்களு நீங்குவர் பகரிலீ துண்மை. (எ௫)

வீரகத்திச்சருக்க முற்றிற்று.

ஆகச் சருக்கம் கூ-க்குத் திருவிருத்தம் கூ௩௬க.

பிரமசாரிச்சருக்கம்.

விந்தைகாந் தனுக்கிவ் வாறு வீரவெம் பழிதவிர்த்த
வந்தமா மேன்மை சாற்றி னேமவன் வைத்த ராம
சந்திர புரத்தில் வாழுந் தணரிலோர் பிரம சாரிக்
கெந்தைமா பாவந் தீர்த்த வாறினி யியம்பல் செய்வாம். (க)

சாற்றிய வந்த ராம சந்திர புரத்து வேத
மாற்றருங் கணித முற்றும் வல்லதோர் மறையோ னுக்கங்
கேற்றநற் றரும சீல யெனுமவ னில்லா டன்பாற்
றோற்றினு னொருநன் மைந்தன் சுடரிளங் கதிரோ னென்ன. (௨)

ஓதருங் கணித நூற்று மோணர்ந்தவ னுதல லாலத்
தாதையு மவனு தித்த சாதக மெண்ணிக் கண்ட
போததி லீரெட் டாண்டிற் பொருந்துவன் மதுவைத் திண்ண
மாதிரு காமி யாவன் வலியகோ வதையுஞ் செய்வான். (௩)

என்றொரு பொல்லா யோக மிருந்தவா கண்டவன் றேனு
மன்றுதொட் டதுவே சோக மாகியா ருயிரை மாய்ப்ப
நின்றவப் புதல்வன் றானு நெடிதயர்ந் துறுக டன்க
ளொன்றொழி யாமற் செய்து முடித்தபின் பொருநாட் டன்னை. (௪)

தனக்குமுன் னெழுதி வைத்த சாதகப் பயனை நோக்கிக்
கனக்கமா துயர மெய்திக் கருதரு மிந்தப் பாவ
மெனக்குவந் தெய்தக் கெட்டே னேதினுற் றீரு மென்று
மனக்கவ லைப்பட் டொன்றை மதித்தனன் மறையோன் மைந்தன்.()

மற்றமா பாவ மன்றி வருந்திநின் றெம்மைச் சாலப்
பெற்றதா யரைக்கு றித்த பெரும்பழி தானுமிவ்வூ
ருற்றிடி லன்றே சாரு மாதலா லுரைத்த கால
மற்றிடு மளவும் விட்டிங் ககல்வதே யறமென் றெண்ணி. (௬)

வேறு.

அவனு மப்பதி யகன்றுசென் றணுகியா ரூர்வாழ்
சிவன டித்தலத் திருக்குளம் படிந்துசென் றேத்தி
நவந திக்குயர் காவிரி நன்னதி யாடிப்
புவன நத்திரு மருதொடு குடந்தையும் போற்றி. (எ)

அங்க கன்றுபோய்ச் சிவகங்கை யாடியம் பலத்துட்
சங்க ரன்றனைப் போற்றிமேற் சானவி தோய்வான்
பொங்கு மன்புகொண் டிடைச்சுரம் புக்கவா லயங்க
ளெங்கு மேத்திநற் காசியை யெய்தின னெய்தி. (அ)

காசி வாழ்மணி கன்னியங் கங்கையும் படிந்தவ்,
வீசர் தாள்பணிந் தரும்பிர யாகைசென் றிழிந்து
மாசி லாக்கயை தன்னினுந் தோய்ந்துதன் மரபி
னூச மானவர்க் காங்குறு கடன்களு நடத்தி (௯)

நடத்தி நின்றவப் புதல்வனு நானிலத் தினினு
மெடுத்த வாக்கையீ டேறிய தின்றென வெண்ணித்
தொடுத்த வார்வமோ டிப்படிச் சொல்லருந் தீர்த்த
மடுத்தி றைஞ்சினன் மீளவு மாலய மநேகம். (௧0)

தேய மெங்கணு மிவ்வணந் தீர்த்தயாத் திரையி
னேய மாய்த்திரி காலையி னிகழ்த்துமா பாவ
மேய சாதகந் தனைமறந் தெண்ணிரண் டாண்டு
மாய தென்றவ னுண்டுழ வைந்துசென் றளவில். (கக)

தன்பெ ரும்பதி கண்டிடத் தயங்குபே ருள்ள
மன்பு கொண்டெழ மீண்டுவந் தணைந்தன னூர்
நன்பெ ரும்பதி யதனிடை நாடின ரிவனை
முன்பு போலல நேர்ந்ததுன் முதுபதி யென்றார். (கஉ)

பேணு மவ்வுரை கேட்டவப் பிரமசா ரியும்போய்க்
காணு மாசையாற் றன்பதி கடிதுசென் றணைந்தான்
கோணு வொன்றிலா தழிந்தவத் தடம்பதி காட்ட
நாணு மாறென ஞாயிறு மேற்கட லணுக (கங.)

வேறு.

மன்னிட மைந்த னிவ்வா றப்பதி தன்னில் வைகு
மன்னையும் பரிப்பா ரன்றி யலர்புகழ் மரப ழிந்து
முன்னுறு மிருக்கை மாறி முயங்கரு மற்றோ ரில்லந்
தன்னிடைத் தன்றன் மூப்பா விருந்தன டமியே சால. (கச)

அந்திநன் னியதி முற்று மாங்கவன் முடித்தி ராம
சந்திர புரத்துட் செல்லத் தலைதடு மாறி யாவு
நொந்தறக் கிலமாய்ப் போய நேர்வெலா நோக்கிப் பின்னான்
முந்துற விருந்த வில்ல நேடியு முழுதுங் காணான். (கரு)

பெருந்துய ரெய்தி யாவும் பேரிருள் கழிந்தா லாமென்
றிருந்தவ னெழுந்து மிக்காங் கிருந்திடு மில்லந் தோறும்
வருந்திய பசியா லையம் வாங்கியங் கதனை மீள
வருந்துதற் காக மற்றோ ரகத்தினி லணுகச் சென்றான். (கசா)

ஆங்கொரு நூலி ழந்த வரிவையைக் கண்டு தன்ற
னீங்கரு மன்னை யென்னு நினைவொரு சற்று மின்றிப்
பாங்குட னவளை நோக்கிப் பசிக்கியான் பலிகொண் டுற்றே
னீங்கிதை யருந்தச் சற்றிங் கிடந்தர லாமோ வென்றான். (கஎ)

யென்றவன் றன்னை நோக்கி யிவளுமாங் கவனை மைந்த
னென்றறி யாமல் வேறொன் றெண்ணிநின் றதற்கி சைந்தோ
மென்றவன் றனைய ழைத்தாங் கிருத்தியே யிதத்தில் வேணு
மென்றவெஞ் சனங்க ளீந்தாங் கூட்டின னின்பம் பொங்க. (கஅ)

சாலவாங் கவனு முண்டு தாபத்திற் றண்ணீர் வேண்டும்
வேலையாங் கவளுங் கண்டு மேவுதற் கிதுவே வேளை
வாலனே தவத்தின் மிக்கான் வறிதிவன் மருளா னென்றங்
கேலவார் மதுவைத் தண்ணீ ரென்றெடுத் தவனுக் கீந்தாள். (ககூ)

ஈந்தவம் மதுவைத் தண்ணீ ரென்றருந் தாபந் தன்னா
லாய்ந்திடா தவனு முண்ட வளவிலுன் மத்த னாகி
வாய்ந்ததோர் தடிகைப் பற்றி மருங்குற நின்ற கோவைப்
பாய்ந்துசென் றடித்துக் கொன்றான் பகர்வதோ கள்ளுண் பாவம். ()

வேறு.

ஆயவன் பரவச மவளுங் கண்டடைக்
காயிலை யடக்கியக் காளை தோள்களிற்
றோயவன் கொங்கையின் றுணைய ழுத்தியப்
பாயலி னினைந்தவப் படிமு டித்தனள். (உக)

மன்னு காதல் வழியி னெடும்பொழு
தன்ன வண்ண மவள்பயில் பாதகந்
தன்னை யந்நிசி கண்டு தரித்தில
தென்ன நீங்கி யிருள்புலர் காலையில். (உஉ)

வாங்கிமுன் னருந்திய மதும யக்கமு
நீங்கவப் புதல்வனு நினைவு வந்துசெய்
தீங்கினை யெண்ணியே சிந்தை நொந்தற
வாங்கவ டன்னைநீ யார்கொ லென்றனன். (உ௩)

வேறு.

என்று கூறுமப் புதல்வனை யிவளெதிர் நோக்கி
நின்று கூறுவாள் கணிதநூ னிகழ்த்துமிப் பதியி
லொன்ற றத்தெரி மறையவ ரொருவருண் டவர்க்கே
யன்று கைகொடுத் தணைந்திடு மனைவியா னறையில். (உ௪)

என்னி டந்தனி லவர்தமக் கிரவிபோ லொருசேய்
முன்னு தித்தன னவரவன் சாதக முற்றுந்
தன்னி லெண்ணியே மதுவுண்டு தடிவனோர் பசுவை
யன்னை தன்னையும் புணர்வனென் றுங்கதிற் கண்டார். (உரு)

மண்டு தீவினை யிவ்வண மைந்தனுக் கெண்ணிக்
கண்ட தாதையு மாங்கதே கடும்பிணி யாகக்
கொண்டு மாயவம் மைந்தனுங் குறித்தபின் பதனை
யெண்ட ரும்பர தேசம தெய்தினன் யானும். (உசு)

உரிமை பூண்டவக் கணவனு முகந்தமா மகவும்
பிரிந்து போயபி னிவ்வணம் பேருல கினின்முன்
றரும சீலயென் றிருந்தயான் றனித்தரும் பாவ
கரும சீலயே யாயின னென்றவள் கழற. (உஎ)

கன்ன வேதன மாயவள் கழறுமவ் வாய்மை
தன்னை யன்றவன் கேட்டென் றந்தைசொன் னினையா
வன்னை யென்றறிந் தவடனை யையர்முன் கணிதஞ்
சொன்ன வாய்மைமெய் யாயதந் தோவெனச் சொல்வான். (உஅ)

மதுவ ருந்தின மன்றியுங் கோவுடல் வதைத்தோ
மதுவு மன்றிநம் மன்னைதோ ளணையவு மென்னே
யிதுவு மற்றொரு பிறவியிங் கிருந்தவா மோக
விதியி தென்கொலோ வதிசய மெனவுடல் வெகுண்டான். (உகூ)

எரிந்தெ ழுங்கொடு நரகுறு மிந்தமா பாவம்
புரிந்து மாருயிர் பரிப்பரோ புவியினிற் கெட்டேன்
றெரிந்தி தற்குமற் றுவதென் றீர்வைகந் தரமே
யரிந்து வெவ்வுடல் மாய்ப்பதென் றங்கைவா ளெடுத்தான். (௩0)

பூட்டி யாங்கவன் கழுத்தரி போதினிற் சுருதிக்
காட்டில் வாழர னிவனையோர் கரத்தினாற் றுமே
யூட்டி தட்டுமுன் வாள்பிடித் துயர்திரு வாக்கால்
வாட்டி றந்தவிர் தவிரென வந்துமுன் னின்று. (௩க)

சிந்தை வெந்துயர் விடுதிநீ செய்தவல் வினைக்கா
யந்த மின்னர கடைவமென் றஞ்சன்மா மறையோய்
நந்த மாமணி கன்னியும் வேதநன் னதியும்
வந்து மூழ்குடன் றீருமவ் வல்வினை மற்றும். (௩உ)

என்னு மிவ்வுரை யருளிய விறைவனை யிவனு
முன்னர் நோக்கியென் வல்வினை மோசன மாமே
லன்னை செய்வினைக் கோவென வாங்கவ டனக்குஞ்
சொன்ன விப்பெருந் தீர்த்தநீர் தோயுமுன் மாயும். (௩௩)

என்று மீளவு மருள்செய்தாங் கிறைவனு மேக
நின்ற மாமறை யாளனு நெடிதுகந் துளத்தி
லொன்று மன்பினு லீன்றவ ளுடன்றிரு மறைசை
சென்று மாமணி கன்னியாந் தீர்த்தமதாடி. (௩ச)

தாயருட னிப்பிரம சாரிகதி பெற்ற
தாயதொரு மேன்மைதனை யம்புவியி னூரு
நேயமொடு கேட்பவர்நி கழ்த்துமவர் முன்னு
னேயுமக பாதகமொ ழிந்தடைவ ரின்பம். (௪௧)

பிரமசாரிச்சருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம் ௧௦-க்குத் திருவிருத்தம் ௬௭௨.

---

## கோலாகலச்சருக்கம்.

அத்த லத்தடைந் தந்தணச் சேயிவண்
சித்தி பெற்ற திறனுந் தெரித்தனம்
யத்தி யற்றமா பாவிகோ லாகலன்
முத்தி பெற்ற முறைமை மொழிகுவாம். (௧)

இன்ன வண்ண மியம்பிய சூதனை
முன்ன நோக்கி முனிவர் மொழிகுவார்
சொன்ன மேன்மைகள் யாவுமுட் கொண்டன
மன்ன வற்றுளோ ராசங்கை யுண்டரோ. (௨)

ஓது மப்பதி மேன்மைகொண் டுள்ளறி
யாது செய்வினை யன்றி யறிந்துசெய்
பாத கங்களும் பாறுமென் றோதுதற்
கேது வேதென் றியம்பு மெமக்கரோ. (௩)

வேத நன்னதி தன்னினும் விரும்பிநின் ருடித்
நீத கற்றநற் ருயுடன் சென்றுமா மறைசை
நாத னைப்பணி வான்றிருக் கோயின்மு னண்ணிப்
பூத லம்படப் பணிந்தடி போற்றிசெய் தெழுந்தான். (கரு)

வேறு.

வேதநா யகனே போற்றி விண்ணவர் தலைவா போற்றி
மாதொரு பாகா போற்றி மறுசம யங்கண் மாளப்
பேதகஞ் செய்வாய் போற்றி பிஞ்ஞகா போற்றி யான்செய்
பாதக மனைத்துந் தீர்க்கும் பராபரா போற்றி போற்றி. (கசு)

என்றவன் போற்றி நிற்ப விவன்றனை யீன்ற மாது
குன்றமர் வல்லி பாதங் கும்பிட்டு வணங்கி யாவு
மொன்றற வகுத்துங் காத்து மொழிப்பதற் குலகுக் கொன்ருய்
நின்றகா ரணமே போற்றி நிமலையே போற்றி யென்ருள். (கஎ)

இறைவனை யிறைவி தன்னை யிவ்வண மிருவர் தாமு
முறைமுறை யோற்றி செய்ய முகிழ்த்தரு ளிவர்பாற் போத
மறைவனத் தரனு மாது மகிழ்ந்திரு வருக்குந் தந்தங்
குறைவறு வடிவி லொன்ரும் பதம்பெறக் கொடுத்தா ரங்கண். (கஅ)

வேறு.

மூதுலகி லிப்படிமொ ழிந்திடவொ ணுமா
பாதகரு நாளுமுறு பத்திநெறி தப்பா
மாதவரு மேறரிய வண்பதம டைந்தால்
வேதவன மேன்மைகள்வி ளம்பவெளி தேயோ (கக)

அன்றியுல கத்திலறி யாதுபுரி பாவ
மின்றியும றிந்தெவரி யற்றுபழி தானும்
பொன்றியிடு மிப்பதிபு காரெனிலி யாமற்
றொன்றினியு ரைப்பதிலெ னுண்மையிது வுண்மை. (உ0)

கேட்ட சூதனுங் கேடின் முனிவர்தங்
கூட்ட நோக்கிநீர் கூறிய சங்கைநன்
ரூட்டு மாறிதற் குத்தர மொன்றியான்
றீட்டு கேனது கேண்மின் றெளிந்துளம். (ச)

வேறு.

இன்றுநீர் கேட்ட மாற்ற மியாவரு மறிதற் கெட்டா
நின்றதோர் மேன்மை யாகு நிகழ்த்திலீ துலகம் யாவு
மொன்றறத் தெரிந்த மாலு முணர்ந்திடா நிதன்ற னுண்மை
சென்றுமுன் னரனைக் கேட்பச் சிவனவற் குரைத்த தாமால். (ரு)

தரையின்முன் வளத்தான் மிக்க சாகலம் புரத்து வேளாண்
மரபினில் வந்தோன் கோலா கலனென வழங்கும் பேரோ
னொருவன்மா பாத கங்க ளியற்றிடு முளத்தோ டோங்கி
மருவுநல் லுருவம் வாய்ப்ப மலர்க்கணைக் கிலக்க தானான். (சா)

அந்நகர் காத்த் ளிக்கும் பாத்திப னென்னு நாம
மன்னவன் றனது காதன் மைந்தனுக் கிவனைக் காப்பாய்ப்
பின்னுறத் திரியென் றேவப் பெருகுமவ் வலியி னாலுந்
தன்னிக ரறநின் ரோங்கித் தருமனக் களிப்பின் மிக்கான். (எ)

வேறு

ஆன போதினி லாங்கவ னலர்க்கணை யழலான்
மான மற்றற நெறியெலா மாய்த்துள மயங்கி
யீன மாதர்க ளுயர்ந்தவர் பிறர்மனை யெனுமற்
றூன ணர்ந்தனு தினமவர் தடங்கொங்கை மூழ்கி. (அ)

காத னீடவே காமுகர் கோட்டியிற் கலந்து
போத மாமது வுண்டுடன் பொருவிலா வேசி
மாத ரெண்ணிலர் சூழ்தர வேண்டுவ வழங்கிப்
பாத கங்களே நியதியாய் நாடொறும் பயின்றான். (கூ)

தந்தை தாயுட னுற்றவர் சாற்றவுந் தக்கோர்
முந்தை மூதுரை வழியினுன் மொழியவுங் கேளா
திந்த வண்ணமே யீன்றவ ரிருவர்முன் றேடு
மந்த மில்பொரு ளொன்றற வழித்தன னவத்தில். (க0)

அழித்து மீடரு வரிவைய ராசையுட் பட்டுப்
பழித்தி றம்பகை பாவமும் பயமுமொன் றில்லா
தொழித்த ரும்பொருள் வேண்டிநின் றூர்தொறு மிரவில்
விழித்த வன்றினங் களவுகொள் வேலையி லொருநாள். (கக)

வேறு

கண்ட வன்றனை யந்நகர் காவலர் பிடித்துக்
கொண்டு டன்றலை கொய்வதாய்க் கொடுசெலும் போதின்
மண்ட னிற்பெய ரானவன் மைந்தனென் றிவனைத்
தண்டி யொக்கலர் தவிர்ப்பவக் கொலையினுந் தவிர்ந்தான். (கஉ)

மற்று வேறொரு கதியுமி லாங்கவன் மயங்கிப்
பெற்ற தாயெனுந் தமியவள் பெண்மைகொண் டழவே
நற்றி நீயெனை நணுகென நவின்றுமுன் னவள்கைப்
பற்றி யீர்த்துடன் றழுவினன் படர்நெடுந் தோண்மேல். (கந)

தழுவி நின்றவன் கோட்டிக டனைச்செயக் கண்டு
வழுவி தென்றவள் வெருவியம் மைந்தனை நோக்கிக்
குழவி யாயின ரிப்படித் தாயர்தோள் கூடி
யழிவு செய்யவு நினைவரோ வவனியி லந்தோ. (கச)

மைந்த வென்கொனீ நினைந்தனை வனத்திடைச் சென்ற
வந்த வேலையின் மோகினி யடர்ந்ததோ வன்றிச்
சிந்தை மாறிட வஞ்சகர் செய்ததோ வறியே
னிந்த வல்வினைக் கொத்ததென் யாவர்தற் பனையோ. (கரு)

அன்றி யன்னையா ரரசரா ரய்யரார் மகவா
நன்றி யென்பதென் நீயதென் னண்பரார் பகையா
ரொன்றி நிற்பதே தழிவதே துயர்ச்சியே திழிவே
தென்றி சைக்குமுன் மத்தர்த மெண்ணமென் ணினையோ. (கசு)

என்று வேறுவே றின்னன விசைக்குமீன் றவளை
நின்ற மைந்தனு மாசையா னீத்தில னோடிச்
சென்ற வன்பினாற் கரத்திழுத் தமளிமேற் சேர்ப்பக்
கன்று முள்ளமோ டவளறக் கழறுவாள் பின்னும். (கஎ)

ஆவி தென்னெனை விடுவிடு மைந்தனீ யணுகிற்
பாவ முந்துறு மந்தணர் பழிமுத லெனினுந்
தாவ ரும்பெருஞ் சாந்தியாற் றவிர்ந்திடுந் தாய்தோண்
மேவு மிப்பழி வினவிலோ விருமையு மீளா. (கஅ)

ஆத லாலிது தவிர்தியே வருமுனி யாக
வோத லாமுனை யெனையலா துனக்கயல் வேண்டு
மாத ராரெனின் வருவிப்பன் மற்றவ ரிடத்துன்
காத றீருதி யிந்தமா பாதகங் கருதேல். (ககூ)

எனவி சைப்பவு நின்றில னீன்றவ ளொருமன்
மனம தெண்ணிய வண்ணமே புரிந்தனன் மறுவுங்
கனம ருந்தினன் களித்தனன் காமநோ யவரை
வினவி லொன்றறி யாரென விளம்புதல் பொய்யோ. (உ0)

அதுத னைத்தனை யீன்றவ ளறிந்தன ளாறுகண்
டிதுத னக்கிடை யூறிவ னெனவவற் றடிந்தான்
விதிய தெப்படி வெவ்வினை விளைப்பதங் கென்றால்
மதியு மிப்படித் துணிவது மனுவழக் கன்றோ. (உக)

இன்ன வாறவ னீன்றவ னெனுமலே கொன்றிட்
டன்னை தன்னையு மனையவ ளாக்கின னதனை
மன்னு டொக்கலர் கேட்டுமோ பாவியென் றிவனித்
தொன்ன கர்க்குளா காதெனத் துரந்தனர் துர. (உஉ)

துரந்த போதினும் பயந்தவத் தோகையை விடாமற்
கரந்து கொண்டுதே சாந்தரங் கடந்தருஞ் சுரங்க
டிரிந்து மாங்கவ ளிடத்தனு போகமே திரியா
தருந்தி யீன்றனன் மகவிரண் டறமொழி கொடியோன். (உ௩)

தாயு முன்செய்தீ வினையினாற் றுனதற் குடன்பட்
டேய வன்றனோ டிணங்கிட வின்பமுற் றவனுந்
தேய மெங்கணும் வனந்தொறுந் தினமொரோ ரிடமாய்ப்
போய வன்றிரிந் ததன்பினோ ரடவியுட் புகுந்தான். (உச)

ஆங்க தற்குளோர் குடிசிலு மமைத்ததில் வைகி
நீங்க ரும்பசிக் கனுதின நிகழ்த்துமவ் வடவி
தாங்கு புள்ளொடு மாக்களே துணித்ததின் றசைகள்
பாங்கி னுலுண வாகவும் பரித்தவன் மேலும் (உ௫)

கோள னாகியும் விடனுமாய்ச் செய்நன்றி கொன்றந்த
ணாளர் தங்களிற் றுமறித் தனேகரை வதைத்தும்
வேள லர்க்கணை வழிநின்று வெம்பொருட் காக
நாளு மிப்பரி சியற்றின னவிலரும் பாவம். (உ௬)

இனதெ னுமலே தீவினை யிவ்வண மியற்றித்
தனது தாரமாய்த் தாயரைத் தான்புணர்ந் தந்தப்
புனம கன்றுபின் றூழ்வினை புகாதனால் வேத
வன மடைந்தனன் முன்செயும் புண்ணிய வசத்தால். (உஎ)

அங்க ணூரண நதிக்கரை யதிலவ னிரண்டு
திங்கள் வைகியாங் கிறந்தனன் றேவயோ கத்தால்
வெங்க ணீள்வய மாவந்த வேலையிற் பயந்த
மங்கை தன்னையு மைந்தர்க டம்மையம் வதைப்ப. (உ௯)

ஆக நால்வரு மிவ்வண மாருயிர் துறப்ப
மாக நின்றுதன் றூதரை மறலிமுன் விடுப்ப
வேக மாகிவந் தவர்களும் வீசிவெம் பாச
நோக வேபிணித் தவர்தமைத் தென்றிசை நோக்கி. (உக)

குறையு மின்னுடல் கொல்லுமின் குத்துமின் றாக்கி
யறையு மின்னிவன் றன்னையென் றாற்றிவை தரணிக்
கிறைவன் முன்கொடு செல்வதற் கேகுமவ் வேலை
மறைவ னத்தர னுணர்ந்துடன் கைலைமா மலையில். (௬0)

நின்ற நந்தியை நோக்கிநந் நிகமகா னனத்திற்
சென்றி ருந்தவ ரிறந்தவர் தீவினை யேது
மன்று போமதி விறந்தகோ லாகல னவனை
யின்று வெஞ்சமன் றூதர்கொண் டேகுவா ரதற்கு. (௬க)

ஒல்லை நங்கண ளுதரை யோடவிட் டியம
னெல்லை செல்லினு மவன்றனை யீங்குகொண் டணுகச்
சொல்லி யேயென நந்தியுஞ் சொற்றவப் படியே
வெல்ல ருங்கண நாதரைத் தென்றிசை விடுத்தான். (௬உ)

இலங்கு தேர்மிசைக் கொண்டவ ரோல்லையி லேகி
விலங்கி டாவகை யமபடர் வாதையே விளைப்ப
மலங்கு மன்னையு மைந்தருந் தானுமாய் வழிமேற்
கலங்கு கின்றகோ லாகலன் றன்னைமுன் கண்டார். (௬௩)

கடிது சென்றரன் கணங்களுங் காலதூ துவரை
யடியெ டாவகை தாமறித் தவர்தமை நோக்கிக்
கொடிய னென்றுநீர் கொடுசெல்கோ லாகலன் றன்னை
விடுமினென்றனர் நமன்றமர் வெகுண்டுமுன் சொல்வார். (௩௪)

கொன்று தந்தையை மதுவுண்டு தாயர்தோள் புணர்ந்த
தன்றி யுங்கொடும் பாவமே யனுதின மியற்றி
நின்ற பாதக னிவன்றனைச் சிவபுரி நீங்க
லின்று தான்கொடு செல்வதற் கேதுவே தென்றார். (௩௫)

அந்த கன்கண முரைப்பவீ தரன்கண முரைப்பா
ரெந்த வல்வினை யியற்றினு மறைவனத் தெல்லை
வந்தி றந்தன னுதலான் மறலியூர் புகச்சம்
பந்த மில்லைமே யிவன்றனை விடுமெனப் பகர்ந்தார். (௩௬)

அங்க ணன்கண முரைப்பவவ் வந்தகன் கணங்கள்
சங்கை பண்ணிடா தடர்ந்துகோ லாகலன் றன்னைப்
பொங்கு நீணர கேற்றுவான் புகுவது கண்டு
சங்க ரன்றமர் வெகுண்டுடன் றண்டுகொண் டெதிர்ந்தார். (௩௭)

வேறு.

வேலடர வேவிவடி வாளிமிக நூறிச்
சூலமத னுலுடறு ணித்துமிக நோகச்
சாலநம தூதர்படை சாடியுழ வோனைப்
பாலகரு ழத்தியொடு பாசம்விடு வித்தார். (௩௮)

சித்தர்முத லெண்ணரியர் தேரிலிவர் தம்மை
வைத்தநில ரம்பையர்கள் வாழ்த்தவிமை யோருங்
கைத்தலமெ டுத்தடிதொ ழக்கயிலை வாழு
மித்தர்திரு முன்புகொடு சென்றுநிகழ் வித்தார். (௩௯)

தாவுசில னாண்மறைத யங்குபதி வைகிச்
சீவனறு மன்றுசெவி மீதுசிவ நாம
மேவவருள் பெற்றுடல்வி டுத்தனர்க ளென்றாற்
றேவர்பெரு மானுலகு செல்வதரி தேயோ. (௬0)

பேசருமை ரன்றமரு மிவ்வகைபி ணக்கிட்
டாசிலுழ வன்றனைய ரன்பதிகொ டேக
வேசருந மன்றமரு மெட்டிவனுட னென்பான்
யோசனைக டந்தியம னுற்றபதி யுற்றார். (௬க)

சென்றியம ராசனடி சென்னிகொடி றைஞ்சா
நின்றுமொழி வார்தரும ராசநடு நீதி
யென்றுமிக ழாதபுரி மன்னவநின் னேவ
லன்றுகொடு சென்றுபுக ழாரணவ னத்தில். (௬௨)

வேறு.

அங்கண் மேவுகோ லாகல னுருயிர்
மங்கை மைந்தர்க டம்மொடும் வாங்கியே
பொங்கு பாசம் புகப்பிணித் தேவிடா
திங்கு யாங்கள்கொண் டேகு மதரிடை. (௬௩)

மாசி லாத வரன்றமர் வந்தெமைப்
பூசல் கொண்டு புகலரும் பாவியைப்
பாச நீக்கிப் பருமணித் தேரில்வைத்
தீசர் வாழுங் கயிலைகொண் டேகினார். (௬௪)

அன்ன வாறுகண் டத்திறம் யாவுநின்
சன்னி திப்புறஞ் சாற்றுவான் வந்தன
மின்ன வாறவ னேகிய காரண
மன்ன நீயலான் மற்றா றறிகுவார், (௬௫)

என்று தூத ரியம்ப வியமனுந்
துன்று வெவ்வழற் றூவி விழிகளா
னின்ற சித்திர குத்தனை நின்சிகை
யொன்ற றத்தெரிந் தொல்லைவா வென்றனன். (சகூ)

சென்ற வன்கணக் கெல்லாந்தெ ரிந்துபோய்ப்
பொன்று மட்டுமோ பாவம்பு ரிந்ததே
யன்றி நல்வினை யாயொன்றி லானென
நின்று சித்திர குத்த னிகழ்த்தினன், (சஎ)

சொன்ன போதந் தகனுஞ் சுடரெரி
யென்ன வேகித் தெளிந்துமா பாவியா
மன்ன வன்சிவ லோக மடைவனேற்
பின்னை யிங்கிருப் பேதெனப் பேசியே. (சஅ)

நிதமு ரைத்திடு சித்திர குத்தனு
முதன்மை யாம்பிணி முன்னூற் றறுபதும்
விதம தாநல் வினைதீவி னைகளு
முதவி யாக வுருக்கொண் டடன்செல. (சகூ)

மறலி யுந்தண்ட முத்திரை வண்கைகொண்
டறவு நொந்ததி கார மகற்றுவான்
கறைகொண் மேனிக் கடாமிசைக் கொண்டுநீ
ளிறைய வன்வெள்ளி மால்வரை யேகினன். (ருo)

கதியுதவு கைலைமலை யடைந்தா னந்தங் காட்டுமொரு மண்டப த்திற் கங்கை யாதி, நதிவிரவு முனிவர்தொழ யோகர் சித்தர் நாரதர் தும் புருமுதலோர் நாத கீதச், சதிபரவ மலைமகளங் கொருபா லாகச் சருவதோயத் திரமண்ட லத்தி ருக்கு, மதிதவழ்செஞ் சடைமுடியெம் வள்ள றன்னை மறலியுந்தூ ரத்தனுக வருமுன் கண்டான், (ருக)

கண்டவுடன் ருெழுதங்க ணிற்ப நந்தி காட்டவரன் கருணை விழி காட்ட வந்து, தண்டபட முத்திரைக டிருமுன் வைத்துச் சங்கரா போற்றியிந்தச் சகம னைத்து, மெண்டிசையுந் தனதுருவாய் நின்ருய் போற்றி யிறையவனே யடியவர்கட் கெளியாய் போற்றி, யண்டரு டன் மாலயனுக் கரியாய் போற்றி யரகரவங் கணபோற்றி யமலா போற்றி. (ருஉ)

என்றுபணிந் தெழுந்துபுகழ் மறலி தன்னை யிறையவனுந் திருவாக்கா லியம ராச, கன்றிமுக முத்திரைநற் றண்டம் வைத்த காரண மென் னெனமறலி கைகள் கூப்பி, நின்றுபரா பரநினது கணங்கள் வந்து நிலைகெடவே பொருதெனது படரை நீக்கிக், கொன்றனவுந் தின்றனவு மன்றித் தாய்தோள் கூடுகொடும் பாவியையுங் கொண்டு போந்தார். (ருந)

இனையனமா பாவிசிவ லோக மேறி லினியெனக்கே னதிகார மியம தண்டந், தனையுலகி லிவனன்றிப் பெறுவர் யார்கொல் சற்றுமினி யெனக்காகா ததனுக் கேற்க, நினைதுதிரு வுளந்தனக்கு வந்த பேரை நிறுத்தியடி யேற்குனது பாத நீங்கா, தனையதொரு பணிவிடைதந் தேவல் கொள்ள வருடருவா யென்றுதிரு வடியில் வீழ்ந்தான். (ருச)

ஆங்கவனை யிறையவனுங் கருணை வாக்கா லழைத்தருளி யருகுவர வவன்றன் கோப, நீங்கும்வகை சிறுமுறுவ லுதவா நின்று நிகழ்த்திடுவா னந்தகநின் னிகரில் செங்கோற், பாங்கினுக்கென் ருருக்காலு மிடரே யில்லைப் பகர்ந்திடு கோ லாகலன்மா பாவி பொல்லாத், தீங்குவினைத் தன்னையர்தோ ளறிந்துஞ் சேர்ந்தான் செப்புநர கனைத்துமவன் சேர்தற் காவே. (ருரு)

வேறு.

என்னி னும்மறை வனத்தவ னேகிய வாறு
தன்னில் வைகியாங் கிறந்தன ளுதலாற் ருய்தோ
ளுன்னி னின்றமா பாவமு மொழிந்துமெஞ் ஞான
மன்னி யெய்தினன் கைலையம் மனைமைந்த ரோடும். (ருசு)

அறைவ தற்கரி தெமக்குமத் தலநதனில் விசிட்டங்
குறைவி லாக்கொடும் பாதக ராயினுங் குறித்த
மறைசை யுட்கண மிருக்கினு மரிக்கினும் பாசத்
துறவ றுத்தெமைப் பெறுவர்மற் றுன்வச முறுர்கள். (ருஎ)

இன்று தொட்டுநீ யாதலான் மறைவனத் திருந்தோர்
பொன்றி ஞேரெவ ராயினு மவர்வழி போக
லன்றி மற்றுல கனைத்துமுன் போலதி கார
நின்றி யற்றிடு தண்டமுத் திரையென நிமலன். (ருஅ)

அண்டர் நாயக னிவ்வண மருள்செய மீண்டுந்
தெண்ட னிட்டவன் றிருவுளம் பிழைக்குமென் றஞ்சித்
தண்ட முத்திரை படமுதற் றன்கரத் தெடுத்துக்
கொண்டு நின்றுளங் கோயமுற் றுருமொழி குறிப்பான். (ருகூ)

வேறு.

எண்ணருமா பாவிசிவ லோகமேறி லிறையவனின் றிருப்பாத மிறைஞ்சிநின்று, மண்ணிடைநற் றவஞ்செபங்கள் பூசை வேள்வி மாதானஞ் சாந்திமுதன் மறைவ குத்த, புண்ணியமென் றினியுலகி லியற்று வார்யார் போயெவரு மறைவனத்தோர் கணமே வைகி, னண்ணிடுவர் சிவபதமே யென்றுற் பின்னை நரகுதனை யடைபவர்யார் நவிலுங் காலே. (சுO)

நின்னடியார்க் கடியேனே திருமுன் னின்று நிகழ்த்திடுவே னென்றுலு நிமல னேநீ, முன்னடிமைக் குதவுமதி காரத் தாள்வால் மொழிந்தனனுன் மூதலகிற் றன்னை யாளு, மன்னருளம் பிழைத்தோரிற் பிழைத்தோ ருண்டோ மற்றதிலென் சொற்றவறுண் டேனு மாற்றி, யென்னபடி திருவுளமவ் வாறே செய்வ தென்றுவிடை கொண்டிறைஞ்சிநமனும் போந்தான். (சுக)

வேறு

போனபி னந்தக னும்பு ராந்தகன்
மான மற்றிடு மங்கை மகவுட
னான கோலா கலனுக் கழிவறத்
தான ளித்தனன் றன்னடிப் போதரோ. (கஉ)

அன்னை தானென் றறிந்தும்பு ணர்ந்திட
மன்னு கின்றமா பாவமு மாயுமேற்
பின்னை மற்றுள வல்வினை பேருமென்
றுன்னி யத்தலத் தோதிட வேண்டுமோ. (கங)

வேறு.

பேறு பெற்றகோ லாகலன் றனதுநற் பெருமை
கூறு கின்றவர் கேட்பவர் குருதற்ப முதலாய்
வேறு வேறுள மறிந்துசெய் மிருந்தபா தகமு
நீற தாமவர் சிவபத நிச்சய நிகழ்வர். (கச)

கோலாகலச்சருக்க முற்றிற்று.

ஆகச் சருக்கம் கக-க்குத் திருவிருத்தம்-எஙச.

## மாவலிச்சருக்கம்.

நாலாகிய வேதவ னத்தினி னற்கதிசேர்
கோலாகலன் மேன்மை யுறுங்கதை கூறினமான்
மேலாகவு மாவெலி மேவி விளக்கினைமுன்
னூலாவகை செய்தருள் பெற்றமை தானுவல்வாம். (க)

வேதாடவி மீதொரு மாமுனி வேண்டுகொளான்
மாதாளு மணுளனை யனுதினம் வகைவகைநின்
றோதாகம விதிமுறை தருநெறி யொழியாமற்
போதானுயர் பூசனை புரிபூ சுரரொருநாள். (உ)

வேறு.

அருத்த யாம மளவு மருச்சனை
வருத்தி யீசற்கு மாறுவி ளக்கையுந்
திருத்தி வைத்துத் திருக்காப்பு வாயில்கள்
பொருத்தி யச்சிவ வேதியர் போயபின். (ங)

பூதம் யாவு மொடுங்கும் பொதுவிரா
மாதொ டீசன் மகிழ்தனி வேளையி
ளுதன் முன்றிரு நந்தாவி ளக்கொளி
மீதொ டுங்கி மெலிந்தவி யாவா. (ச)

அன்ன வாறுகண் டங்கண னம்பிகை
தன்னை நோக்கியித் தாழ்சுட ரொல்லையிற்
றுன்ன லம்பெறத் தூண்டினர்க் கின்றுயா
மன்ன னைத்துல கெல்லாம் வழங்குவம். (ரு)

எனவி சைப்ப விறையுமை யீங்கினிக்
கனம ணிப்பொற் கபாடந்திறந்துவந்
தனக விச்சுடர் தூண்டிநின் றாரரு
டனையு கப்பவர் தாமெவ ரென்றனள். (சு)

இந்த வண்ண மிறையொ டிறைவிகூ
றந்த வேலையி லாலயத் துள்ளினு
முந்தை நல்வினை மூட்டிட வோரெலி
வந்து தீபத்து மண்டிநெய் யுண்டதால், (எ)

நாக்கி னெல்லை பருகநெய் நாசியுட்
டாக்க வத்தழ லப்போ தவித்தெலி
மூக்கை நூக்கிட வேயது மூலமா
யாக்க வச்சுடர் தூண்டிடு மன்னதாய். (அ)

தூண்ட விவ்வகை தீபஞ் சுடர்விட
வாண்ட கைக்கும தாநந்த மெய்திடப்
பூண்ட வாமப் புரிகுழல் கண்டதை
மீண்டு மண்ணலை நோக்கி விளம்புவாள். (கூ)

நாய நீர்முன் னவின்ற படியினி
மாயு மூன்றிரித் தூண்டி வருமெலி
தேய மெங்கணுஞ் செங்கோ னடாத்துதற்
கீய வேண்டு மிகலற வென்றனள். (க0)

மலை மடந்தையிவ் வாறுரை செய்யுமுன்
கலையு கந்த கரத்தனு மவ்வெலிக்
குலக மூன்று மொருகுடை யாள்வதற்
கலகி லாவர மன்றருள் செய்தனன். (கக)

எந்தை யிவ்வண மீந்திட வவ்வெலி
யந்த மேனி யகன்றக லாதமுற்
சிந்தை கொண்டு விரோசனன் றேவிபால்
வந்து தித்தது மாவலி யாகவே. (கஉ)

எடுக்க வப்பெய ரெங்கணு மாங்கவன்
றடக்கை நீள்வலி யாலெவர் தம்மை
மடக்கி மூவுல குந்தன தாணையி
னடக்க வாண்டன னாத னருளினால். (கங)

இன்ன வாறுல கெங்கணு மாவெலி
தன்ன தாகத் தகுந்திறை கொள்ளுநா
ளன்ன வன்றன தாணைக் கமரர்கண்
மன்ன வன்வணங் காமன் மறுத்தனன். (கஉ)

கண்ட தற்காகக் கனன்றந்த மாவலி
தண்டெ டுத்துச் சதமக ஞதியா
மண்ட ரோட வடர்ந்தம ராவதி
கொண்டு தற்பதி யாமெனக் கொண்டதில். (கரு)

வான நாடரை மாற்றி யிகலறத்
தான மாயர மங்கையர் தம்முடன்
றேன ருமலர் சேர்நந் தனவனத்
தான போக நெடுநா ளருந்திஞன். (கசு)

அருந்து போது மனுதின மாங்கவன்
வருந்தி வேத வனந்தனில் வந்துவந்
திருந்து முற்செய லெண்ணிநற் றீபமும்
பரிந்தி யற்றிப் பணிந்துநின் றேகுநாள். (கஎ)

## வேறு.

அந்த ரத்தவ ரனைவரு மவன்றனு லறவுஞ்
சிந்தை நொந்துவந் தயனுடன் செப்பவீ தவனுக்
கிந்த வாண்மைமுன் மறைவனத் திறைவனு லன்றே
வந்த தென்றவ னவருடன் வந்தனன் மறைசை. (கஅ)

மறைவ னத்தினின் வந்தயன் வானவ ருடனவ்
விறைவ னைப்பணிந் தேத்திநின் றிமையவ ருலகஞ்
சிறைபி டித்தது மாவலி செய்ததிங் கனைத்து
முறையி டச்சிவன் கேட்டுடன் முகுந்தனை நினைந்தான். (கக)

ஆங்க வன்பர னிளைவெனு மங்குயம் பூட்டி
வாங்கு வானென வொல்லையில் வந்துமுன் வணங்கிப்
பாங்கு கொண்டெனைத் திருவுள நினைந்ததென் பரம
வீங்கெ னுற்செய வேண்டுவ தியாதென விசைத்தான். (உ0)

வேறு.

நீண்டமா லுரைப்பக் கேளா நின்மல னருள்வான் முன்னங்
காண்டகு மித்த லத்துட் கங்குலி லிட்ட தீப
மாண்டிடா நிற்க யாரு மற்றதோ ரெல்லை வந்து
தூண்டுமோ ரெலிக்கன் றீந்தோந் தொல்லுல கங்கண் மூன்றும். (உக)

பொலிதரு மகிழ்வா லீந்த பொருவிலா வரத்தா லந்த
வெலியுமவ் வுருவ மாறி விரோசன னிடத்திற் போய்மா
வலியெனும் பேராற் றோன்றி வானமு மண்ணும் விண்ணு
மெலிவுறத் தனது செங்கோல் வழிபுக வேந்த தாய. (உஉ)

மைந்தரே யெனினு மன்றிச் சகோதரர் மற்றோ ரேனும்
வெந்துயர் நமதன் பர்க்கு விளைப்பரே லவர்க மங்கே
நொந்துறத் துயர்வி ளைப்போ ராதலான் முகுந்த நீசென்
றந்தமா வலித னுண்மை யடக்குதி யமரர்க் காக. (உங)

அடர்த்திடும் வாறு கேளின் றன்றுநா மவனுக் கொப்பிங்
கொடுத்திடு மூலகை யீள வலியினுற் கொணர்ந்த லாகா
தெடுத்ததற் கான மேனி யிரந்துசென் றீய வாங்கி
விடுத்தவன் றனையுங் கொல்லா திருத்துதி வேறெங் கேனும். (உச)

என்றரன் மாய னோடங் கிமையவர்க் கிடரே செய்து
நின்றவ னேனுந் தீபந் தூண்டுமந் நேர்மைக் காகக்
கொன்றிடா திருத்தும் வண்ணங் கூறினன் குவலயத்து
நன்றிதான் சிறிதே யேனு மறப்பரோ நாளு மேலோர். (உரு)

காமனைப் பயந்து வீழக் கனல்விடு கடவு ளேவக்
காமனைப் பயந்த மாலுங் காசிப னிடத்திற் றேன்றி
வாமன வடிவங் கொண்டு மாவலி பாற்போய் வைக
வாமனை யிரப்பான் போலும் வலிபொருள் வாங்க வெண்ணி. (உசு)

வள்ளன்மூ வடிமண் கேட்ப மாயவன் மாய மென்று
வெள்ளிமுன் விலக்கக் கேளா மாயனே விரும்பிக் கேட்கி
லுள்ளதிங் கெதுவு மீவே னென்றுமா வலிநீ ரூற்ற
வெள்ளள விடங்கொ டாம லடியொன்றால் யாவுங் கொண்டான். ()

வேறு.

கொண்டு மற்றடிக் கிடம்பெறக் கொடுத்திடென் றவன்ற
னெண்ட ரும்பொருள் வலிமுதல் யாவையும் வாங்கி
மண்டு பாதலத் திருத்தினன் மாலுமா வலியைப்
பண்டு போலுல கிடர்புகா வண்ணமே பகர்ந்து. (உஅ)

இருத்தி யீவண வீய்ந்திடா யாகமு மெரியா
மரித்த வன்னியிற் சொரிவதும் விதிவழி மறுத்துப்
பரித்து நின்றதோ ரறங்களு மீனபாத் திரத்தில்
வரித்த ளிப்பது மவன்றனக் குணவென வழங்கி. (உகூ)

மாலு மிவ்வண மாவலி யுலகுடன் வலியுஞ்
சால வாங்கிநின் றருள்கொடு தடிந்திடா திவனை
மேலெ ழாமலு மரனருள் விரித்தவப் பரிசே
ஞால மோங்கிட நிறுத்தின னகலோ கத்தில். (௩0)

சாற்றி னெய்நுகர் வான்புகத் தாக்கிய வழலை
மாற்ற மூக்கினை நீட்டிய வெலிக்கருள் வழங்கு
மேற்றி யான்மறை நாதன்முன் னெய்கொடு தீப
மேற்றி நிற்பவர் பெறுங்கதிக் கெல்லையா ரிசைப்பார். (௩க)

சுருதி நாதன்மு னவிதரு விளக்கினைத் தூண்டிற்
பெருகு செல்வமு மக்களும் பெற்றுவாழ்ந் துலருக்
கரச ராகுவர் மேலுமீ தன்றியாங் கவர்முன்
றிருவி ளக்கினை யேற்றிலோ சிவபத மடைவர். (கூஉ)

ஒருவி ளக்கினை யேற்றின ருறுங்கதி கண்டாற்
கருவி ளக்கிய மறைசையங் கடவுண்முன் றினமும்
பெருவி ளக்கமாய்ப் பற்பல பேதமோ டநேகந்
திருவி ளக்கினைப் பார்ப்பவர் செய்தியார் தெரிப்பார். (கூரு)

வேறு.

மற்றுலகின் மாவலிபெ றுங்கதிம தித்தே
யுற்றபடி கண்டடைவி லோதியச ருக்கங்
கற்றவர்ப டிப்பவர்க ருத்துறநி னைப்போர்
பெற்றிடுவர் மேலவர்பெ றற்கரிய வின்பம். (கூசு)

மாவலிச்சருக்கம் முற்றிற்று

ஆகச் சருக்கம் கஉ-க்குத் திருவிருத்தம்-எஎ0.

---

## சவுதாசச் சருக்கம்.

மாசி லாத மறைசையுண் மாவலி
தேசு பெற்றமை செப்பின மேற்சவு
தாச னென்னு நரபதி சாபமுன்
ஞச மாயின வாறு நவிற்றுவாம். (க)

முன்ன யோத்தி நகரின் முகில்வணன்
றன்னை நேர்சவு தாசனென் பானொரு
மன்ன வன்கதி ரோன்றன் மரபின் வந்
தின்ன றீர்த்துல கெங்கணுங் காக்குநாள். (உ)

நாடி யங்கொரு நாளங் நரபதி
நீடு சேனையுந் தானுமங் நீணில
வேட ரோடு விலங்கடர் வேட்டைசென்
ருட வேண்டி யடவிய டைந்தனன். (ங)

அடைந்த வன்கொடுங் கானக மங்கண்மா
மடங்கல் வேழம் வயமாக் கரடிபூ
விடந்தி டேன மிவைமுத லெண்ணில
தொடர்ந்து வாளிக டேவித் துணித்தனன். (௪)

உலக மச்ச மொடுங்கவிவ் வாறவ
னலகில் வெய்ய மிருக மடர்ந்துபின்
மலையி னொண்குகை யூடொரு மான்மகிழ்
கலையொ டின்பங் கலப்பதுகண்டனன். (ரு)

கண்ட போதி லரசனுங் கைக்கணை
கொண்ட டர்ந்தனன் கூறவை யுட்பிணை
மண்டு மாருயிர் மாய்ந்தது மாய்ந்துயிர்
விண்டல் கண்டக் கலையும் வெகுண்டுடன். (சா)

மிருக வேடம் விடுத்துமுன் போலவே
குருதி கொள்ளு மரக்கர்தங் கோலமா
யருகு னின்றவ் வரசனை நோக்கியே
பெருக வெம்பி யொருமொழி பேசுமால். (எ)

மன்ன யாங்கண் மதிக்கினி சாசரர்
தன்னி லென்பேர் சம்வத்த கன்புவி
யுன்னு பேர்வர ரேகையென் ருேடுதி
மன்னு யிர்க்குல மாமனை யாளிவள். (அ)

வீங்கு காமவெவ் வேட்கை மிகுந்திட
வாங்க தற்கிவ் வுருக்கொண் டடவியில்
யாங்க ளின்புற் றனமீத லாதொரு
தீங்கு செய்யா வெமைத்தீங்கு செய்தனை. (கூ)

வேறு.

தப்ப ரும்பிழை செய்யினுந் தக்கவர் காம
மெய்ப்பு ணர்ச்சியிற் றடிவரோ வதுநிற்க வீணே
யொப்ப ருந்திறன் மனைவியை யுடல்விட வதைத்த
விப்ப ழிக்குனக் கெதிர்ப்பழி விளைப்பனெவ் வகையும். (கo)

எனவு ரைத்தவன் மறைந்திட வீறுகேட் டந்தத்
தினக ரக்குலத் தரசனுஞ் செய்தொழில் விடுத்து
மனமி கத்தளர்ந் தரக்கர்தம் மாயையென் றுமென்
றனைய வச்சமுற் றடைந்தன னயோத்தியம் பதியே. (கக)

எய்தி யவ்வனத் துற்றமை வசிட்டனுக் கியம்ப
மெய்த ருந்தவ முனிவனும் விளைந்ததிங் குபாயஞ்
செய்வ தென்னினி யரக்கரோ வஞ்சகர் தெரியிற்
கைவ னம்புகா தனுதினங் காப்புறி யென்றான். (கஉ)

என்ற போதினி லரசனு மென்றொடை மீதென்
றன்று தொட்டருங் காப்புட னரக்கர்வஞ் சனையென்
றொன்றி டாவகை சிறிதுநா ளொழித்தபின் பொருக்காற்
றுன்று மன்பினல் வேள்விசெய் வானவன் றொடுத்தான். (கங)

தொடுத்த வேள்வியை வசிட்டனுஞ் சுருதிநூன் முறையே
எடுத்த வன்றனக் கவபிர தந்தனை யீறாய்
முடித்து நண்பகற் காகிய நியதியை முடிப்பா
னடுத்து நீண்டெழு சரையுநன் னதிதனை யடைந்தான். (கச)

அந்த வெல்லையி லடவியி லுரைக்குமவ் வரக்கன்
முந்து மெய்யினை நீக்கியம் முனியுரு வாகி
வந்து மன்னனை நோக்கியூன் மடையலின் றருந்தச்
சிந்தை கூர்ந்தன மமைப்பியென் றேகினுன் செப்பி. (கரு)

சொல்லி யேகிய வுடனவன் சூபகா ரனுமா
யொல்லை வந்தரிந் தூன்பல வேறுவே றவித்து
வல்ல வாறமைத் தரசன்முன் வைத்தவன் மறையா
வெல்லை மீண்டனன் வசிட்டனு நியதியாங் கியற்றி. (கசு)

வேறு.

அன்னவ னணைந்த போதி லரசன்மா தேவி யோடு
முன்னுறப் பணிந்து பாத முறைமையால் விளக்கி வைத்துப்
பொன்னணி யாச னத்திற் புரிந்துபூ சனைகண் முற்று
மின்னமு தளிப்ப தாகப் பரிகல மிடஞ்செய் தேற்றி. (கஎ)

வள்ளலு மனைவி தானு மகிழ்ந்தமு தளித்த பின்னர்
வெள்ளியம் பாத்தி ரத்தில் வேறுவே றிருந்த வூனை
யள்ளின ருதவக் கண்டாங் கருமுனி செயிர்த்தெ ழுந்து
துள்ளிய வெரிக டுப்ப வரசனை நோக்கிச் சொல்வான் (கஅ)

வேறு.

ஈன மீதென் றறிந்து மெமக்குநீ
யூன ருந்த வுதவினை யாதலா
லான வற்றுக் கரக்கர்க டம்முருத்
தானெ டுக்குதி யென்றுச பித்தனன். (கக)

ஆன போதி லரசனு மத்தவக்
கோனை நோக்கிக் குறுகிநீ ரென்னுட
னூன மைப்பி யெமக்கென் றுரைத்துமீண்
டென மில்லா வெனைச்சாப மிட்டதென். (உ0)

வேந்த னிவ்வணங் கூற விறன்முனி
மாந்தி முற்று சமாதி வழியினின்
றுய்ந்த போதின்முன் சொன்ன வரக்கர்தந்
தேய்ந்த வஞ்சனை யாமிதென் றெண்ணினான். (உக)

வேறு.

இந்த வாறுணை ராமுன் முனிவனு மிடருற்
றந்த மெண்ணிடா தரசனைச் சபித்தன மந்தோ
நந்த வங்களென் ஞானமென் னுமெனென் றறவுஞ்
சிந்தை நொந்துடன் றன்னையே நிந்தனை செய்தான். (உஉ)

நையு மந்தமா முனிவனை நரபதி வெருளா
வைய ராயினும் பிழையிலா வடியரைச் சபித்தல்
வைய கத்ததோ வெனவெதிர் சாபமே வருப்பான்
கையி னீரெடுத் தெழுந்தனன் கனலெனக் கனன்று. (உங)

இன்ன வாறவன் முனிவனைச் சாபமிட் டிடுதற்
குன்னு போதினிற் றமையந்தி யெனவுரை செய்யு
மன்ன வன்பெருந் தேவிசென் றத்தொழில் விலக்கி
மன்ன மாணவர் குரவரோ டெதிர்ப்பரோ மண்மேல். (உச)

வறிது சீறினுங் குரவரை வணங்கினின் றவர்தங்
குறிபி ழைத்திடா தொழுகலே கூறுமா ணுக்கர்க்
குறுத வங்களென் றோதியு முணர்ந்தது நிற்கப்
பிறிது சாபமென் றெழுவதென் பெருமநீ தவிர்தி. (உரு)

குரவ ரோடெதி ரேறினர் கூறினர் நிந்தை
யிரவி யம்புலி யுள்ளள வவர்களே யெரிவாய்
நரக மெய்துவர் பிறக்கினும் புலையராய் ஞாலம்
விரவி யெண்ணரும் யோனியில் வேதனைப் படுவர். (உசு)

என்று கூறமுன் கேட்டவவ் விறைவனு மகிழ்ந்து
நன்றெ னச்சின மொழிந்துட னரியை நோக்கித்
துன்று மிப்பழி யிருமையுந் தொடர்ந்திடா தென்னை
நின்று நீநடு விலக்கிய நினைவையார் நினைவார். (உஎ)

இருமை யுங்கெட லெண்ணிடா தொருவனென் றியற்ற
வருமுனக் கொடும் பாவமாம் வன்னியை யுலகிற்
றரும வாக்கெனு மமுதினாற் றணிப்பவ ரன்றே
வுரிமை யாளரு நண்பரு மவன்றனக் குறவும். (உஅ)

உன்ற னாற்குரு நிந்தைவந் தருதெமக் கொழிந்து
நின்ற திவ்வண மரிவையர் நிகழ்த்திய சொல்லு
நன்று நல்குமே லவர்மொழி கேட்பது நலமா
மென்று தேவியை வியந்துபி னிருந்தவத் தோனை. (உகூ)

முடியி னாற்பணிந் தரசனம் முனிவனை நோக்கி
கொடிய செய்யினும் பொறுப்பது குருபரற் கன்றே
கடன தாதலாற் கனன்றறி யாமையி லெதிர்ந்தா
னடிய னேன்செயும் பிழைபொறுத் தாண்டருளென்றான். (௩0)

இன்ன வாறவ னுரைத்திட விருந்தவ னுரைப்பான்
சொன்ன வென்மொழி தவறுரு காலமுஞ் சூழா
மன்ன வென்னினு மரக்கர்தம் வடிவெடுத் ததனை
பன்னி ரண்டெனு மாண்டள வமைந்துநீ பரிப்பாய். (௩க)

சொன்ன யாண்டுகள் கழிந்தபின் சுருதிகா னனத்தி
னன்ன லந்தரு வேதநன் னதிபுகுந் தாடிப்
பன்ன லந்தரு பரமனை வலஞ்செய்து பணிந்தான்
மன்னு சாபமங் கொழியுநீ வருதியின் னகரம். (௩உ)

அன்று வந்துல கோர்தொழ வரசபி டேக
மூன்ற னக்கியா மூதவுவ மொழிநின் றுயர
மென்றி சைத்துமா முனிவனு மெழில்வள ரயோத்தி
நின்று மேகினன் றனதென நிகழுமாச் சிரமம். (கஙு)

முனிய கன்றபின் முதல்வனு மனையவ ளென்னும்
பனிம லர்க்குழ லணங்கையும் பதியினி லிருத்தி
யினித மைச்சரை யுலகினுக் கிடர்கெட நிறுத்தித்
தனிய டைந்தன னரக்கர்தம் முருவினைத் தரித்து. (கஙச)

வேறு.

தானபர னுண்சவு தாசனுமெ டுங்கற்
கானகம டைந்துபிசி தாசனர்க திப்பா
லானவுண வுந்தொழிலு மாகியதை யுய்த்தே
நானிலம்வ ருந்தநெடு நாளனுப வித்தான். (கஙரு)

தன்னின்மிக நொந்திவ்வகை தானனுப வித்திட்
டின்னல்புக வைத்தகதி யாண்டுளது செல்லப்
பின்னர்முனி சொன்னபடி பேரறிவு கூர
மன்னவனு மன்புகொடு மாமறைசை வந்தான். (கஙசு)

வந்தவனும் வேதநதி மாகடலின் மூழ்கி
முந்தைமறை வந்துவழி பாடுசெய முன்னு
மெந்தையைவ லஞ்செய்திரு தாளிணையி றைஞ்சிச்
சிந்தையினி னைந்ததுற வந்துதுதி செய்வான். (கஙஎ)

வேறு.

மறைவன முகந்து நின்றென் மாசறுத் தருள்வாய் போற்றி
யறைதரு வேதாந் தத்தி னரும்பொரு ளாவாய் போற்றி
பிறையணி சடையாய் போற்றி பிஞ்ஞகா போற்றி யார்க்கு
மிறையவ னிமைய மீன்ற விறைவிபங் காளா போற்றி. (கஙஅ)

என்றவன் வியந்த போதி லிடயவா கனாய்த் தோன்றி
நின்றர னரசை நோக்கி நிகமநன் னதியின் மூழ்கப்
பொன்றியின் றுனது சாபம் போயதே யினிய யோத்தி
சென்றுநீ முடிக வித்துச் செலுத்துதி செங்கோன் முன்போல். (கக)

திரும்பியீங் கணைந்திக் கோயில் சிரண மாய வெல்லாம்
வருந்திநீ நவமே யாக்கி மண்டப மதிள்கள் மாகோ
புரங்களு மிகவுண் டாக்கிப் புரிபடை வீதி யெங்கு
நெருங்கிட மடங்கள் சாலை நீடுமா டங்க ளாக. (ச0)

செய்தெமக் காண்டு தோறுந் திருவிழா நடப்ப தற்கிவ்
வையகத் தலத்துக் கேற்ப வளர்கொடி கவிகை பொற்றேர்
பெய்ததற் கூரு நல்கப் பெறுதியேல் மக்கள் செல்வ
மெய்தியின் புற்று மேலு மெய்துவை யெம்பா லின்பம். (சக)

முன்னவ னின்ன வண்ண மொழிந்திட மகிழ்ந்து வேந்து
மென்னையோர் பொருளா யெண்ணி யிசைப்பயான் முன்ன மாற்று
மன்னிய தவந்தா னென்னே மாநிலத் தெனவி யந்து
பொன்னடி பணிந்து போற்றி விடைகொண்டாங் கயோத்தி புக்கான்.

புக்கபின் மகுடஞ் சூடிப் பூதல மனைத்து முன்போ
லொக்கவே புரந்து பன்னா ளொழிந்தபின் மொழிந்த வண்ணன்
மிக்கவப் பணிமு டிப்பான் வேந்தனு மளவில் செம்பொன்
கைக்கொடு மீள வேத கானன மருங்கு வந்தான். (சங)

வேறு.

வந்திறைஞ்சி மறைசையெம் மன்னனு
முந்தை யண்ணன் மொழிந்த பரிசெலாஞ்
சிந்தை கொண்டு திருப்பணி நோக்கிய
வந்த வண்ண மறிந்தமை கூறுவாம். (சச)

ஆன வன்றிருக் கோயி லதனிடை
மேனி றைந்த விமான மடங்கலுந்
தானி ழைத்துத் தமனியத் தாற்றக
வானி ழிந்ததிங் கென்ன வகுத்தனன். (சரு)

அண்ட மேனி யலகில ஞாலமேற்
கொண்ட ருந்தவஞ் செய்யக் குழீயபோன்
மண்ட பங்கண் மறைசையி லெண்ணில
கண்ட னன்னவ கண்டமுங் கண்டனன். (சசு)

ஆழி யங்கிரி மேனிய நேகமாய்ச்
சூழ நின்று தொழுவன போன்மறை
வாழ மன்னகர் மீதுயர் மாமதி
ளேழு கண்டனன் மேலுமோ வெண்ணில. (சஎ)

ஆங்க வன்புய மீதே யவனியைத்
தாங்கி யட்ட குலகிரி தன்னையும்
வாங்கி யங்கர் வைத்தன னென்னவே
யோங்கு கோபுர மெங்குமுண் டாக்கினன். (சஅ)

நலங்கொ டவுக ளேழுமன் றுதனை
வலங்கொ ளும்பரி சென்ன மறைசையு
ளிலங்கு மாடமா மாளிகை யெங்கணுந்
துலங்கும் வீதிகள் சுற்றும் வகுத்தனன். (சகூ)

தன்னை முன்றனு வாகத் தரித்தவன்
றன்னை மீட்டுறத் தானுந் தரிப்பனென்
றுன்னி மேரு வுருப்பல கொண்டதிங்
கென்ன நீடுபொற் றேர்க ளியற்றினன். (ருO)

மாளிகை மாட மெங்கும் வளர்தர மேடை யெங்குஞ்
சூளிகை நிரைக ளெங்குஞ் சுற்றுசோ பான மெங்குஞ்
சாளரந் தெற்றி யெங்குந் தடவர மியங்க ளெங்கும்
நீளரங் கில்ல மெங்கு நிகழறச் சாலை யெங்கும். (ருக)

நந்தன வனங்க ளெங்கு நறைமல ரளிக ளெங்கு
மந்தண ரிருக்கை யெங்கு மவியெழும் புகைவ யங்கச்
சிந்துபூந் துறைக ளெங்குந் தெரிவையர் திரள்க ளோங்க
சந்ததந் தரும மோங்கச் சைவமா மடங்க ளெங்கும். (ருஉ)

மாதர்கொந் தளங்க ளெங்கு மதுமலர்த் தளங்கள் பொங்க
வோதிட விருக்கை யெங்கு மொளிறவி கொண்டி லங்கக்
காதலர் வாயி றங்கக் கன்னியர் வாயி லெங்கு
நீதிதங் கணிக ளெங்கு நிறைவயங் கணிகள் பொங்க. (ருங)

வாரணம் பந்தி தோறு மலர்மக ளில்லந் தோறு
மூரணி திசைக டோறு முறமணி மருங்கு தோறும்
தேரணி வீதி தோறுஞ் செழுங்கொடி மாடந் தோறுந்
தோரணம் வாயி லேறுந் துணரிபூம் பந்தர் தோறும். (ருச)

பூகநீள் கதலி நாற்றிப் பூரண கும்ப மேந்தி
மேகமங் கெழுந்த தென்ன விளங்ககிற் றூமம் பொங்க
மாகர்பூ மாரி தூவ மணிமுழ வதிர நின்று
தோகைய ரிரும ருங்குஞ் சுடர்மணித் தீப மேந்த. (ருரு)

இன்னன வேறு வேறு பலவள னியற்றி வேத
நன்னகர் வாச வன்ற னகரென விளக்கி மேலும்
பன்னுமா பரண மாடை பரிகல பரி சனங்க
ளன்னவை திருவி ழாவுக் கானவை யனைத்து நல்கி. (ருசு)

அரசனு மிரவி வார மாதியா மேழி னுக்கும்
பரவுமா ணிக்க முத்துப் பவளமர் மரக தத்திற்
புருடரா கத்தில் வச்சிரப் பொடியினி னீலக் கல்லில்
விரவியிட் டிழைத்த வாரப் டணிகளும் விமலர்க் காக்கி. (௩௭)

வேறு.

மாசி நீடு மகமுடி வாகவே
பேசு வித்துப் பெருவிழா வெங்கணு
மாசை நீடிய தேவரு மங்குற
வீச னுக்கிட பக்கொடி யேற்றினன். (௩௮)

ஏற்றி நாடொறும் யாகமும் யானமுஞ்
சாற்று கின்றநற் சைவாக மப்படி
தோற்று வித்துச் சொலும்புகழ் நல்விழா
வாற்றி னன்றெழு நிலந்தி னடைவுற (௩௯)

வேறு.

வானவரு மாதவரு மண்ணவரு மெண்ணி
ஞானவரு மூவருக ணத்தினர்க டக்கோ
ரானவரு நின்றுதொழ வந்தநர பால
ஞனமுடி வானதிரு நாளினைந டாத்தி. (௪0)

அன்றுமுத லாண்டுதொறு மத்திருவி ழாவு
நன்றுபட விவ்வணந டந்துவரு தற்கங்
கென்றுதவி யூர்பலவி றைஞ்சிவிடை கொண்டே
சென்றுலக ளித்தருள்சி வத்தினைய டைந்தான். (௪க)

ஆதலினு கந்தலகி னன்னகர்வி ழாவுக்
கேதகுகொ டிக்குடையி ருங்கவரி மேளந்
தாதியர்க ளாடைபணி தம்மிலெவை யேனுங்
காதலுட னல்குமவ ருங்கதிக லப்பர். (௪உ)

அன்றியலர் காய்கனிப ருப்பரிசி யத்தற்
கென்றுதயிர் பால்குளநெ யின்னவைக டம்மு
மொன்றுதவி னுந்திருவி ழாவில்வரு மும்பர்
நின்றுதொழ வேயடைவர் நித்தியசி வத்தை. (கஙு)

மிக்கபொரு ளாடைபணி வேண்டுவன வங்கண்
டிக்குளர ளிப்பனவு நல்குரவு சேர்ந்தோர்
தக்கபொரு ளாயுதவி னுந்தருப யன்று
னொக்குமிரு வர்க்குமென வாகமமு ரைக்கும். (கஙச)

இன்னவையி னொன்றுதவி னோர்கதியி சைக்கிற்
சொன்னபடி யத்திருவி ழாவணிதொ டுத்தங்
கின்னகுறை யின்னதவ றென்றிலதி யற்று
மன்னவர்பெ றும்பயனை யாருணர வல்லார். (கஙரு)

மற்றினியு ரைப்பதென்ம கிழ்ந்துசவு தாசன்
பெற்றகதி கேட்பவர்ப டிப்பவர்பெ ருக்க
முற்றுமிக வொக்கலொடு கந்துலகின் மேலா
நற்றவர்பெ றுங்கதியை நண்ணிடுவர் திண்ணம். (கஙசா)

சவுதாசச் சருக்க முற்றிற்று.

ஆகச் சருக்கம் கஅ-க்குத் திருவிருத்தம் அஙகா.

---

## விசுவாமித்திரச் சருக்கம்.



ஓதரு மறைவ னத்து ளுயர்சவு தாசனுற்ற
பூதல மிகழுஞ் சாபம் போயது புகன்றே மேலுங்
காதிதன் றனய னங்கண் கருதருந் தவங்கள் செய்து
வேதிய முனிவ னான வாறினி விளம்பல் செய்வாம். (க)

ஆதியிற் குசிக னென்போன் மரபின்வந் தவத ரித்த
காதியென் றுரைக்கும் வேந்த னிடத்தவ னுளங்க ளிப்ப
மேதகு மகவாய்த் தோன்றும் விச்சுவா மித்தி ரன்றான்
பூதலத் தோங்கி வையம் புரந்திடு நாளி லோர்நாள் (௨)

அன்னவ னுவரி சூழு மவனிசூழ் வருவா னாகத்
தன்னருஞ் சேனை யோடுந் தானெழுந் தாறுங் கானும்
பன்னரும் பதியும் வெற்புந் தபோவனம் பலவும் பார்த்தாங்
குன்னரும் வசிட்டர் பன்ன சாலைவந் தூக்ந்து புக்கான். (௩)

வேறு.

புக்கவன் வசிட்டனைப் போற்ற வம்முனி
மிக்கதோ ராதனத் திருத்த வேந்தனைத்
தக்கவம் மன்னனுந் தவத்தி னோர்க்கெலா
மொக்கவு நன்மையோ வெனவு ரைத்தனன். (௪)

வேதியன் றானுமவ் வேந்தை நோக்கியே
நீதிசேர் நின்குடை நீழ லோர்க்கெலா
மோதரு நன்மையே யுறுவ தல்லது
தீதெனு மொருதுயர் சேர வல்லதோ. (௫)

என்றவன் றன்னுட னியம்பி மாதவன்
மன்றலங் காய்கனி கிழங்கு மற்றவர்
தின்றிடற் குரியவுஞ் சேர்ப்ப வாயுவு
மொன்றினின் றரசனுக் குதவி வேண்டவே. (௬)

தேசமு மன்னவ நினது சேனையுங்
கோசமு மியானையுங் குசல மோவென
மாசறு நினதருள் வழங்க லாலெமக்
காசிலா நன்மையென் றரசுங் கூறினான். (௭)

எனவெதிர் மொழிகொடுத் திகலில் வேந்தனு
முனிவனை நோக்கியே முதுப திக்குற
வினிவிடை தாவரு ளென்ன யாவையுந்
தனதறி வினிலுணர் சதுரன் சாற்றுவான். (அ)

வேறு.

மன்ன நீயுநின் சேனையும் வைகியின் றெமது
பன்ன சாலையி லோதன மயின்றுநின் பதிக்குப்
பின்ன ரேகெனக் காய்கனி பெரியநீ யளித்த
தன்ன மற்றினு மமைதியே யனுப்புதி யென்றான். (கூ)

என்ற மன்னனு மீண்டுமீண் டிருந்தவன் வேண்ட
வன்றி சைந்தனன் முனிவனுஞ் சுரபியை யழையா
நின்று நோக்கியிவ் விருந்தினுக் கானவை நீயே
யொன்ற றக்கொணர்ந் தமைக்குதி யொல்லையி னென்றான். (க0)

ஞான மாதவ னிவ்வண நவிற்றவக் காம
தேனு வும்மகிழ்ந் தன்னசா லைகண்முதற் செய்து
போன கத்திர ளறுசுவை பொருந்துவெஞ் சனங்க
ளான யாவையு முளங்கொடங் கமைத்ததோ ரிமைப்பில். (கக)

இருந்த வப்பெருங் குரிசிலுஞ் சுரபிநின் றியற்ற
வருந்தி றத்தினல் வரவர வேண்டிய வண்ணம்
விருந்த ளித்தனன் சேனைக டம்மொடவ் வேந்துக்
கருந்த போதன ரானவர்க் கரியதொன் றுளதோ. (கஉ)

துய்த்த மன்னனு மகிழ்ந்துளஞ் சுரபிதன் றொழிலை
மெத்த வும்வியந் தாங்கதை வேண்டுவா னுக
வத்த வப்பெருங் குரிசிலை நோக்கிநின் றைய
யித்தி றம்புரி தேனுவை யெமக்கரு ளென்றான். (கங)

வேறு.

என்றதற் கிருந்த வத்தோ னிசைந்தில னதனால் வேந்துங்
கன்றியே வலிகொண் டேனுங் கவர்வனென் றெழுந்தான் கோவைத்
துன்றுநற் பொருளா யொன்று தோன்றுமே லகில நீதி
கொன்றுமப் பொருள்கைக் கோட னிருபர்தங் கொள்கைத் தன்றே.

கோவுமக் கோவைத் தன்றன் வலியினாற் கொடுசெல் லென்றே
யேவமற் றேவ லோரை யிதுமுனி யேவ லன்றென்
றாவுமற் றவனை வெல்கைக் காவதோர் வ்யவ ராதி
யோவருஞ் சேனை யாவு முயிர்ப்பிலுண் டாக்கிற் றன்றே. (கரு)

வேறு.

ஆக்கிய சேனைகொண் டவன்றன் சேனைமேற்
றாக்குவித் ததிரெதிர் சாடி யோடவே
நோக்கிய தரசனு நடங்கி நீள்வலி
போக்கிநின் றபசயம் பொருந்தப் போயினன். (கசா)

போயவன் முனிவனைப் போரி லின்னமு
மேயெதிர்த் தடர்வனென் றிறையை யாதரித்
தாயுதம் பெற்றுள னநேக மீளவுந்
தேயமெண் வசிட்டராச் சிரமஞ் சென்றனன். (கஎ)

சென்றவ னற்பெருஞ் சேனை தன்னுட
னின்றெதிர் முனிவனை நிலைகு லைப்பன்யா
னென்றடல் பேசிமுன் னெய்தி யெண்டிசை
துன்றிட வெஞ்சர மாரி தூவினான். (கஅ)

ஆன்றவ னிவ்வண மடர வம்முனி
யென்றதற் கிலக்கிதென் றேந்து தண்டினை
யூன்றிவைத் திருந்தனன் வறிதங் கோர்ந்தறஞ்
சான்றென முன்புபோற் றனது நிட்டையில். (கக)

புடைவளை வேந்தனும் பொழிந்த வாளிகள்
தடைபட வூன்றிய தண்ட மட்டினில்
விடவிட மீண்டன வன்றி வேறுசென்
றடர்வது கண்டில னதிச யித்தனன். (உ0)

மாதவ ருரமலான் மன்னர் தம்முரம்
யாதென நிந்தைசெய் திகழ்ந்து வேந்தனு
மேதினி யரசுடன் விடுத்தி யாவையு
மேதமி லருந்தவ மியற்ற வேகினன். (உச)

இனையது மூலமா யாவு நீத்தறம்
புனைகவென் றெழுந்தனன் புகலின் மானமே
தனமென விருப்பவர் தமது வாட்கையை
நினைவர்கொ ணிந்தனை நிகழ்ந்த காலையில். (உஉ)

எவ்வகை யருந்தவ மியற்றி யாயினு
மவ்வகை மறைமுனி யாதல் வேண்டுமென்
றுய்வகை சடைதிரித் துடுத்து வற்கலை
மெய்வருந் துறுதவ வேட மாகியே. (உ௩)

கானினு மலையினுங் கடுஞ்சு ரத்தினுந்
தானிருந் தவனருந் தவமி யற்றியு
மானநற் சித்திக ளனந்த மன்றிமே
லூனமின் மறைமுனி யோக முற்றிலன். (உச)

வேறு.

ஆத லாலவ னப்பய னடைவதற் கரிய
மாத வந்திசை திசைதொறும் வருந்தியு மங்கங்
கேத ரும்பய னுருதிடை யூறுற விந்த
வேதை யற்றவே காந்தமாந் தபோவனம் விரும்பி. (உரு)

தேடி யெங்கணுந் திரிந்தவன் றென்றிசைக் கடற்பாற்
கோடி யின்கரை மறைவனத் தெல்லையிற் குறுக
நாடி வித்தலம் வேண்டுவ நல்கிநாற் பயனூ
டாட வைக்குமென் றும்பரில் வாணியொன் றரற்ற. (உசு)

அன்ன வன்னது கேட்டட னப்பதி யணுகிக்
கன்னி மேல்கரை முனிவர்சூழ் கடவுளா லயத்து
வன்னி மூலையில் வன்னிமூ லத்தினில் வகுத்தோர்
பன்ன சாலையாங் கிருந்தன னருந்தவம் பயின்று. (உஎ)

தோய்ந்த மாமணி கன்னிநீர் தினந்தொறுந் தொன்னீர்க்
காய்ந்த நாடொறு மறைநதி கோடிநீ ராடி
வாய்ந்த நீறுடன் கண்டிகை தரித்துமா மறைசை
யேந்த லைப்பணிந் திருந்தன னஞ்செழுத் தெண்ணி. (உஅ)

வேறு.

இப்பரி சவனி யற்றி யிருக்குநாள் வசிட்டர் வாய்மை
தப்பியிங் கீன சாபந் தகுந்திரு சங்கு வென்பா
னப்பழி யகற்றி வானிவ் வாக்கைகொ டடைவா னாக
வொப்பருங் காதி மைந்த சரணமே சரணென் றுற்றான். (உகூ)

ஆங்கவ னுற்ற போதில் வசிட்டரா லாகா தாக
வீங்குயான் புரிப்ப னென்று கௌசிக னெழுந்தவ் வேந்தைத்
தீங்கின்முத் தீர்த்த மாட்டிச் சிவனடி பணிவித் தொல்லை
நீங்கரு மீன சாப நீக்குவித் தங்கண் மீள. (௩0)

பன்னிரண் டாண்டு வேள்வி பயில்வித்து மவனை வேதன்
றன்னுட னிகலி யாவுந் தான்விதி வேறு செய்து
மின்னன தவங்க ளங்க ணியற்றியுஞ் சரண்பு குந்த
மன்னனை யாக்கை யோடும் வானுல கேற்று வித்தும். (௩க)

எண்ணருஞ் சித்தி யிவ்வா றியற்றியங் கிருக்கு நாளில்
விண்ணினின் றெழுந்தங் கோர்நாண் மேனகை யெனும ரம்பை
நண்ணிமுத் தீர்த்த மாடி நாதனைப் பணிந்து முன்னைப்
புண்ணியச் செயலான் மீளப் போவதற் கெழுந்த போதில். (கஉ)

வேதநா யகன்றன் கோயின் மருங்கினில் வெண்ணீற் றேறு
சோதியு மிளமை வாய்ந்து துளங்குசெஞ் சடையுந் தோன்ற
மாதவ னுருவங் கொண்டு வருமொரு மதன னென்னக்
காதிதன் றனைய னான முனிவனை யெதிரே கண்டாள். (கங)

வேறு.

கண்ட போதினி லலர்க்கணை கனன்றிடக் காதல்
கொண்டு மேனகை முனிவனைக் கூடுதற் கெண்ணி
விண்டி டாமயல் வெளிப்பட விரகமே னியளாய்த்
தண்டி வந்தெதிர் நின்றனள் சரிந்தகை வாள்போல். (கச)

வேறு.

முனிவனு மவளை நோக்கி யார்கொனீ முன்னர்க் காணேந்
தனிவரு மாறி தென்கொல் கணிகைமார் தமது கூட்டத்
தெனிலர னாலயத்து ளெய்திநீ யிறைவற் கேற்பப்
புனிதமா நடனங் கீத விதம்பல புரிதி யன்றே. (கரு)

மற்றொரு மனையா ளென்னின் மறுமுகம் பார்த்தோர் வாய்மை
சொற்றிடி னுந்தீ சாருந் துணைவனே துணையென் றுண்டி
யுற்றிடி லுற்றும் பின்ன ருறங்கிடி லுறங்கி யும்பின்
பற்றிநின் றவன்ற னேவல் பயின்றிட லன்றோ பண்பாம். (கசு)

என்றுமா முனிவன் கூற மேனகை யிசைப்பாள் வானோர்
மன்றுகொண் டாடுந் தெய்வ வேசியான் மனத்துக் கேற்ப
நின்றவர் யாவ ரேனுந் தலைவரே யதனா னித்தன்
கொன்றவே ளனவி ளங்கு முன்றனைக் காசை கொண்டேன். (கஎ)

நேயபல் லுயிர்க்கு மென்னை நின்புயந் தன்னிற் கூடி
லேயுயிர் பிழைப்ப தல்லா லிரும்பெருங் காமத் தீயின்
மாயுமா ருயிர்நின் முன்னர் மாதவத் தாலுந் தீரா
தாயிடு மடவார்க் கொன்ற பழியுனக் கென்று ளம்மா. (ஙஅ)

இன்னவா றியம்பக் கேட்ட விருந்தவன் வியந்து நாணி
யன்னவ டன்னை நோக்கி யறைகுவா னகற்றி யீது
பன்னெடுங் காலம் பாசு பதவிர தத்த ளாகு
மன்னனின் காம நோயென் றுளத்தினின் மருவா வண்ணம். (ஙகூ)

அறிவிலா தவரே யன்றி யறிவுளோ ரிந்த மாயப்
பொறியினில் வீழ்வ ரேகொல் விரதியாய்ப் புனிதற் கன்பா
நெறியினின் றருந்த வங்க ணிகழ்த்தினு நூறு காலஞ்
செறிவரே லொருநாண் மாதர் தோளினிற் சேர மாயும். (ச0)

விடைபுரி யதனாற் றீண்டேன் றீண்டிலெம் விரதம் யாவு
மிடையினின் மாயும் பாசு பதியென யார்கொ லேனுஞ்
சடையினைத் தரித்து மீளத் தையரோ டுழுவி னாரே
லடைவர்க ணிரைய மீரைந் தலைமுறை யவர்க ளோடும். (சக)

## வேறு.

பாசுபத விரதியர்கட் காத லாலே பாவையரைப் பரிசித்தல் பார்த்தல் பற்றிப், பேசுவது மாகாதென் றருநூல் சொல்லிற் பேர்ந்தவர்தோள் சேர்வரெனிற் பேறுண் டாண்டோ, வாசமலர்க் குழலணங்கே காம நோயால் வருந்திடுமுன் றனக்கொருகான் மருவி னேமே, லாசைநெறி யவளவினி லமைதி யாமோ வாதலினாற் றவஞ்சிதையா தகறி யென்றான். (சஉ)

என்றவனை மேனகையு நகையா நோக்கி யிருந்தவத்தோ ரிருந்த விடத் திருந்த நீரே, யன்றுசில கற்றறிவா லாற்றி யென்கொ லாங்

கதனு லென்னுரைை யகன்ற தாமோ, தன்றனைவர் தடைந்தோரை யெவ்வா றேனுந் தற்காத்தங் கவராவற் றணித்து நாளும், பொன்றி யிடா தவருயிரைக் காப்ப தன்றே பூதலத்திற் பெருந்தவமாய்ப் புகல்வதென்றாள். (சங)

வேறு.

ஆண்டகை யதுமுன் கேளா வறவெகுண் டவளை நோக்கி
மாண்டுநின் னுயிர்போ யென்கொல் வைகியென் விரதி யானேற்
றீண்டுநின் பழிக்குச் சாந்தி யியற்றலா மாதர் கொங்கை
தீண்டிலோ பதித ராவர் தீர்வைமற் றிதற்கின் றாமால். (சச)

சூழ்ந்தழல் வதுவை முன்னர்ச் சுற்றுவ தில்ல றத்தின்
வீழ்ந்ததிற் சுழல்வ காட்டன் மெல்லிய ரனலான் மாந்த
ராழ்ந்தநெய்க் கடமாம் வைகு மகன்றிடி லணுகி னெக்குத்
தாழ்ந்திடுந் துயருக் கெல்லாந் தையலா ரன்றே மூலம். (சரு)

மாதரிற் செல்வ மிக்கு வருங்குல மடவா ரேனுங்
காதல னிருப்ப வேறு கருத்தினுட் காதல் வைப்பர்
கோதைய ருளமெ வர்க்குங் குறிப்பரி தன்றே வென்று
மாதலாற் றுறவி னின்றோ ரடைவரோ மடவார் தம்மை. (சசு)

அரிவையர் குணங்க ளெண்ணிற் பரிசனத் தவர்க்கு நாணித்
தரிபடத் தலைவ ரென்றும் வரம்பினைத் தப்பார் போன்று
திரிவன வன்றித் தம்மிற் றிரமுண்டோ நும்மைச் சேரி
னரகினை யடைவ தலலா னற்கதி யின்றே யென்றான். (சஎ)

வேறு.

தவமு டைப்பெருங் குரிசிலு மின்னன சாற்றிப்
பவம தற்கொரு வித்தெனும் பாவைதன் னெதிர்நின்
றவம திற்சில வறைந்தன மதுபிழை யென்றே
செவிபு தைத்தர சங்கர சிவசிவ வென்றான். (சஅ)

இன்ன வாறற மொழிகளா லிகழ்ந்துசொன் முனிவன்
றன்னை நோக்கியே மேனகை சாலவும் வெருண்டு
முன்ன நின்றெதி ரனலிடை மூழ்கிய மூளரி
யென்ன நீண்முகங் கருகவாய் துடிப்பவொன் றிசைப்பாள். (சகூ)

வெம்மை கூர்ந்தெழு காமவெந் தீயினல் வெதும்பு
மம்மர் தீர்ந்தெமை யாள்கென வலியவந் திரந்த
வெம்மை நீர்தழு வாதுசொ லிகழ்ந்தனி ரென்று
லும்மை யார்கொலோ பெரியரென் றுரைப்பவ ருலகில். (ருo)

அல்ல தென்னைமற் றணுகொணு வரிவைய ரேனும்
வல்ல பத்தினல் வலியமுன் றழுவென வந்தா
லில்ல றத்தினர் துறவின ராயினு மிகழச்
சொல்லி மற்றுல கத்தொரு சுருதியு முளதோ. (ருக)

எந்த வாறுநிற் கிசைக்கினுங் கேட்கிலை வலிய
வந்த வென்றனை யிகழ்ந்தனை யன்றியு மறையி
னந்த நன்னெறி பிழைத்தனை யாதலான் மாதர்
நிந்தை செய்யுமூப் பின்றுநீ நிகழெனச் சபித்தாள். (ருஉ)

நரைத்து டூன்றிரை தழுவிட நழுவுபற் கனுமா
யிரைத்து நின்றத னலவ னறவெருண் டெழுந்து
பரித்த குண்டிகை நீரெடுத் தவடனைப் பார்த்துத்
தரித்தி டிவ்வுரு நீயுமென் றங்கெதிர் சபித்தான். (ருங)

முனிச பித்திட மேனகை தானுமம் மூப்புத்
தனைய டைந்துடன் மறைசையின் முன்முதற் பெற்ற
நினைவு கண்டுசென் றுடின ணிகமநன் னதியி
லனைய மேன்மையான் முன்பினு மிளமைபெற் றடைந்தாள். (ருச)

காதி காதலன் ருனுமப் பரிசெதிர் கண்டு
வேத நன்னதி தோய்ந்துதன் சாபமும் விடுத்துப்
போத முன்பினு மிளமைபெற் றனனது புகன்ற
கோதை மேன்மையு மறிவையுங் குறித்தற வியந்தான். (ருரு)

இனிய கற்றிடி லிவடனைத் தீங்குவந் தெய்து
மனித ரன்றிவ டெய்வமா தாதலான் மருவிப்
பனிம லர்க்குழ லணங்கினைப் பரிப்பதா மென்றுட்
கனிவு கொண்டவ டன்னுடன் கலந்தன னின்பம். (ருசு)

வேறு.

இருவருங் கூடி யின்பத் துறையினி லிழிந்து காதற்
பெருகிய கடலின் மூழ்கிப் பேதமற் றிருக்கு நாளி
லருமுனி யவளை நோக்கி யாரண நதியின் மேன்மை
திருமல ரணங்கே நீமுன்றெ ரிந்தமை செப்பு கென்றான். (ருஎ)

அப்பொழு தவனை நோக்கி மேனகை யறைவா டான்மு
னொப்பரு மிவ்வனத் திலுழையெனும் பிறப்பிற் றோன்றித்
தப்பறத் திரிந்த வாறும் வேடுவன் சாட வோடி
மெய்ப்பெருங் கணைகொ டாற்று தந்நதி வீழ்ந்த வாறும். (ருஅ)

ஆனவந் நதியிற் றோய்ந்தாங் காருயிர் விடுத்த லாலே
மேனகை யென்னு மிந்த மேன்மைதான் பெற்ற வாறுந்
தானுரைத் ததனின் மூழ்கின் மூப்பலாற் பிணியுஞ் சாடும்
ஞானமு மளிக்கு மேலும் பரபதந் தனையு நல்கும். (ருகூ)

மற்றுள நினைந்த யாவும் வழங்குமா மறைக ளுளு
நற்றுமன் னதிமுன் றெய்வ பூடண மென்னு நாமம்
பெற்றது மாதி யாய மேன்மைகள் பலவும் பேச
முற்றுமம் முனிவன் கேட்டு முதிர்ந்தன னவண்மேன் மோகம். (சூ0)

## வேறு.

இன்ன வாறவ டன்னுட னின்பமே நுகொண்
மன்னி நின்றவம் முனிவனு மதிகொடு நினைந்து
பின்னி ரங்கியீ தென்கொனம் பேதைமை யென்றே
தன்னி னுந்தற விகழ்ந்தனன் மேனகை தன்னை (கூக)

விடுத்து மேனகை தன்னுடன் வெய்யவைம் புலனுந்
தடுத்தி யற்றுமெய்த் தாரணை வழியினிற் முன்முன்
னெடுத்த வேதிய முனிவனுஞ் சொற்பெரு விரத
முடித்தி டும்படி தவஞ்செய்வான் றெடங்கினன் முனியும் (கூஉ)

## வேறு.

எரியுங்கன லைந்தின்னிடை யிகல்வேனி லிருந்துஞ்
சொரியும்பனி காலத்திடை தோய்ந்தும்புன லிடையே
விரிவற்றுள மொருமைப்பட வேதாடவி யூடே
யரிதிற்றவ நெறிபேணின னல்லும்பக லுறும். (கூ௩)

முனியிவ்வண மரிதிற்றவ முயலும்பொழு திமையோ
ரினிநம்பத மிவனுலிட ரெய்தும்மித னுக்கின்
றனமென்னடை கிளிமொன்மொழி யரமங்கைய ரல்லான்
மனிதன்றவ மழிதற்கொரு வகைவேறில தென்றே. (கூ௪)

## வேறு.

வானவர்தி லோத்தமையை வாவெனவ ழைத்துத்
தானறவி யந்தவட னைப்பெரிது நோக்கி
யூனமில்ச கத்திலெவர் மாலிலரு னைக்கண்
டானினைகி னீமுனழி யாதவ முண்டோ. (கூரு)

ஆதலினி னக்குமிக ரார்கொலத ஞனீ
காதிமகு னங்கள்பதி கைக்கொளநி னைந்தே
வேதவன மீதுவிர தங்கொடுவி ளக்கு
மாதவம ழித்துவரு வாயெனவி டுத்தார். (கூகூ)

வாசவன்மொ தற்பெரிய வானவர்வி டுப்பத்
தேசுறுதி லோத்தமைதி கைத்துவிடை கொண்டே
மாசின்மறை சைப்பதிய னைந்துமுனி வைகும்
வீசுபுக ழாச்சிரம மீதுறவ டைந்தாள். (கூஎ)

அடைந்திடைது வண்டிடவ ரும்பநகை யம்பொற்
றடங்கொடெழு கொங்கைகட டும்பவிழி கால
விடங்களமு தங்கள்கையில் வீணைகொட னம்போ
னடந்தனள்வி காரமத ஞடைகந டித்தே. (கூஅ)

இப்பரிச னங்குமவ ளுச்சிரம மெங்கு
மொப்பரிய கீதவித மோதியெவ ராலுந்
தப்பரிய காமகலை தானுறவி ரித்து
மப்பெரியன் முன்புசெல வஞ்சினளுழந்தாள். (கூகூ)

வேறு.

இன்ன வாறவ ளவனிட மெண்ணியே நெடுநாண்
மன்னு போதினி னண்பக னியதிகள் வழுத்தச்
சொன்ன மாதவன் முனுநன் யணிகன்னி தோய்வான்
றன்னி லெய்தினன் கண்டனன் றிலோத்தமை தன்னை. (எ0)

கண்ட போதிலவ் வரம்பையுங் கால்பயி லரம்பைத்
தண்டு போலெதிர் நடுங்கவத் தாபதன் கண்டே
யண்ட ரேவுறு திலோத்தமை யாமென வுளத்திற்
கொண்டு நின்றெதிர் கூறுவா னவடனைக் குறித்து. (எக)

ஈண்டு நீதிரிந் தெவ்வகை யியற்றினு நின்னைத்
தீண்டு மாறிலை மாதராய் தேவர்தம் பதங்கள்
வேண்டி யன்றியான் றவஞ்செயல் வினவிலிப் பிறப்பிற்
காண்ட குந்திறன் மறைமுனி யாகவே கருதி. (எ௨)

அந்த ரத்தவர் வாய்மைகேட் டருந்தவஞ் சிதைக்க
வந்த விப்பிழை பொறுத்தனன் மறுத்திவண் வரிலோ
நொந்தி டச்சபித் திடுவன்யா னுதலா னுங்க
ளிந்தி ரற்குநீ போயுட னீதெலா மிசைப்பாய். (எ௩)

என்று கூறியவ் வணங்கினை யேவிமா தவனு
நின்ற நண்பக னியதிகள் யாவையு நிகழ்த்திச்
சென்று நான்மறை நாதனைத் தெண்டனிட் டதற்பின்
றன்ற னிப்பெரும் பன்னசா லைப்புறஞ் சார்ந்தான். (எ௪)

சார்ந்து முன்புபோன் முனிவனுஞ் சமாதியி லிருப்ப
வார்ந்து நின்றிடு திலோத்தமை தானும்வா னணுகிற்
றேர்ந்தி டாதுடன் சபித்திடுந் தேவர்கோ னென்றங்
கோர்ந்து சென்றில ளஞ்சின ளப்பரி சுலவ. (எ௫)

திரும்ப மாதவன் காண்கினுஞ் சினக்குமென் றெண்ணி
யரம்பை யாகுமவ் வுருவினை யகற்றியாங் கவளும்
விரும்ப யாவரு மானுரு வங்கொடு வேதம்
பொருந்து கானுறத் திரிந்தனள் பொன்னெழில் வயங்க. (எ௬)

அன்ன மேனிகண் டடவிமா னகன்றிடத் தமியே
யின்ன மாங்கிடங் காண்பர்கொ லென்றுமா முனிவன்
பன்ன சாலையைச் சூழ்தரப் பயின்றுநின் றுலவா
வுன்னி யாங்கவ டிரிதரு நாடனி லொருநாள். (எஎ)

புந்தி மாதவ னாலயம் போற்றுவான் புகுது
மந்த வேலையி லந்தமா னெதிர்ப்பட வதுகண்
டிந்த னல்லுருக் கண்டிலோ முன்பிவ ணென்றே
சிந்தை கொண்டிது திலோத்தமை வடிவெனத் தெரிந்தான். (எஅ)

அன்றி யானுனை யித்தலத் தணுகலென் றறையா
நின்ற வாய்மைநீ மறுத்துரு மாறிமுன் னிகழ்ந்தா
யொன்றி யாதலா லிவ்வுழை யுருவினி லுழல்வா
யென்று சாபமிட் டிறையடி யிறைஞ்சிமீண் டிருந்தான். (எகூ)

வேறு.

திருமுனி யிருப்ப மற்றைத் திலோத்தமை யுளத்தி னொந்தவ்
வுருவினி னெடுநா ளங்க னுழன்றிடு நாளி லோர்நா
ளருகுநீர் வேட்டுச் சென்றங் காரண நதிமுன் னீரைப்
பருகிட வதனாற் சாபந் தீர்ந்துமுற் படிவ முற்றாள். (அ0)

விதிதரு முருவந் தன்னின் மேம்படு முருவம் வாய்ப்ப
வதிசயித் தவளு மப்போ தறிந்துளம் வியந்து வேத
நதியினுண் மூழ்கி மீள நன்மணி கன்னி யாடிக்
கதிதரு மறைவ னத்துட் கண்ணுதல் கோயில் புக்காள். (அக)

பொருவில்சீ ராலயத்துட் புகுந்துமுன் வணங்கி யன்பான்
மருவியே வலமாய் வந்து மீளவும் வணங்கிக் கண்ணீர்
பெருகிடப் புளகங் கொள்ளப் பேச்சிடை தளர நின்று
சுருதிநா யகனை நோக்கித் திலோத்தமை துதிக்க லுற்றாள். (அஉ)

வேறு.

சுருதிவன நாயகனே போற்றி யென்னைச் சூழ்ந்துவிடாச்சாபவி டர் தொலைத்தாய் போற்றி, தரையடருந் திரிசங்கு வீன சாபஞ் சவுதாச னிராக்கதமுந் தவிர்த்தாய் போற்றி, வரிசைதரு முசுகுந்த நாதா போற்றி, மாவலிக்கன் றுலகருளும் வரதா போற்றி, கருதரிய விராமன்பின் றொடர்ந்த வீர கத்திதடிந் தருள்புரியுங் கடவுள் போற்றி. ()

கதிபிரம சாரிதனக் கருளிக் கோலா கலன்றனக்கு முத்தியருள் கருணைக் குன்றே, வதிகவருள் குறுமுனிக்கன் றருளி யேமாங் கதவணிகன் மைந்தர்பவ மறுத்தாய் போற்றி, சதமகன்றன் பிரமகத்தி வசிட்டர் மெய்நோய் தருமன்முத லவர்துயர் தவிர்த்தாய் போற்றி, முதிர்தவத்து நாரதற்குஞ் சனக ராதி முனிவர்கட்கு முத்தியருள் முதல்வா போற்றி. (அச)

சடையவனே மலைவல்லி யிடப்பா லென்றுந் தவிராத மணக்கோலந் தருவாய் போற்றி, விடையவனே கடவுளரின் மேலோர்க் கெல்லா மேலவனே வேதாந்தத் தெளிவே போற்றி, யடன்மருவு கருணைவா ருதியே யுன்ற னருள்பெருகி யானந்தம் பொழியா நிற்குங், கடைவிழியென் பாலுகந்தின் றருள வேண்டுங் கண்ணுதலே யரகரசங் கரனே யென்றாள். (அரு)

## வேறு.

என்றவ டுதித்த போதி லிறைவனு மெதிரே தோன்றி
நின்றவ டன்னை நோக்கி முனிவனு னிகழ்ந்த சாப
முன்றனக் கின்று வேத நதியினு லொழிந்து தீர்ந்த
தன்றி மற்றெம்பால் வேண்டும் வரமுண்டே லறைதி யென்றான். ()

கண்ணுத லருள நின்ற திலோத்தமை காதல் கூர்ந்தங்
கண்ணலே நின்பால் வைத்த வாதர வழியா வாறு
நண்ணியா னுனைத்து தித்த வித்துதி நாளு நாவா
லெண்ணின ரின்ப முத்தி யெய்தவு மருடா வென்றாள். (அஎ)

ஆங்கவள் கூற விவ்வா றண்ணலு மதனுக் கேற்பத்
தாங்கருங் கருணை நல்கத் திலோத்தமை தானு மென்று
நீங்கரு மன்பாற் றாழ்ந்து நிறைமணி விமானத் தேறித்
தீங்கிலா வமரர் நாடு முன்புபோற் சேர்ந்து வாழ்ந்தாள். (அஅ)

சிட்டனு முனிவன் ருனுந் திரும்புமைம் புலன்கள் சேரக்
கட்டிமா மறைக்காட் டண்ண விடத்தினிற் கருத்தை வைத்தே
யெட்டருஞ் சமாதி மேவி யாயிர மாண்டடங் கிட்ட
நிட்டையே குலையா வண்ணந் தவப்பெரு நிலையி னின்ருன். (அகூ)

வேறு.

நற்றவ னருந்தவ நண்ணி யிவ்வண
முற்றது பாதல முரோம ராசிகள்
முற்றியுட் சுழுமுனை திறந்து மூண்டுபோய்ப்
பற்றிய தவக்கனல் பதும னண்டமே. (கூ0)

இப்படித் தவக்கன லெழுந்த போதினிற்
றப்பற வூழிநாட் சமைந்த தீயென
வொப்பற நடுங்கிட வுலக மெங்கணு
மப்பொழு தெழுந்தன ரமரர் கண்டதை. (கூக)

தொல்லுல கனைத்தையுஞ் சூறையாடிட
வல்லதித் தழலினை மாற்ற வேதனே
யல்லது வேறய லறிகி லோமெனு
வொல்லையி லவன்பத முகந்த ணைந்தனர். (கூஉ)

சென்றுநின் றமரரத் தேவை நோக்கியே
வென்றிகொள் கௌசிகன் விடுத்த வக்கன
லின்றுகொ லெங்கணு மெழுந்த தாலிறை
நின்றிடு மெனிலதை யாவு நீறெழும். (கூரு)

இறையினி லதற்குநீ மறைசை யெய்தியாங்
குறைதரு கௌசிக னுகர்தி டும்வரங்
குறைவறக் கொடுத்தவன் றவங்கு லைத்திடி
னிறைதுய ருலகெலா நீங்கு மென்றனர். (கூச)

அம்மொழி கேட்டவவ் வயனு மாங்கவர்
தம்முடன் முனிவர்க டாமுஞ் சூழ்தர
மம்மரின் மறைவன மருவித் தாழ்ந்தபிற்
செம்மைகொள் கௌசிகன் வசதி சென்றனன். (கூரு)

வேறு.

அண்டர் மாதவர் தம்முட னணைந்திடு மயனைக்
கண்ட போழ்தினுங் கவுசிகன் கடவுளைக் கருத்துட்
கொண்டெ ழுந்திடா வந்தவர்க் கருச்சனை கொடுத்துத்
தொண்டு செய்தருந் துதியிறு வளங்கொடு தொழுதான். (கூசு)

காதி நந்தனன் றனையய னோக்கி நீ கருத்தி
லேது காரண மித்தவ மியற்றுவ தென்ன
வேத நீள்பெருங் கடவுளே வேதிய முனிவ
னாதல் வேண்டியென் றறைந்தன னருந்தவத் தோனும். (கூஎ)

அந்த மாதவ னுரைக்குடன் பாடுசெய் தவனு
மூந்து மாதவர் வானவர் முன்னமின் றுனக்குச்
சிந்தை கூர்ந்திட வேதிய முனிவனுஞ் சிறப்புந்
தந்தனம்மினி யித்தவந் தவிர்திநீ யென்றான். (கூஅ)

என்று கூறிய வயன்றனை யெதிர்முனி நோக்கி
நன்று நீரெமக் கருளிய தின்னமு நவில்வ
தொன்று மற்றிதை வசிட்டர்தம் வாய்மையா லுரைத்தா
லன்றி மற்றியான் றவிர்கிலே னருந்தவ மென்றான். (கூகூ)

இன்ன வாறவ னியம்பிட வசிட்டனை யிறையி
லன்ன வாகன னழைத்துநீ யிவன்றனை யமரர்
முன்னர் நின்றுநல் வேதிய முனியென மொழிவா
யென்ன மற்றிதற் கிசைக்கில னென்றனன் வசிட்டன் (க00)

இடங்கொ டாதவம் முனிவனை யிமையவர் முனிவ
ரடங்க லும்வெகுண் டலகெலா முன்றனு லழியப்
படுங்கொ லீதினு லரனருள் பார்க்கினும் பிழைத்து
விடுங்கொ லன்பனு மவனுமோ வேதனு தனுக்கே. (க0க)

நிறுத்த வேண்டுமூ வுலகுநின் றலெனு நிகழ்த்த
வொறுத்த வன்பினல் வசிட்டனு மும்பர்தம்வாய்மை
மறுத்தி டாமலு மறைவனத் திறைவனு துள்ளம்
வெறுத்தி டாமலு மிசைந்துபோய் விண்ணவ ரவைமுன். (க0உ)

இருந்த வப்பெருங் கௌசிகன் றனையெதிர் நோக்கி
யருந்த வத்தினு லந்தண முனிவனு யினைநீ
பொருந்தி மூவுல கறியயா னுண்மையே புகன்றேன்
வருந்து மித்தவ மினித்தவிர் கென்றனன் வசிட்டன் (க0ங)

வான நாடர்முன் னிப்படி வசிட்டனின் றுரைப்ப
வான போதினிற் கவுசிக னருந்தவந் தவிர்ந்து
தானெ ழுந்துநின் றருந்ததி தலைவர்தாள் பணிந்தே
ஞான நற்குரு வெமக்குநீ ரென்றவ னவின்றான். (க0ச)

பிரம மாமுப தேசமும் பெற்றவ ரிடத்தி
லரிய மாமறைச் சடங்குட னந்தணர்க் குரைத்த
சுருதி நீதிமா மிருதிக டொன்மைய வாய
விரத ஞானநூல் யாவையு மோதினன் விளங்க. (க0ரு)

ஆய தன்பினத் தலந்தனி லமரரோ டயனும்
போய மேன்மைகண் டருந்ததி புரவலன் றானுந்
தேய மித்திரன் றானுமாய்ச் சேவைசெய் தரனை
நேய முற்றுட னிருந்தன ரிருவரு நெடுநாள். (க0சு)

இருநி லத்தினி லெத்தலத் திருந்தவம் புரிந்து
மொருத லத்ினு மப்பய னுறுநாள மயர்ந்து
வருமு னிக்கது தவப்பயன் வழங்கிய தென்றுற்
பொருவி லத்திரு மறைசையின் மேன்மையார் புகல்வார். (க0எ)

காதி மைந்தன் றவஞ்செயக் கருதரும் பதியில்
வேதி யத்திரு முனிவனு மேன்மைபெற் றதனை
யோதி நிற்பவர் கேட்பவ ரதன்பய னுரைப்போ
ரேத மற்றுல கிருந்துமே லெய்துவர் சிவத்தை. (க0அ)

விசுவாமித்திரச் சருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம் கச-க்குத் திருவிருத்தம் கூசஅ.

## குளகேசச்சருக்கம்.

நற்ற வத்தினுற் கவுசிக னுன்மறை முனிமெய்
பெற்ற மேன்மையி லறிந்தமை பேசினம் யாமேன்
மற்று மத்தலத் தமுதமே திரண்டொரு வடிவா
யுற்ற கோடியங் குழகர்தம் மேன்மைமே லுரைப்பாம். (க)

விண்ணு ளோர்களு மவுணரும் விண்ணர சுடன்முன்
மண்ணி னீள்பெரும் பாற்கடன் மலைத்தமு தருந்த
வெண்ணி மந்தர கிரியினை யெடுத்துமத் தாகப்
பண்ணி வாசுகி கடைகயி றும்படி பரித்தார். (உ)

விடுத்த மாமருந் தாயவை விரும்பியே கடையத்
தொடுத்த நாளிலவ் வாரியிற் சுரபிமுன் றோன்ற
வடுத்து வாருணி யுதித்திட வுதித்ததைந் தருமே
லடுத்தெ ழுந்தனர் பின்பர மகளிரி லநேகர். (ங)

## வேறு.

உதித்தது பின்பதி லுடுப திக்கலை
சுதித்தெழு கடவுள்கைக் கொள்ள வாங்கதை
மதித்திட மீளவவ் வாரி யெண்ணிறு
ளதிர்த்துமே லெழுந்ததங் கால காலமே. (௫)

எரிந்தெழு மவ்விட மூலக மெங்கணுங்
கரந்திடு கடையுகக் கனல தென்னவே
துரந்திட மாலயன் சுரர்க ளத்துட
னரந்தைகொண் டரகரா வபய மென்றனர். (௬)

அத்தனு மவ்வொலி கேட்ட போர்தனைத்
தெத்திசை யமரரு மிறந்தி டாவகை
கைத்தலத் தடக்கியக் கடுவைக் கந்தரம்
வைத்தனன் விநோதமாய் வைய முய்யவே. (௬)

உடைந்திடு மவுணரோ டும்பர் யாவரு
மிடைந்தர னடியிணை வேண்டி மாலுட
னடைந்துமந் தரகிரி நிறுவி யார்ப்பெழக்
கடைந்தனர் பாற்பெருங் கடலை மீளவும். (௭)

அன்றுழல் கடைகிரி யமிழ்ந்தப் பாதல
நின்றிடு மவுணரோ டமரர் நீடிய
ரொன்றிட வீதுகண் டோடி மாதவன்
சென்றொரு கமடமாய்ச் சேர்ந்து பாதலம். (அ)

முதுகினிற் கடைகிரி மூல நாட்டியே
பிதிரிடா ததன்முடி பிடித்தி டக்கையா
லெதிர்வல முறுகைகொண் டெழுந்து தேவர்முன்
னதிரிடக் கடைந்தன ரந்த நீள்கடல் (௯)

கண்ணனிவ் வுதவிமுன் காட்ட வானவ
ரெண்ணருங் கடல்கடைந் திட்ட போழ்தினின்
மண்ணினிற் றுகள்கடி மாறு கைக்கொடு
தண்ணென வெழுந்ததிற் றவ்வை தோன்றினாள். (க0)

தோன்றிய பின்புயர் துரக மாமணி
யான்றதன் பின்பயி ராவ தம்வர
வேன்றதி லிரண்டையு மிந்தி ரற்களித்
தூன்றரு மணியரிக் குவப்போ டீந்தனர். (கக)

பின்னு மாயிர மாண்டு பெருங்கட
றன்னை மாய்ப்பத் தனுவந் தரியதின்
மன்னு மாயு மறைவடி வாகிமா
லென்ன வந்தனன் யாவையுங் காக்கவே. (கஉ)

ஆய தற்கு நெடுநா ளகன்றபின்
றூய மிக்க வணிக டோங்கிடத்
தேய மெண்ணுந் திருமக டோன்றியே
மாய வன்றிரு மார்பையு நண்ணினாள். (கங)

ஆங்க தன்பி னமரர்க ளாருயிர்
நீங்கி மீள நிகழ்ந்தன வென்னவே
தாங்க ரும்பெரும் பாற்கட றன்னினின்
றோங்க ருஞ்சி ரமுத முதித்ததால். (கச)

வேறு.

எழுந்திடு மமுதை மாயத் தெடுத்தரி யவுணர்க் கீயா
தொழிந்திடல் வானோர்க் கீய வும்பரு மதனை வாங்கி
யழுந்திய வமுதை வேறோர் பொற்குடத் தடக்கி நோக்கி
விழுந்திற லமுதிற் றூழும் பருகினர் வேறு வேறு. (கரு)

பருகியே மிக்கி ருந்த வமுதினைப் பகுத்து வாங்கி
யொருகுடத் தடைத்துச் சேமித் தொருவரு மடரா வண்ணம்
வருகுட மிரண்டு மொக்க வாயுவின் கைக்கொ டுப்ப
வருகுநின் றவனும் வாங்கி யமருல கடைவா னுக. (கசு)

படியினின் றுலவை வேந்து மவுணர்கள் பாரா வண்ண
நொடியினி லெழுந்து வானோர் நுகர்பதிக் கேகும் போதின்
முடிவிலா மேன்மை பூண்ட மறைசையம் முதுப திக்கே
கடினமா மமுத கும்பம் வீழ்ந்தது கையிற் சாறி (கஎ)

வேறு.

அற்று வீழ்ந்த வமுதமு மங்ஙனம்
பற்றி லிங்க வடிவாய்ப் பலித்திட
மற்று நோக்கியவ் வாயுவு மாதுய
ருற்று நின்றன னேவிய மெண்ணவே. (கஅ)

ஆங்க தன்பி னமரரு மாலுடன்
பாங்கி னுலைப் பதியணு கித்துய
ரோங்கி நிற்கு மருத்தையு முற்றவன்
றூங்கு கும்பந் தகர்ந்ததுங் கண்டனர். (கசு)

மாய னீதுகண் டப்போதவ் வாயுவை
நீயு மித்துயர் நீங்குங் கருட்குறி
யாய திந்த வமுத மமரரும்
வாயு வின்பா லபராத மாற்றுமின். (உ0)

வேறு.

உம்பரீ ருலவை தன்னால் வந்ததின் றுலக முய்ய
வெம்பிரான் மறைசை வாழு மிறையவ னருளால் வீழ்ந்தின்
றம்பொ னீ டமுத கும்பஞ் சிவலிங்க மாய தாமாற்
கொம்புத லொழிக மற்றோ ரிடத்தினுங் குற்ற மின்றால். (உக)

சொல்லிலிவ் வமுதா னுங்கட் காவது நுயில்வோ வாதி
யல்லனீங் கிடுத லென்று லாங்கது விசிட்ட மாமிவ்
வெல்லைசே ரமுத லிங்க மின்றுநீ ரிறைஞ்சப் பெற்று
லொல்லையி லவைதா மன்றி யுதவிடு நினைந்த வெல்லாம். (உஉ)

வேறு.

ஆத லாலிவற் காலயம் போற்றுமென்
றோத மாதவ னும்பருங் கேட்டடன்
காத லாற்றெய்வ கம்மிய ரைக்கொடு
நீதி லாலயஞ் செய்துமு டித்தனர். (உங)

அந்த வாலயந் தன்னி லமுதமே
தந்த லிங்கந் தனையா தரவினுன்
முந்து சைவா கமத்து முறைகொடு
சிந்தை கொண்டங் கருச்சனை செய்துபின். (உச)

விண்ணு ளோரு மமுதொரு மேனியாய்
நண்ணு மீசனை நாடியு ளங்கொடிய்
வண்ண நின்றெதிர் மாமறை யின்வழி
யெண்ண ருஞ்சொற் றுதிகொ டிறைஞ்சினர். (உரு)

இறைஞ்சி நின்ற விமையவர்க் கின்னமு
துறைந்த சோதி யுருக்கொடு நின்றெதிர்
சிறந்த வன்பொடத் தேவரை நோக்கிநல்
லறந்த ருந்திரு வாக்கொன் றருள்செய்வான். (உசா)

அலகி லும நமக்கமு தேசனித்
தலம டைந்தவர் தாமருள் சார்வதற்
கிலகி யாமிங் கிருப்ப மிருத்தலா
லுலகி லீது முருத்திர கோடியே. (உஎ)

ஓது மிந்த வுருத்திர கோடியின்
மீது லாங்கட ரேய்ந்தமை வேண்டினர்க்
கேத நீக்கிநின் றீந்தின்ப முத்தியிம்
மாத லத்திலெக் காலமும் வைகுவம். (உஅ)

வேறு.

அண்டர் நீரெமக் களித்திடு பூசையுந் துதியுங்
கண்டு யாமிக மகிழ்ந்தனங் காதலித் துமதுட்
கொண்ட நீள்வர முளதெனிற் கூறுமி னென்று
தொண்டர் நாயக னருளவவ் வானவர் சொல்வார். (உகூ)

அமுத நாயக நின்னிடத் தறவுமன் பவுணர்
தமது வாதையென் றுருமலுந் தடிந்துவோ வாதி
யெமது தம்பதத் திடருறு திருப்பவு மெமக்கின்
றுமது நீடரு ளுதவுமென் றும்பர்நின் றுரைத்தார். (௩0)

அண்ண லூனுமங் கதற்குடன் பாடுசெய் தருள
விண்ணு ளோர்களு மாயனும் வேதநா தனையு
நண்ணி யேத்திநின் றமரரு நணுகினர் வான
மெண்ண ரும்புகழ் வைகுண்ட மெய்தினன் மாலும். (௩க)

அந்த நாண்முத லமுதலிங் கத்திட மாக
வெந்தை தானுமவ் வுருத்திர கோடியி லென்றும்
வந்து மூழ்கியே வணங்கினர்க் கின்னருள் வழங்கி
முந்து மாலயத் தமர்ந்தனன் மூதுல குய்ய. (௩உ)

வேறு.

உமையொரு கரத்தி லேந்தி யுடுபதி முடியு லாவி
யழகெறித் திலங்கு கின்ற வமுதேசன் றனக்கு மீள
விமையுமத் திருநா மத்தை யின்றியு மிருநி லத்திற்
குழகனென் றுன ரக்கு நாமங் கொண்டமை குறித்து ரைப்பாம். (௩௩)

முன்னொரு சுவேத னென்னு முனிவனற் சுசிலை யென்னுந்
தன்னியற் றலைவி கூடக் குழகனுந் தனைய ேனாடு
நன்னலந் தழைத்து நீடு நன்மதா நதின் றீர
மன்னிநின் றனந்த காலம் வருந்தின னருந்த வங்கள். (௩௪)

பெருந்தவ மியற்று நாளிற் பேசுநன் மதையின் றீரம்
பொருந்திய வவனி மாரி பொழிந்திடா தங்க ணுள்ளோ
ரருந்துவ தன்றி மற்றோ ரவனிசென் றணுக வங்க
ணிருந்திடு சுவேதன் றானு மெண்ணின னிதற்கே தென்று. (௩௫)

திங்கண்மும் மாரி தூவச் செழித்திரு மூன்று காலம்
பொங்கிய சாக மூல பலங்களு மொருங்கே பொங்குந்
துங்கமா மறைவ னத்திற் சொற்றரு மகத்தி யன்றான்
றங்குமாச் சிரம நன்றென் றனைவருஞ் சாற்றக் கேட்டான். (௩௬)

கொண்டுதென் றிசையை நோக்கிச் சுவேதனுங் குடும்பங் கூட
வண்டருந் தவத்தான் மிக்க வயுதமா முனிவர் சூழ
வெண்டரு நாடுங் காடு மலைகளு மிடையி லுள்ள
மண்டல மனைத்து நீக்கி மறைவன மருங்கு வந்தான். (௩௭)

பகருமப் பதியில் வேதா கமங்களே பயின்று நாளு
மிகலுட னிசை நீக்கி யிருந்தவம் புரிந்து நிற்கு
மகிலமா முனிவர் சூழ வகத்திய முனிவன் றங்கு
நிகரிலாத் தபோவ னத்தின் வளஞ்சில நிகழ்த்து வாமால். (௩௮)

இடம்பெறு கல்வி யென்னு மிரும்பொரு ளீத லானும்
படர்ந்தமெஞ் ஞான மென்னும் பன்மணி விளைத்த லானு
மடங்கலும் பரமா னந்த வமுதினை யுதவ லானுந்
தடங்கட லென்ன வோங்குஞ் சாற்றுமத் தபோவ னந்தான். (௩௯)

வேறு.

சூத மீதலால் வடுவில சூழ்ந்தரு வாசை
மாதி ரத்தலா தாங்கில வயிரமுங் கவடும்
பாத வத்தலான் மற்றில படர்களி மயக்க
மோது வண்டினத் தன்றிமற் றோரிடத் திலதால். (௪0)

தாய கன்றிடத் தனித்தவான் கன்றினிற் றயைவைத்
தேய ரும்புலி முலைசுரந் தின்னமு தருத்துங்
காய வெங்கதிர் கனன்றுலை கடும்பணிப் பார்ப்பி
னேய முற்றுநின் றிறகினு னிழலிடுங் கலுழன். (௪௧)

கான வெம்பெருங் களிற்றிளங் கன்றினுக் குகந்தை
யான னங்களு முலைவைதீர்த் தளித்திடு மன்றி
மானி னங்களும் வேங்கையும் வந்தொரு துறையிற்
றூன ருந்துநீர் தண்புனற் றுறைதொறு மங்கண். (௪௨)

ஈட்டு மாதவர் பயின்றிடு மிரும்பெரு மறைநூல்
கேட்டு நாளுமங் கயலுறை கிள்ளையி னினங்கள்
மீட்ட தன்பொருட் டொகுதியை விரும்பிமற் றயல்வாழ்
கோட்டு நீடிய பூவையின் குலங்களுக் குதவும். (௪௩)

மற்று மாங்குறு தருக்கள்கீழ் வளர்த்தி யசரயை
சுற்று வேரியம் புனலிடைத் தோற்றிய காட்சி
யுற்ற மாதவர் பாதமே லாயுறுந் தவத்தைப்
பற்றி யத்தருக் குலங்களும் பயில்வன நிகர்க்கும். (௪௪)

விலங்க லின்னடித் தாழ்வரை விடுத்துமா மதுநீர்
துலங்கு மென்மலர் தூவிவீழ் கொடிகளின் றோற்ற
மிலங்கு மாதவ ரருச்சனை யியற்றுதல் கண்டு
பொலங்கொள் பூசனை தாங்களும் புரிவன போலும். (௪௫)

ஆன மாதவர்க் குறுகிழங் ககழ்வன கேழல்
வான ரங்களுங் காய்கனி கொணர்வன மற்றுந்
தான றுங்குசை சமிதைகள் சுமப்பன கயங்க
டேனி ருல்கொடு சேர்வைசெய் திடுவன கரடி. (சுசு)

ஆய வப்பெருந் தபோவன மடங்கலு நிரையே
காய்வ தற்கென விரித்தவற் கலைதன் காட்சி
நேய முற்றவத் தபோதனர் நினைந்திடு முள்ளத்
தூய்மை யைப்புறத் தேறவுந் தோற்றுவ சிவணும். (சுஎ)

நீட ருந்துயர்ச் சிற்றின்ப நேமியுட் பட்டு
வாடி டாதுநற் பேரின்ப வாழ்வினை வேண்டி
நாடு மித்தபோ வனமென நானிலத் தோரைக்
கோட ரந்தொறு மிருந்திருந் தழைப்பன குயில்கள். (சுஅ)

சீத வண்புனல் வாவியிற் சிறந்தலர் கமலத்
தோதி மங்கள்சென் றிருந்திருந் துறங்குமக் காட்சி
மாத வத்தின ரருந்தவம் வயங்குநற் பதும
வாத னத்திருந் தியற்றிடு மன்னெறி நிகர்க்கும். (சுகூ)

வேறு.

அன்றி மாதவர் மைந்தரை யானனக்
கன்று தன்பிடர் பற்றிக் கரங்களாற்
சென்றி ழுக்கவு மேறவுஞ் சீற்றமென்
றொன்று மற்றங் குடன்விளை யாடுமால். (ரு0)

தாவ ருஞ்சீர்த் தபோதனர் கன்னிய
ராவ லாய்வளர்த் தாக்கவர் வாழிகைக்
கேவல் செய்வ கயங்க ளதற்கிருங்
காவல் செய்வ புலியின் கணங்களே. (ருக)

ஓம வேள்வி யுதவும் புகையினு
லாமி ராப்பக லங்க ணிருந்தவர்
தாம ணிந்தவெண் ணீற்றெளி தன்னினு
லேம மும்பக லாய்நின் றிலங்கிடும். (ருஉ)

வேறு.

முறைமுறை தொகைகண் முயங்கு வேள்வியிற்
சிறைகொடங் கெழுப்புமாஞ் செய்ய வெங்கனன்
மறையொலி மருங்கெலாம் வயங்கு மவ்வன
நிறைபுனன் முகிறரு நினைந்த போதெலாம். (ருங)

வேறு.

இனைய நல்வளம் பொருந்திய விரும்பெருந் தமிழ்தேர்
முனிவன் வைகுமத் தபோவன மெனுமுது மறைசை
தனைய டைந்தனன் சுவேதனுஞ் சாற்றுமத் தவத்தோ
ரனைவர் தம்மொடு மணையுமுன் னுங்கது கேளா. (ருச)

எதிரெ ழுந்துசென் றிருந்தமிழ் முனிவனு மவனை
முதிரு நல்வரத் திசைத்துடன் முறைமுறை பூசை
விதிய ளித்துமா மறைசையுள் விமலனைப் பணிவித்
ததிக னந்தர மவருடன் றபோவன மடைந்தான். (ருரு)

இருத்தி யாங்கவர்க் கிருங்கனி காய்கிழங் கிவைமுன்
றிருத்தி வேறுவே றவரவ ரரும்பசி தீர
வருத்து வித்துவேண் டுவவதன் பின்பவர் தாங்கள்
பரித்தி டும்படிக் களித்தனன் பன்னசா லைகளும். (ருசா)

இன்ன வாறருந் தமிழ்முனி யுபகரித் திடமற்
றன்ன மாதவ ருறும்பசி நோயுள தகற்றி
மன்னி நற்றவ மாங்குயர் மறைவன நாதன்
றன்னை யும்பணிந் தமர்ந்தனர் தகநெடுங் காலம். (ருஎ)

அன்ன மாதவர் தனிற்சில ரணுகுறச் சுவேத
னென்னு மாதவன் குடும்பமோ டேகியே தென்பான்
மன்னு கோடிநீ டமுதலிங் கேசர்முன் வகுத்துப்
பன்ன சாலையாங் கிருந்தனன் பரித்தருந் தவங்கள். (ருஅ)

வைகு நாளிலம் மாதவன் மைந்தனுங் குளக
னுய்கு மாறுளந் துறுந்தமு தேசனை யுவந்து
பொய்க டிந்தபே ரன்பினன் மானத பூசை
செய்க வுன்னினன் யாவர்க்குஞ் செய்வதற் கரிதை. (ருகூ)

அன்ன வன்புரிந் திடுமைடை வமுதலிங்கத் தின்
முன்னி ருந்தனு தினம்புலன் முழுதையு மடக்கித்
தன்னு ளம்பரி சாரக னுக்கியே சமாதி
மன்னி நீடரி யாசனங் கயிலையாய் வகுத்தான். (சு0)

வேறு.

மதிகொடு பாத்தி ரங்கள் சேடன்மா மகுட மாகப்
பதிவுறு மதனை யாதி கச்சபம் பரிப்ப தாக்கிக்
கதிதரு யமுனை சந்திர பாகைகா வேரி யென்னு
நதியினைப் பாத்தி யாச மனமருக் கியமா நாட்டி. (சுக)

அந்தமின் மஞ்ச னங்கள் கங்கைநீ ராக வாட்டிச்
சிந்தைகொண் டாடை யாகத் திசைகளெட் டினையுஞ் சேர்த்திச்
சந்திரன் கந்த மாக வலர்கடா ரகைக ளாகக்
கந்தநீண் மாலை யாகச் சாத்திவான் கங்கை தன்னை. (சுஉ)

வரிக்குழுப் புரிநூ லாக வாசுகி மற்ற நாகந்
தரிக்குநற் குண்ட லங்க ளங்கதம் வளைதா னுகப்
பரிக்குமா பரண முற்றும் பரிதிபன் னிருவ ராகத்
தெரிக்குநீ டூப மேகங் கோள்களே தீப மாக. (சுங)

உலகமீ ரேழு மன்ன மாகவவ் வுலகிற் றோன்று
மலகில்வான் பயன னைத்து மளவில்வெஞ் சனமே யாக
விலகுவா ரிதிக ளேழு மினியவான் பால தாகக்
குலவரை யனைத்தும் பேதங் கொண்டிடு மபூப மாக. (கூச)

சிமையநீ ணதிமற் றெல்லாம் பானிய மாகச் சிந்தித்
தமைவுறும் பூல மாக வரதன மளவில் வான
மிமைகொள் கண்ணாடி யாக விலங்குவெண் சவரி தானே
சமரிக ளாக வாயுத் தாலவட் டங்க ளாக. (கூரு)

இந்த வாறரிச் சனைக்காங் காயவை யெல்லாங் கற்பித்
தந்தரி யாக பூசை யனுதின மவனி யற்றிச்
சிந்தைகொண் டமுத மீன்ற செய்யமா மணியை யன்பால்
வந்தனை செய்து நின்று துதித்தனன் மகிழ்ச்சி பொங்க. (கூசு)

வேறு.

சங்கர விமல நிராமய வனந்த வானந்தத் தாண்டவ வுரக
கங்கண பரம்பரா பரநீல கண்டகங் காதர வமல சாந்த
புங்கவ வமுதந் திரண்டெழு வடிவ புராந்தக திகம்பர புனித
வங்கண போற்றி நின்சர ணடைந்த வடியனை யாண்டருள் புரியே.()

என்றவன் றுதிப்ப மகிழ்ந்துட னமுத லிலிங்கமா யிருந்திடு பரம
னன்றவன் றனக்கு வெளியிலே காட்சி யளித்திட வதிசயித் தவனுந்
துன்றுமெய்ப் புளகம் விழிகளா னந்தஞ் சொரிதரப் பரவச னாகி
நின்றெனை யுகந்தாண் டருளரு ளென்று நிரத்தின னனந்த நிருத்தம்.

வேறு.

அன்ன வன்றனை யரன்றிருக் கரங்களா லணைத்து
நின்னு ளந்தரு பூசையான் மகிழ்ந்தன நினக்கின்
றென்ன நல்வரம் வேண்டினு மியம்புகென் றியம்ப
முன்ன வன்றனைத் தொழுதெதிர் குழகனு மொழிவான், (கூக)

பத்தி யென்றுநின் பதாம்புயம் பற்றவு மென்பேர்
வைத்து நின்பெயர் வழங்கவு மயுதமா தவரு
முத்தி யானுமென் றந்தையு முவந்தினி திருக்கு
மெத்த லத்தினுங் கரிப்பெனு மிடருறு திடவும். (எ0)

இனைய னல்வரம் வேண்டிட வளித்திறை யேகச்
சனக னம்மனை தன்னுடன் குழகனுந் தவஞ்செய்
முனிவர் சூழ்தரத் திங்கணும் மாரியே மேயங்க
வினிதி ருந்தனன் கரிப்பெனு மிடருறு வங்கண். (எக)

குழகன் வேண்டுகோ ளாற்குள கேசனென் றுலகில்
விழைகொ ணுமமே விரவுமவ் விறையவன் மேன்மை
கழறு கின்றவர் கேட்பவர் கரிசெலா மறுத்து
வுழைக்க ரன்பர பதமுமே லுறுவரீ துண்மை. (எஉ)

குளகேசச்சருக்கம் முற்றிற்று.

ஆகச் சருக்கம் கரு-க்குத் திருவிருத்தம்-க0ககரு.

---

## தனபாலச்சருக்கம்.

புரிதரு மழுத மேனி பொருந்திய குழகர் மேன்மை
பரிவுகொ டறிந்த வண்ணம் பகர்ந்தனந் தனத னுக்குத்
தெரிதரு மமைச்சாந் தன்மை திகழ்தன பால னங்கண்
கரியுரு வான சாபந் தீர்ந்தமை கழற லுற்றும். (க)

சாற்றின்முன் னளகை தன்னிற் றனதனுக் கறிவு ணர்த்து
மேற்றமா மியக்கர் தம்முட் டனபால னென்னும் பேராற்
போற்றரு மொருவன் வேந்துக் குறும்பொருள் புகன்று நாளு
நாற்றிசை புகழச் செல்வ நலம்பெற நடக்கு நாளில் (உ)

வேறு.

அன்னவனு மப்பதிய ரம்பையரின் மிக்கா
ளென்னவுல கேத்துகிரு தாசியெனும் வேசி
தன்னின்மிகு காதல்கொடு சற்றுமக லாமற்
றுன்னமளி யூடவளொ டின்பமது துய்த்தான். (௩)

ஆங்கவனு மிப்பரிச ளப்பரிய போகத்
தோங்குநெடு நாள்செலவு மோர்கணம தென்று
நீங்கரிய காதல்கொடு நின்றளகை யாளி
யாங்குபெறு தாளிணைப ணிந்திலனி ருந்தான். (௪)

வேறு.

இந்த வாறவ னிருப்பவவ் விறைவனு மழைத்தாங்
கந்த மில்பெருங் கோபமுற் றவன்றனை நெடுநாள்
வந்து ழுறதுநீள் போகமே மன்னினை யதனாற்
றந்தி யாகிநீ யவனிமேற் போகெனச் சபித்தான். (௫)

அன்று சாபமிட் டருளிய வளகையாள் வேந்தைச்
சென்று தாழ்ந்துட னமைச்சனுஞ் செப்புவான் யானின்
றொன்று செய்பிழை பொறுத்தெனை யுற்றவிச் சாப
மென்று நீங்கிடு மெனக்கருள் புரிதியென் றிசைத்தான். (௬)

என்னு மத்தன பாலனுக் கரசனு மிரங்கி
யுன்னு நீடறி வுடன்கரி யுருக்கொடு புவியின்
மன்னி வேதகா னனமுறை வள்ளலை வழுத்திற்
பன்னி ரெண்டாண் டளவிலிப் பழியறு மென்றான். (௭)

சாற்று முன்றன பாலனுந் தந்தியி னுருவாய்த்
தோற்றி நின்றவத் தந்தியுஞ் சுருதிகா னனத்தில்
வீற்றி ருந்திடு வள்ளலை வேண்டிவெஞ் சாப
மாற்றி டும்படிக் கறிவுகொண் டடைந்ததம் மறைசை. (௮)

மறைசை யம்பதி வந்துமா தங்கமும் வாரித்
துறைப டிந்துசென் றவ்வனச் சூழல்புக் கங்கண்
முறைமை யாவையுங் கண்டுள மகிழ்ந்துமூ தறி வா
லிறைவ னைப்பணிந் தமர்ந்ததங் கிருந்தவம் புரிவான் (௯)

காலையி லெழுஞ் செலுங் கடலின் மூழ்கிடுஞ்
சாலுநீள் வனத்தினுந் தடாகந் தன்னினு
மேலவார் மலர்கனி யெடுக்கு மேந்திடுங்
கோலுநீர் துதிக்கையிற் கொடுவ ரும்புகும். (௧௦)

புகுந்தா லைய முன்னர்ப் போய்ப்பலி
பகுந்திடு பீடமேற் பகரு நான்மறை
யுகந்திடு மிலிங்கமென் றுண்ணி னைந்ததிற்
றகுந்திக ழருச்சனை தரிக்கு நாடொறும். (௧௧)

ஈட்டத னருச்சனை யடைவி னைசக்கினீ
ராட்டிடுந் துதிக்கைகொண் டடர்ந்து சந்தனிற்
கோட்டினை கொடுதருங் குளிர்ந்த பங்கயத்
தோட்டலர் முதன்மலர் சொரியு மன்புடன். (௧௨)

கானுகுங் குற்கிலாற் றூபங் காட்டிடுந்
தானுகு மணிகளாற் றீபந் தாங்கிடும்
போனக மாய்க்கனி பலபு குத்திடு
மானத மாய்ச்செப நெறிவ குத்திடும். (௧௩)

துதிக்கை கூப்பு மிரங்குந் தொழுதெழுங்
குதித்து நாதங் கொடுமுழ வேற்றிடு
மதிக்கு நிற்கும் வலம்வரு மன்பின்மெய்
விதிர்க்கு மானந்த வாரி விடுத்திடும். (௧௪)

### வேறு.

இந்த வாறருச் சனைசெயப் பன்னிரெண் டாண்டிற்
றந்தி யாமுரு வகன்றுமுன் போற்றன பால
னந்த நல்லுரு வாகவாங் கவனுமம் மறைசை
யெந்தை தாள்பணிந் தேறின னெழில்புனை விமானம். (கரு)

போந்த னன்னள காபுரி புகன்றவப் புரியின்
வேந்த னைப்பணிந் தவனருள் முன்பினும் வேண்டி
யாந்த குந்திற லமைச்சனு மனவருஞ் செல்வத்
தேந்து கொங்கைநன் மாதரோ டின்பமுற் றிருந்தான். (கசு)

### வேறு.

ஆதலினு கந்நுதன பாலனருள் பெற்ற
காதையுரை செய்தவர்கள் கேட்பவர்க ளிப்பா
லோதரிய வெம்பழி யொழித்துலகி லின்புற்
றேதமில்ப ரம்பொருளோ டின்புறுவ ரென்றும். (கஎ)

### தனபாலச்சருக்கம் முற்றிற்று

ஆகச் சருக்கம் கசு-க்குத் திருவிருத்தம்-க0௩௩.

---

## தேவர்தொழுமன்றச் சருக்கம்.

ஓவரு மத்த லத்துட் டனபால னுகந்து சென்று
தாவருஞ் சாபந் தீர்த்த லறிந்தமை சாற்றி னேமாற்
பூவலை யத்து ளீரெட் டாகமுன் புகலு மன்றுட்
டேவர்கள் பணியு மன்றீ தாயது தெரித்தல் செய்வாம். (க)

தோற்றிடு முயிர்கட் கெல்லா நினைந்திடற் றுதிக்கிற்காணி
லேற்றமா முத்தி நல்கும் பரமரா சியமா யார்க்கும்
போற்றரு நடன மீசன் புரிவதற் கிடம தாகச்
சாற்றுமம் பலங்க ளெண்ணிற் றரையினு ளீரெட் டாமால். (உ)

ஆங்கதின் முதலா மன்றந் தில்லைமன் றதற்கு மேலைப்
பாங்கரின் மேலாஞ் சிற்றம் பலமெனு மிரண்டா மன்ற
மோங்கதன் குடபா லாக யோசனை யைந்துக் கப்பாற்
றூங்கருங் குடந்தை மூன்றாஞ் சபையெனச் சாற்று நிற்பர். (ங)

அன்னதன் றென்பா லாக வையரை யோசனைப்பாற்
கன்னகுப் பசமென் றோதுங் கருதரு நாலா மன்ற
நன்னக ரதன்றன் கீழ்பா னைலரை யோசனைக்கே
மன்னிய வெண்கா டைந்தா மன்றதன் வடபா லாக. (ச)

ஒன்றினுக் கற்ப நூன முற்றயோ சனையி லாறு
மன்றமா வயங்கு காளி புரமதன் மருங்கு பாத
நின்றயோ சனையிற் கீழ்பா னேமியங் கரையின் மேல்பாற்
பின்றகு மேழா மன்றம் பிரவேசி னியதன் றென்பால். (ரு)

வேறு.

ஆங்கொ ரற்ப மருகிய யோசனைப்
பாங்கர் மாரன் பொடிபடப் பார்த்தரன்
றூங்கு சம்புவி னேதமென் றேசக
மோங்கு மன்றமெட் டாவதென் றோதுவ. (சா)

அன்ன தன்றென் புறத்தரை யோசனை
தன்னி லொன்பான் றகுங்கால நாசினி
யென்னு மன்ற மிதன்வாயு மூலையிற்
பன்ன ருஞ்சொற் குரோசனை பாதியில். (எ)

பாவ நாசினி யென்று பரவுபத்
தாவ தாமன் றதன்மேற் கருகய
லோவ ருஞ்சுப் பிராந்தமென் றேதுவ
தாவ ரும்பதி ஞேராஞ் சபையது. (அ)

தெரித்த தன்கீழ்ப் புறத்தடை தென்றிசை
தரித்த யோசனை மூன்றரை தன்னினு
லுரைத்த மன்று காரோண மதற்குமேன்
முரித்த தென்றிசை யோசனை மூன்றினில். (கூ)

வேறு.

செறிதரு மறைசை தானே தேவர்போற் றிடுமன் றென்று
நிறைதரு பன்மூன் ருக நிகழ்த்துமா மன்ற மற்ற
முறைதருமன்ற மூன்று மொழிவதற் குண்மை யாக
வறிகில னறிவர் வேத மறிந்தவ ரறியா ரல்லோர். (க0)

ஆரண வனமற் றிப்பாற் றேவர்வாழ் மன்ற மாய
காரண மெவ்வா றெந்தக் காலமோ வென்னின் முன்னாட்
டாரணி துன்பஞ் செய்பு மிரணியன் றன்னைச் சாட
நாரண னர சிங்க வடிவினை நண்ணு நாளில். (கக)

வேறு.

அன்று தன்னுட னெதிர்த்திடு மிரணிய னுவி
கொன்ற வன்றன துதிரமே குடித்துடல் களித்து
நின்ற கந்தைகொண் டெமையலா னீடுல கத்தி
லொன்று மேம்படு பொருளிலை யென்றுளங் கொண்டான் (கஉ)

ஆசின் மாயனு மகம்பிர மங்கொடங் கயனை
வாச வன்முத லமரரை வம்மினென் றழைத்துப்
பேசி னுந்தமக் கேத்தரும் பெரும்பொருள் யாமே
தேச மீதினி லெமையலா திலையொரு தெய்வம். (கங)

ஆதலா லெமை வணங்குமி னகிலதே வதைக்கு
நாத னமலா தயவிலை நவிற்றிடி னுலக
மீதி னீருநும் பதங்களை வேண்டிடி னமனா
யாத மேகதி யென்றெமைப் பற்றுமி னென்றான். (க௪)

என்ற மாயனை நான்முக னகைத்தெதிர் நோக்கி
நன்று நன்றுநீர் நவின்றதிங் குமக்குநந் தமக்கு
மன்றி வானவர் தானவ ரனைவர்க டமக்கு
நின்ற நீடுல கங்களாய் நிகழ்த்துமற் றினுக்கும். (கரு)

தலைவ னாகிநின் றனைத்தையு மொழிக்கவுந் தரவு
மலகில் போகமு மருந்தவு மருத்தவு மவனே
வலவ னாகிநின் றியாவரும் வணங்குறுந் தெய்வ
முலக மீதினிற் சிவனலா துரைக்கில்லை யுளதோ. (க௬)

எனவு ரைப்பநின் றயனதை நரவரி யென்னு
மனம திற்றனை யலாதுமே லிலையென மதித்தன்
றனைவர் தம்மையுந் தம்புய வலிகொடங் காள
நினைவு கொண்டனன் கண்டதை நீள்சடை யோனும். (கள)

பரவி டாதமுற் றக்கனை வதைத்தவப் படிபோற்
சரப ரூபம தெடுத்துட னரவரி தாங்கு
முருவு தன்னுட னகந்தையு மொழித்தன னப்போ
தரியு மவ்வறி யாமைவிட் டவ்வுரு வகன்றான். (கஅ)

ஆதி யாகிய தலைவனன் றரனென வறியும்
போத முற்றுநின் றிப்பிழை பொறுத்தருளென்றம்
மாத வன்சிவ னடியிணை வணங்கியுச் சியின்றன்
மீதி லஞ்சலி கூப்பியே வெருவிநின் றுரைப்பான். (கக)

வேறு.

அரகர பரம சிவசிவ வனந்த வானந்த தாண்டவ விமல
புரகர நிரத விடதர வகண்ட பூரண பராபர புனித
வரகரி யுரிவை புரிதரு வரத மனோகர சங்கர பிரம
சிரகர வகில புவனமும் பணியுந் தேவனே தேவநா யகனே. (உ0)

என்றவன் போற்றச் சரபமா யரனு மெடுத்திடு முருவினை மாற்றி
நின்றிட வரியு மயனுமிந் திராதி நிகழ்த்திய விமையவர் முற்றுஞ்
சென்றடி பரவ வருள்கொடுத் தகில தேவர்க டம்மொடுங் கூட
வன்றர னணைந்தானும்பரோ டிம்ப ரருள்பெற மறைசையம் பதியை.

வேறு.

சேனையுட னத்தலம டைந்துதிரு மூலட்
டானமுறு வள்ளறிகழ் சன்னதியின் முன்ன
ரானதொரு மன்றுடன மைத்திறையு மங்கண்
வானவர்கள் காணநட னத்தொழில்வ குத்தான். (உஉ)

சித்தரொடு சாரணரி யக்கர்திசை யாளர்
மெய்த்தவர்க ணங்கண்முதல் வேதமயன் மாலும்
பத்திகொடி றைஞ்சவுமை பற்றியிடு தாளத்
தொத்தறமி தித்துநட மிட்டனனு கந்தே. (உங)

பந்தமற முத்திநெறி பற்றவம ரர்க்கா
னந்தநட மிவ்வணந டித்தருளி நாதன்
சந்தவன மீதமரர் தம்மையு மிருந்தே
யிந்தவகை நாடொறுமி றைஞ்சுநட மென்றான். (உச)

என்னமறை சைப்பதியு ளெண்ணரு மிலிங்கந்
தன்னையுமவ் வானவர்த னித்தனியி ருத்திப்
பன்னருமு ரிச்சனைப ரித்துமிக நாளு
நன்னடன முந்தொழுதி ருந்தனர்ந யப்பால். (உரு)

அன்றுமுதல் வானவர்கள் சேவைபுக வங்க
ணின்றமர்த லான்மறைசை நீடமரர் போற்று
மன்றமெனு நாமமும்வ ரித்ததிலம் மாய
னென்றுறவி ருத்துசிவ லிங்கமது கந்தே. (உசு)

கண்டவர்கள் மாலொடுக லந்திடுவர் வேதன்
கண்டசிவ லிங்கமது காணிலவ னுவர்
கண்டிடினு மும்பர்பதி கண்டசிவ லிங்கங்
கண்டிடுவ ரும்பரொடு காணரிய போகம். (உஎ)

தினகரனி லிங்கமிக வும்பெருமை செய்யுங்
கனலவனி லிங்கமது காணிலொளி காட்டு
மனிலவனி லிங்கமுர மாக்குமறை யங்கண்
மனைதருமி லிங்கமுயா கல்விவர வைக்கும். (உஅ)

மற்றவிமை யோர்மறைசை வைத்தசிவ லிங்க
முற்றவரு நீடுபுக ழுற்றவர்ப தங்கள்
பெற்றிடுவ ரொத்தறமி தித்தபெரு மானைப்
பற்றினர்க ளற்றிடுவர் பாவமுள வெல்லாம். (உகூ)

வேறு.

திங்க டிங்களிற் றேய்பிறை யட்டமி தினத்தவ்
வங்க ணன்பதங் காண்கினு மன்றியே மாசி
தங்கி டுங்குகு தினத்தினிற் றடங்கட லாடிப்
பொங்கு மன்னடங் காண்கினும் பொருந்துவர் முத்தி. (௩0)

மாசி தங்கிய மகமுறை யுவாவினீ ராடிப்
பேசு மத்திரு நடம்புரி பிரானடி கண்டோ
ராசை யுற்றநற் போகமா யுளவெலா மருந்தித்
தேசு பெற்றுமேற் சிவனொடொன் றுகுவர் திண்ணம். (௩க)

வேறு.

எப்படித் தில்லை மன்று ளிறைவனைக் காண்கின் முத்தி
யப்படி யாகு மிந்தத் தேவர்மன் றரனைக் காண்கின்
மெய்ப்படு மின்பமுத்தி வேண்டின ராத லாலே
யொப்பறு மன்பாற் காண்க வொத்தற மிதித்தோன் பாதம் (கஉ)

நீடுமத் திருவெல் லைக்கு ணிருதியி லவுணர் மாயச்
சாடுதற் கங்கண் வைகுஞ் சருச்சிகை யென்னு நாம
மோடியங் கவளோ டண்ணல் முயங்குமற் றவளை யங்க
ணாடினர் கட்கு மொன்னார் நவைபுகா நன்மை சாலும். (கங)

வேறு.

மாசித் திங்கள் வளருறு சத்தமி
வீசு நாளில் விளம்பு மறைநசையுட்
டேசு மிக்க தினகர னைத்தொழ
நாச மாம்பிணி யாவு நலந்தரும். (கச)

வேறு.

சொற்ற நற்றிரு மன்றினை நினைப்பவர் துதிப்போர்
மற்று மாங்கது காண்பவர் மதிக்குமம் மேன்மை
பற்றி யன்பொடு கேட்பவர் படிப்பவ ருலகின்
முற்று ணர்ந்தவர் யாவரு முத்தரே யாவார். (கரு)

தேவர்தொழுமன்றச்சருக்கம் முற்றிற்று.

ஆகச் சருக்கம் கஎ-க்குத் திருவிருத்தம் க0கூஅ

---

## தீர்த்தமுத்திச்சருக்கம்.

அத்த லந்தனை யமரர்வாழ் மன்றம தாக்கி
நித்தர் மாநடனம் புரிந்தமை நிகழ்த்தினம் யாமேற்
சித்தி நல்குமப் பதியது தீர்த்தமே யாட
முத்தி நல்குமென் றறைந்தது லறிந்தமை புகல்வாம். (க)

வேறு.

முன்னமா லுகந்து நின்று முக்கணன் றன்னை நோக்கி
யின்னலுற் றுழலு மிந்த விருவினை வாழ்க்கை நீக்கித்
தன்னிக ரிலாத முத்தி தனைப்பெறு தற்கு பாய
மென்னென வுகந்து கேட்ப விறையவற் கருளா லுற்றான். (உ)

மாயனீ யுரைத்த மாற்ற மலரவன் முனிவர் வானோ
ரேயுமற் றறியா வுண்மை யிசைப்பரி திதன்பான் மிக்கோ
ராயமா ணவர்க்கே யேனு மசலமா மகட்கு நாமுன்
னேயமுற் றேகாந் தத்தி னிகழ்த்துப தேச மீதால். (ங)

அன்னதை நின்பா லன்பா லறைகுவ மாற்றின் முத்தி
யென்னுமற் றதுதான் மாறு திரண்டற விறைவ னோடு
மன்னிநின் றனந்தா னந்த மருவுத லதுமெஞ் ஞானந்
தன்னிடத் துதித்தா லன்றிச் சார்புறா தஃதே சாற்றில். (ச)

பூத்திநீள் கிரியை யோகம் பயின்றுநின் றதனான் மாறு
வத்துவ சுத்தி செய்வித் தறிவரு நாதாந் தத்தி
நித்தனோ டிகந்தங் கான்மா நிகழ்நிலை கண்ட முனே
சத்திய முணர்மெஞ் ஞான மெனமறை சாற்று மாலே. (ரு)

சிந்துவை நாவா யன்றிச் செலவரி ததர்கோ லன்றி
யந்தகன் மாட்டான் போலு மத்துவ சுத்தி யன்றிப்
புந்தியுண் ஞானேற் பத்தி பொருந்திடா ததனுன் ஞானம்
வந்திடு மப்போ தப்போ மருவிடு முத்திவாழ்வு. (சா)

எண்ணரு ஞான மேனி யாகிய விறையை ஞானக்
கண்ணினு லன்றி யூனக் கண்ணினுற் காணெ ணுதான்
மண்ணினும் வினைக்கீ டாக வரும்பிறப் பிறப்பாந் துன்ப
நண்ணிடா முத்திக் கேது ஞானமே யன்றி யின்றால். (எ)

வேறு.

வினையெ னுங்கடல் கடப்பதற் கிலகின்மெஞ் ஞானந்
துனைய லாதிலை யஃதுமோர் சரிதைகண் முதன்மூன்
றினைவ ருந்திறின் றல்லதெய் தாதவை யியற்றி
யனைய ஞானமுற் றடைகவேன் முத்தியு மரிதால். (அ)

ஆய வாதலா லெளிதினின் முத்தியை யடைதற்
காய வாறுணர்ந் தறைகுவ மறைவனத் ததிக
மாய வாரண வாரிதி யாடிலே யமையுமென்
றூய வாவறு ஞானமேன் முத்தியு மடைவர். (கூ)

வேறு.

செப்பரு மாரூர் தன்னிற் றில்லையிற் காசி தன்னி
லெப்பரி சுறிக்கிற் காணி லிறந்திடி லெய்து முத்தி
யப்பரி சுரைத்த வேத வனத்தினீ ராடிற் போது
மொப்பரு முத்தி சார்வ ருரைக்கிலீ துண்மை யென்றான். (கo)

இன்னவா றுய னுக்கன் றிறையவ னருளு முண்மை
தன்னையா னுங்கட் கன்பாற் சாற்றினன் மறைகள் போற்று
மன்னகர்த் தீர்த்த மாடி யரனடி வழுத்தி முத்தி
மன்னின ரநேகர் தம்முட் சிலர்கதை வகுப்பக் கேண்மின். (கக)

வேறு.

மெய்த்தாபதர் தங்கட்குளம் வேண்டும்வர முதவு
நத்தார்புனல் விதிசைப்பெரு நதியின்கரை மீதே
யுத்தாலக னென்னும்மொரு முனிவன்னுயர் தவமு
னத்தாபத ரொடுசெய்துகொ டங்கண்ணுற வமர்ந்தான். (கஉ)

அமரும்பொழு தவனைங்கணை யணுகாவிர தத்தால்
விமலன்பத நினைவான்றவ மேவும்படி கண்ட
தமராவய லுறைமாதவர் நோக்காதவன் றன்னை
நமர்போலடை வினிலில்லற நணுகல்லது நவிலில். (கங.)

மகவற்றவர் மேனற்கதி மருவார்பசு வுதரந்
தகவற்றுட லதிலீன்றன தம்மோடுபி றக்கும்
பகினித்திற மெண்ணுதுபு ணர்ந்தேபகர் நிரயம்
புகநிற்பர்க ளதனுன்மனை யறநீபுகு வென்றார். (கச)

என்றன்னவர் மறைநூல்வழி யீதென்னவு மிசையா
நின்றன்னவன் றவமாவது துறவென்றுநி னைந்தே
யொன்றுந்திட விரதத்துட னுறைநாளினி லொருநாட்
கன்றுங்கன லினின்வீரிய மறியாதுக லிப்ப. (கரு)

வேறு.

கண்டு பாரில்வீண் கலிக்கலா காதெனக் கருத்துட்
கொண்ட வன்னதை யோனியுள் விடுவதாய்க் குறித்தோர்
முண்ட கத்தலர் புகவைத்து மொழிந்தவன் னதியின்
மண்ட ரும்புனல் விடுத்தனன் விடுப்பமற் றதுவும் (கசு)

அன்ன மூர்த்தியைத் தரித்திடு மருந்தனிக் கமல
மென்ன வாங்கவன் வீரிய மேந்துமக் கமல
மன்னு நீர்வழி கடறுயில் மாதவ னிருக்கை
தன்னை நாடியே செல்வபோற் றுன்செலும் போதில். (கஎ)

தோன்று நற்பிர தாதர னென்றுசொல் வேந்த
னீன்ற கன்னியாஞ் சுகேசினி யெனுமொரு மாது
தான்ற குந்துணைப் பாங்கியர் தாதியர் சூழ
வான்ற வந்நதி நீர்புகுந் தாடவென் றணைந்தாள். (கஅ)

அணுகி யன்னதி நீர்புகுந் தாடுமவ் வெல்லை
நணுக வீரியந் தாங்குமவ் வலரதை நாடித்
துணைத ரும்விதி வழிகொடச் சுகேசினி யெடுத்து
மணம ருந்துவாண் மோந்தனண் மகிழ்ந்ததி சயித்து. (ககூ)

மோந்த போதினின் முனிவனுண் முளரியில் விடுப்ப
வேந்து வீரிய மாங்கவ ளுசியி னிடையே
போந்து சென்றுடன் கருப்பகோ ளகையினிற் புகுத
வாந்தி றந்தெரி யாதவ ணன்னதி யாடி. (உ0)

ஆய வெள்ளமோ டாடியவ் வெள்ளமாங் குகந்து
போய ணைந்தனண் முன்புபோற் புரவலன் கோயிற்
றூய கந்தனை யன்றவ டாங்குவீ ரியமு
மாய மென்னவே வளர்ந்தது வளர்பிறை மான. (உக)

இன்ன வாறுநா டொறும்வளர் தோறுமிக் கருப்ப
மன்னு நீள்குறி கண்டுள மருண்டட னவட
னன்னை யாகுதே சோவதி யாய்ந்தரும் புதல்வி
தன்னை நோக்கியீ தென்னெனக் கேட்டன டனித்து. (உஉ)

கேட்ட போதவள் கேடிலாய் கிளர்க்கில்யா னறிய
வீட்டு மாறிதிங் கன்றெனு வீன்றவள் கேளா
நாட்டி லாம்பழி யென்றுட னரபதிக் கிசைப்ப
வாட்ட முற்றவன் வெகுண்டுளம் போதவு மருண்டான். (உங)

சாத லாற்றினும் பெண்பழி தவிர்ந்திடா தில்ல
மீதி ருத்தினுங் கன்னியா மகப்பெற விளைத்த
போதி னங்குலத் தோர்க்கப வாதமோ போகா
தாத லாலவட் புறம்விட லறமெனத் தெளிந்தான். (உச)

அதுல னும்பழிச் சொல்லுரு தறிவெனு மரத்தாற்
புதல்வி யென்னுமப் பாசமாம் விலங்கினைப் போக்கி
யெதிரின் மாதவத் தூற்கட னெனுமுனி தங்கும்
விதமு றுந்தபோ வனத்தவட் டனிபுக விடுத்தான். (௨௫)

விடுத்த மன்னனு மீண்டிட வெந்துயர் நாண
மடுத்த கன்னியை யருந்தவன் கண்டினி தாற்றி
யெடுத்து நீடருள் புரிந்துதம் புதல்வியென் றினிமை
கொடுத்தி ருத்தினன் றங்குலக் கோதைய ரோடும். (௨௬)

விரும்பி யாங்கவ ளிருந்திட விளைந்தவக் கருப்ப
நிரம்பி வந்தெழ முன்புகு நாசியி னெறியே
திரும்ப வீன்றன ளீரைந்து திங்களி லொருசேய்
தரும்பெ ருந்தவ வீரியத் தனிக்களி றென்ன. (௨௭)

வேறு.

கன்னிகை நாசி யானன் மகவினைப் பெற்ற காட்சி
யென்னிதென் றதிச யித்துற் கடனெனு மிருந்த வத்தோன்
றன்னருஞ் சமாதி தன்னிற் றக்கவத் தனையன் றன்னை
மன்னுமுத் தால கன்றன் மைந்தனென் றெண்ணிக் கண்டான் (௨௮)

வேறு.

கண்ட போதிலவன் மைந்த னைப்பெரிது காதல் கூர்தரவ ளர்த்
தெடுத், தெண்டி றற்பெயரு நாசி கேதுவென வீந்து கல்விவரு வித்
தபின், பண்டை முற்றியபி றப்பு ணர்த்தியுயர் பால னைப்பொருவி
ருதைபாற், கொண்டு சென்றவன தேவல் செய்கெனவி டுத்த னன்
குறிகொ ளாவணம். (௨௯)

விடுத்த வத்தனைய னுந்தனையர்தவ மேவு மாரணிய மேவிமற், றடுத்த மாதவரை முன்ப ணிந்துதன தையர் தாமொழு ததன்பினன், னெடுத்த சித்தமொடு தந்தை தன்னினுமி ருந்த மாதவர்க ளேவுமுன், மடித்தி டாதவர வர்க்கு வேண்டுபணி வாகு செய்துகொடு மன்னி னான். (௩0)

சீல மாதவர் வியுப்ப விப்பரிசு செய்த வர்க்கினிய செய்தொ ழின், மேலு மீன்றவனு ளங்கொள் வாமுழுகி மேவு நாளிலொரு நாளிலுத், தால னுங்கவனை யார்கொ லென்னவரல் சாற்றி முற்செ யல்க டாழ்ந்துபின், பால னுகுமென தன்னை நின்மனைப ரிக்கு மாறு முத வென்றனன். (௩க)

நாசி கேதுவிவை கூற மாதவனு நாடி முற்செயலை ஞானநீ டேசு கொண்டவிழி கொண்டு மாங்கதுதெ ளிந்து கண்டு புது மைத், திதென், றுசின் மைந்தனையு கந்து நோக்கிநின தன்னை தன்னையழை சென்றெனுப், பேசு முன்புவிடை கொண்ட வன்றனது பெற்ற தாய ரரு குற்றனன். (௩உ)

உற்ற வட்கினிது தாதை சொன்னவையு ரைத்து வாகொலென வன்னைதன், சொற்ற நன்மகவை நோக்கி முன்புலகு சொல்ல நின்ற பழி யன்றியு, மற்று மைந்தவிஃ தேனு மாறிலப வாத மாய்விளைய வேண்டுமோ, பெற்ற தாதையுத வாது கன்னியர்பெ றுங்கொ லோத லைவர் தன்னையே. (௩௩)

வேறு.

வெய்ய நல்குர வாயினு மிகுசெல்வ முறினுஞ்
செய்ய வான்றமர் சேர்கினுஞ் சேர்ந்திடா விடினு
மைய நீர்மனம் புகுத்தினும் மனம்புகா விடினுந்
தைய லர்க்கொரு காலமுந் தமதுமூப் புளதோ. (௩௪)

எந்த நாளினுங் கன்னியாம் பருவமே லீன்றோன்
வந்து வேட்டவன் வேட்டபின் மூப்புவந் துற்றான்
மைந்தர் காத்தளித் திடுவது மன்றிமங் கையர்க்காய்த்
தந்தி றத்திலொன் றியற்றினுந் தரும்பழி யுலகில். (௩௫)

தனைய வாதலா லத்தவர் தமக்கெனை யாள
நினைவ ரேலெனைப் பயந்தன னீதிசேர் மன்னன்
மனைய கத்திலுற் கடனனு மதிகொடு வதுவை
புனைவ தேயறம் போகுமுற் பழியுமப் போது. (௩௬)

என்று ரைத்திட வன்னையப் புதல்வனு மெழுந்து
சென்று தாதைபா லாங்கவள் செப்பிய மாற்ற
மொன்றொ ழிந்திடா துரைத்தனன் கேட்டட னுகந்து
நின்ற மாதவ னஃதற மாமென நினைந்தான். (௩௭)

நாசி கேதுவை யுடன்கொடுத் தாலக னணுகித்
தேசு லாவுமுற் கடன்றபோ வனருசெறிந் தணைந்தும்
பேசி யாங்கவ னுடன்பிர தாதுரன் பெரிய
வாச மாநகர் புகுந்தனன் மன்னவற் காண்பான். (௩௮)

கண்டு வேந்தனை யரசுரை கழறியுற் கடனைக்
கொண்ட வன்றரு குமாரியாஞ் சுகேசினிக் குலகிற்
பண்டை வந்துறு பழிச்சொலின் காரணம் பகர்வித்
தெண்ட ரும்மணத் தவட்பெறத் தனக்கிசைப் பித்தான். (௩௯)

வேறு.

இந்த வாய்மைகள் கேட்ட போதினி வின்று நம்மர போர்க்கெலா
நிந்தை தீர்ந்த தெனத்தெ ளிந்துட னின்ற நீணெறி நிருபனுஞ்
சிந்தை கூர்ந்து தபோவ னத்துறு செய்ய தன்மக டன்னைநன்
மைந்த னோடு முகப்பொ டேகொடு வந்து தன்மனை யின்புறம். (௪௦)

வைத்து நன்மண முரச மன்னனு மாந கர்க்கறை வித்துநீ
டத்த ருந்திரு வனைய மாதை யலங்க ரித்தவ ளருடரும்
புத்தி ரன்றன னுடனு கந்தவை போற்ற மேன்மையுத் தாலனு
மெய்த்த வக்குரி சிற்க ளித்தனன் மேவு மொக்கல் விருப்புற. (சக)

செய்ய மாதை மணம்பு ணர்ந்தவுத் தால னுந்திகழ் மன்னவற்
குய்யு மாறுநன் னீதி ஞானமு ணர்த்தி யேவிடை கூறியத்
தையன் மைந்தனோ டின்ப நீடுத போவ னந்தனைச் சார்ந்துதன்
மெய்ய ருந்தவ முன்பு போலவி ரும்பி யங்கண மர்ந்தனன். (சஉ)

## வேறு.

வருந்தி மாதவ மத்தபோ வனந்தனி னெடுநா
ளிருந்து பின்னர்தம் மகவுட னெண்டிசை முழுதுந்
திரிந்து புண்ணிய நதிபல செறிந்துகந் தாடி
யருந்த வந்தரு வெதிரிகாச் சிரமம தடைந்தான். (சங)

அத்த போவன மணுகியாங் கமர்ந்திடு மலகின்
மெய்த்த போதனர் தம்முடன் விரும்பியுற் றிருந்து
புத்தி ரன்றன னுடனருள் பொழிசிவ ஞான
முய்த்தி டுந்தவ மியற்றிடு நாளினி லோர்நாள். (சச)

காலை சென்றுநீ ராடியே நியதிகள் கழித்துக்
கோலி மாமலர் சமிதைகள் குசைமுதற் கொணர்ந்து
சால வைத்தரு கடுத்தகோ தாவரி தடத்தின்
மேலி ருந்தினி திருந்தவம் புரிந்தனன் மேன்மேல். (சரு)

நெடிதி ருந்துபின் னரும்பக னேரமங் கெய்தி
யிடுதல் கண்டுட னெழுந்தவ னேகுமவ் விரைவா
லொடிதரு ருஞ்சமி தாதியை யோர்ந்திலன் வைத்துக்
கடிது சென்றன னரிச்சனை வேள்விகள் கழிப்பான். (சகா)

சென்ற ரிச்சுனைக் காயவை தெரிபொழு துணர்ந்து
நின்ற மைந்தனை நோக்கியான் மறந்தன னீபோ
யொன்ற நன்னதி க்கரையிலோ மாங்கமா யுளதிங்
கின்றெ டுத்துடன் வருதியென் றெல்லையி லேவ. (சஎ)

ஏவு முன்ன வன்னதிக் கரையினை யெய்தித்
தாவ ருங்குசை முதலிய சமிதைக ளனைத்துங்
காவி ருங்கரைப் புறமெலாந் தேடியுங் காணான்
மேவி மைந்தனுந் தந்தைபால் விளம்புவான் வந்தான். (சஅ)

தேடி யன்னவை யன்னதிக் கரையெலாந் திரிந்து
நாடி யும்பெறக் கண்டிலே னென்ற வனவில
யூடி யப்பெரும் புதல்வனை யுரைகொடு கனன்று
வாடி வெம்பசி யாற்றளர் மாதவன் சொல்வான். (சகு)

மன்னு மென்றன தருத்திகண் டேகிய மைந்த
வன்ன தேகினு மருச்சனைக் கயல்கொடு வாரா
தின்ன வாய்மைநீ நவின்றனை யாதலா லியமன்
றன்னை யொல்லைநீ காண்குதி யென்றவற் சபித்தான். (ருO)

சாப மிட்டிடு முன்னவ னுயிர்செலத் தரியா
தாவி தென்கொலென் றத்தபோ தனனவ னுடலைத்
தாவி யங்கைகொ டெடுத்துநீண் மடியினிற் சாய்த்துப்
பாவ மென்னமுன் செய்தன மென்றவன் பகரா. (ருக)

விழிகொ ணீர்விடுத் தவ்வுட னணைந்துற மேன்மே
லழிய மாதவ னவன்றுயர் நீக்கவப் புதல்வ
னொழியு மாருயிர் மீண்டுவந் தருத்திட னெழுந்து
தழிய தாதையை நோக்கினன் றுயிறவிர்ந் தவன்போல். (ருஉ)

போய வாருயிர் மீட்சிகண் டுடலெலாம் புளகந்
தோய மீளவு மானந்த நீர்விழி சொரிந்து
பாய வார்வமுற் றிருந்தவத் தாதையைப் பார்த்து
நேய விப்பரி சருந்துயர் நிகழ்வரோ மேலோர். (ருங)

நின்னு ளம்பிழைத் திடவொரு தீங்கியா னிகழ்த்த
வின்ன விப்பரி சௌக்குவந் தெய்திய தற்கா
மன்ன ருந்தவ னீதுயர்ப் படுவது வழக்கன்
றுன்ன ருந்திற னீதிநூல் வழிதெரிந் துணரில். (ருச)

மைந்தர் மாணவ ராருயிர் மாய்ந்திடி லவற்காத்
தந்தை யாயினர் குருபர ரோதனந் தாங்கி
லந்த மாணவர் வீடுறு ரணுகுவர் நரகென்
றிந்த வாய்மைநீ யறிந்துமித் துயருற வியல்போ. (ருரு)

வேறு.

முன்னநாஞ் செய்த பாவ முறைமையாற் சமிதை யாதி
தன்னையன் னதியுள் வீழ்த்தச் சமீரண னஃதோ ராது
நின்னுளம் பிழைக்க வந்த தாதலாற் றவத்து நீயு
மன்னதென் றெண்ணு தெம்பா லரியவிச் சாப மீந்தாய். (ருசு)

தீதறு செயலே யேனு நன்னெறிச் செயலே யேனுந்
தாதையர் குரவராணை தனையர்மா ணுக்கர் தாங்க
ணீதிய தன்றோ வைய நின்றுயர் தவிர்தி மீளப்
போதுற விடைதா நின்னித் துயர்கண்டு போந்த தென்றான். (ருஎ)

மைந்தனிவ் வாறு கூற மாதவன் புதல்வன் றன்னை
யந்தகற் காண்பை யென்று வெகுளிகொண் டறைந்த தல்லாற்
சிந்தையொப் புரைமற் றன்றே யாதலா னெடுநாள் சீவித்
திந்தமெய் யுறைவ தல்லான் மறலியூ ரேக லென்றான். (ருஅ)

புகலவிவ் வாறு மீண்டு மாதவன் புதல்வன் றூனு
மிகலிலா வுயிர்பி ழைத்தங் கெழுந்தவ னடியிற் றூழ்ந்தா
னிகரிலப் புதுமை கேளா நின்றய லருந்த வஞ்செ
யகிலமா தவரு மங்க ணணைந்தன ரவனைக் காண்பான். (ருகூ)

அன்னவர் வினவி யுத்தா லகனைமுன் ஞூசி கேது
தன்னைமேல் வியந்து மீண்ட சதுரனீ யியம னூர்புக்
கென்னிலங் கறலுண் மூழ்கி யிடர்ப்படு மவர்ா ரன்றிப்
பொன்னுல குறுவர் யார்கொல் கண்டவை புகல்வா யென்றூர். (சூ0)

மற்றவ ருரைப்பக் கேளா மைந்தனும் வணங்கி யந்த
நற்றவர் தம்மை நோக்கி நவிலுவா னரகங் காக்குங்
கொற்றவ னேவ லாலே சித்திர குத்த னங்கண்
சொற்றவப் பரிசும் யான்றூன் கண்டதுஞ் சொல்வ னென்றூன். (சூக)

ஓதருந் துன்பம் யாவு முறுந்தொழி லிரௌர வந்தா
ஞதியா நரக நாலே ழதனிடை யனந்த பேதம்
போதரு மதன்கண் மாந்தர் பொருந்துதீ வினைக்கீ டாக
வேதனைப் படுதல் கண்ட வாசில விளம்பக் கேண்மின். (சூஉ)

குரவரைச் சிவனை நிந்தை கூறின ரிடையிற் கொண்ட
விரதமே விடுத்தோர் தாமு மிரௌரவ மென்னும் வெம்மை
நிரயமீ தடைவர் தாயைத் தந்தையை நிந்தை செய்த
கரவரோ கும்பி பாக மெனுநர குறுவர் கண்டீர். (சூ௩)

நீளருந் தாபத் தெய்து நிரைபுன லருந்தா வண்ண
மீளுறத் தடுத்த வெய்ய பாதகர் மீள மீளத்
தோளினை முதலா மங்கந் துணிதர வீசி வீழ்ப்ப
வாளிலை வனமாந் துன்ப நரகிடை வருந்து வாரால். (சூச)

மறுமனை யவளை மற்றோர் கணவனை மருளாற் பார்க்கு
முறைதடு மாறு மாந்தர் மாதர்கண் முள்ளாற் சூழ்ந்து
நிறைதரு மிலவிற் சேர்த்து நிமிர்கின்ற நீண்ட துண்டப்
பறவைகள் விழிக டோண்டப் பதைபதைத் திடுவர்கண்டீர். (௬௫)

அயன்மனை யவளை மற்றோர் தலைவனைத் தழுவி யாசை
முயலுறு மாந்தர் மாதர் மூடெரி கொளுந்து லோக
மயமெனும் பெண்ணு ணுகும் வடிவினைத் தழுவி யங்கண்
செயலழிந் தன்றே வைய வென்றருந் துயரஞ் சேர்வர். (௬௬)

கொன்றிடுங் கொலைக்கஞ் சாத கொடியர்மா ரவுர வந்தா
னென்றிடு நரகிற் றுன்ப மெய்துவ ரெந்த நாளு
மன்றிவஞ் சனைக டன்னு லாருயிர் மாய்த்த பேரு
நின்றருந் துயரஞ் சேர்வர் நிகும்பநீ ணிரையந் தன்னில். (௬௭)

வறிஞர்நோ யாளர் மற்றும் வழித்துயர் வந்தோர் கேட்பச்
சிறிதுண வேனு மீயாத் தீயருற் கடமென் றோது
மறலிடர்ப் படுவர் செம்பொ னுலையா னடுவொ ரீச்சொன்
னிறுவினர் மூழ்கா நிற்பர் சங்கட நிரைய நாளும். (௬௮)

பெரியவரை யவமா தங்கள் பேசினர் பேரா வண்ணஞ்
சொரிதரு மழனின் றோங்கும் வாலுக நிரையந் தோய்வர்
தெரிதரு கன்னி மாரைத் தீயசொற் றெரித்தோர் தாமு
மெரிதரு தயில கும்ப மெனுநர கெய்தா நிற்பர். (௬௯)

ஒருவனுக் குணவை யீந்தங் கவனுகர் போழ்தி னூடே
சருவிநீ ணிந்தை சொல்வோர் தீக்கடை நிரையஞ் சார்வா
ரிருபிறப் பாளர் மூத்தோர் தந்தைகோ விவைபாற் றுன்பம்
வருநெறிக் குதவார் தாமு மாகட நரகின் மாய்வார். (௭0)

மற்றவ ரில்லந் தன்னில் வைகிட வருந்த வாசை
பெற்றவர் நாளு மாறு விருளினிற் பிறழு மேனி
யுற்றவெந் நிரையஞ் சார்வர் கோளுரை யொழியாத் தீமை
சொற்றவர் தாமுஞ் சூசி முகமெனு நரகிற் றேய்வர். (எக)

தனதுமாண் புடைய மிக்க தையலை யகற்றி யாசை
புனைதரு மயன்ம டந்தை தோளிணை புல்லு மாந்தர்
நினைதரு மரவுந் தேளு நிரம்புமா கோர மென்னும்
வினைதரு நரகில் வீழ்ந்து துயரினுன் மெலிவர் நாளும். (எஉ)

இன்னன முதலா மற்றப் பாவமென் றிசைத்த யாவு
மன்னின ரதற்கிங் கேற்ற துயர்புக வருந்து நாலிற்
சொன்னவெண் ணிலாத கோர நரகிடைத் தோய்ந்து நின்று
பன்னெடுங் கால நீங்காத் துயரமே படுவ ரந்தோ. (எங)

வேறு.

பெரிது நல்வினை செய்யினும் பேசுநல் வினையா
னிரைய மெய்திடா ரென்பது நிகரில்புண் ணியங்கள்
புரிகி னுஞ்சில பாதகம் புரிந்தவர் பொல்லா
நரக மெய்துவ ரென்பது மறிந்தமை நவில்வாம். (எச)

யாவர் நாடொறு நியதியின் றியற்றுவோர் தடாகம்
வாவி நந்தன வனம்புக வைப்பவர் மறையோர்
தேவ ராலய மமைப்பவர் நீர்ப்பந்தர் செய்வோர்
பாவ காரிக ளாயினு நரகவர் பாரார். (எரு)

தீன ரந்தகர் நாதர்நல் குரவினர் சிறுவ
ரூன வாளரைக் காப்பவர் சிவதல முவப்போர்
ஞான மாதவர் தம்வழி நிற்பவர் நவிலி
லீன பாதக ராயினு மவர்நர கெய்தார். (எசா)

## வேறு.

அந்தண ராணி னங்கட் குற்றிடு மரந்தை தீர்ப்போ
ரெந்தையா லயம டங்க டிருவிளக் கேற்றி னோர்கள்
வந்தவீ ருவாவிற் றூய மாநதி யாடி னோர்கள்
வெந்திறல் வினைஞ ரேனு நரகவர் மேவி டாரால். (எஎ)

## வேறு.

முன்ன ருத்தியா வினுக்குண வதன்பினுண் மூத்தோ
ரன்ன மெண்ணெய்பா றிலந்தனி லியன்றன வருள்வோ
ரின்ன லெய்தினர்க் கிற்கனல் கார்பனிக் கீவோர்
மன்னு பாதக ராயினு நரகவர் மருவார். (எஅ)

அலது மங்கையர் பூண்முலை யுவாவினி லணைவோர்
கலவி மீதயன் மடந்தையை விரும்பியே கலந்தோ
ருலகி லன்னியர் பொருள்கவர் படிறரு முரைக்கி
லிலகு புண்ணிய ராயினு மவர்நர கிழிவர். (எகூ)

கோதில் வாவிகள் குளங்கிண றரும்பொழில் குலைப்போர்
சீத வார்புனற் பந்தர்க ளூரிடஞ் சிதைப்போர்
வேத பாரகர் பசுக்களுக் கருந்துயர் விளைப்போ
ரோது புண்ணிய ராயினு மவர்நர குறுவர். (அ0)

பதிதர் பாசண்டர் தங்களைப் பாலனஞ் செய்வோர்
முதிரு மாகம குரவரை நிந்தனை மொழிவோர்
மதிகொ டாருயிர் வதைத்தவர் வஞ்சக மனத்தோ
ரதிக புண்ணிய ராயினு மவர்நர கடைவார். (அக)

இந்து வெங்கதி ருறுமுவா வெண்ணெயா மலகந்
தந்த தாவணம் பரான்னமூன் சார்பவ ரில்பேர்க்
கந்த மின்மறை பயில்பவ ருலோகம்விற் பவரு
மூந்து புண்ணி யராயினு மூழ்குவர் நிரையம். (அஉ)

## வேறு.

பொன்னுல கேறு மாந்தர் புகும்வழி வினவி லெங்கும்
பன்னசா லைக ணீர்ப்பந்தர் மாளிகை யாரா மங்கள்
பன்னுசா மரைகள் யானம் பரிமளங் கவிகை தாள
மென்னவேண் டினுமற் றெல்லா மெளிதினி லவர்க்கங் கெய்தும். ()

நரகினை யடையு மாந்தர் செல்வழி நவிலிற் பல்வே
றொருபுடை மேவு முட்கா டழல்பொதி யோடை பக்கஞ்
சருவுதீ விலங்கு வெய்ய மணல்பர லாறு தாக்க
வரவுதே ளாதி தூதர் வாதையி லுழந்தா நிற்பர். (௮௪)

## வேறு.

வைதரணி நல்வினையோர்க் கெதிரே சீத வாரிவிடுத் தவர்முன்
னம் வழங்கு கோவந், தெய்தவெளித் தப்புணையா யேற்று விக்கு
மிகழ்வினையோர் தமைக்காணி லெறிகல் லோலம், பெய்ததிர்நீர்ச் சுழி
பரப்பி யெழுந்த கோரப் பெருமகரங் கராவரவு பிறழ்வாதை, செய்தி
யமதூதரவர் தம்மை வீழ்த்தச் சிறிமிருந் துயர்ப்படுத்தி யேறச் செய்
யும். (௮௫)

## வேறு.

தருமசீலரைக் கண்டிடிற் சமனெதி ரெழுந்து
திருமணித்திரள் விமானமீ தேற்றிவிண் சேர்ப்ப
னருகு தீவினை யவர்முகம் பாரலென் றகற்றி
வெருவு றும்படி விரிதுயர் நரகிடை விடுப்பன். (௮௬)

நாசி கேதுவு மிவ்வண நவிலமா தவரு
மாசி கூறியங் கவன்றனை வியந்துசென் றகன்றார்
மாசின் மைந்தனுந் தாதையை வணங்கிமா முத்தி
பேசு மிவ்வினை யொழிந்துயான் பெறுவதென் றென்றான். (௮௭)

என்ற போதிலுத் தாலனு மினிதுகந் தவனை
நன்று நோக்கிநீ புகன்றமை நன்றது நவிலிற்
றுன்று நீள்வினை யோகபா வனைகொடு துடைத்தா
லொன்றி டுஞ்சிவ ஞானமு முத்தியு முறுமால். (அரு)

இத்தி றத்தரி தியற்றிடு மெய்த்தமம் முத்தி
யத்தர் வாழ்மறை வனத்துநீ ராடவா மெளிதின்
முத்தி சேர்வகை யீதுயான் மொழிந்ததன் றுலகின்
மெத்து நான்மறை சிவாகமம் யாவையும் விளம்பும். (அகூ)

எனவு ரைக்கவத் தாதைகேட் டின்பமுற் றந்தத்
தனைய னும்விடை கொண்டமா மறைவனஞ் சார்ந்தங்
கனைவ ரும்புகழ் தீர்த்தமீ தாடின னெழுந்து
நினையு முன்னுளத் துதித்தது நிகரின்மெஞ் ஞானம். (கூ0)

நாசி கேதுவுஞ் சென்றுட னன்மறை வணங்கு
மீச னைப்பணிந் தாங்கிருந் திகலின்மெஞ் ஞானத்
தேசு கொண்டறுத் தாணவ வழுக்கினைச் சிந்தை
யாச றும்பர மானந்த முத்தியை யடைந்தான். (கூக)

மெய்த்த போதனா ருள்கொடு விடுத்துமுன் காதி
புத்தி ரத்துவம் பூசுர னருநா ரதனுஞ்
சித்தி வேண்டுவ பெறுவமெஞ் ஞானியாய்ச் சீவன்
முத்த ராணது மத்தலம் புனைந்துநீர் மூழ்கி. (கூஉ)

வேறு.

இந்த நற்பதி யாக்கின வாக்கரும்
வந்து வாவில் வணங்கிநீ ராடியே
யெந்தை ஞானமு மெய்தி முனிவருண்
முந்து முத்தி முதல்வரு மாயினார். (கூங)

கோதின் மைத்திரி கூறுபாற் சேயியென்
றோது மாதர்க ளோரிரு வர்க்குமுன்
றீத கற்றிச் சிவோது பதேசரு
போத முத்தி புரிந்திய திந்தலம். (கச)

மற்று மெண்ணில் வருணர் சுவேதகே
தாற்ற மாதவ மோங்கு பிருகுவு
முற்று மிப்பதி மூழ்கி யரனருள்
பெற்று முத்திப் பெரும்பதி மூழ்கினார். (கரு)

வேறு.

மைப்ப டியிந்த வேத வாரிசூழ் மனைமா னத்துட்
செப்பிய தீர்த்தந் தன்னிற் றொன்றுசென் றூடியீசன்
மெய்ப்பதங் கண்டு ஞான மேவிமுன் னின்ப முத்தி
யிப்படி யடைந்த பேர்க ளெண்ணிடி லெண்ணி லார்கள். (கசா)

வேறு.

எத்தி றத்தின ராயினு மாதலா லெய்தி
யத்த லத்துநீ ராடின ராதியாய்ச் சிவன்
முத்த ராவர்க ளீதான் மொழிந்ததே யன்றி
யொத்து ணர்ந்துமற் றெருவரா லுரைத்ததன் றுலகில். (கஎ)

முறைதெ ரிந்துயா னின்னவா றுரிந்தமை மொழியிம்
மறைசை யம்பதி மேன்மைய மாதவ ரவைமு
னிறைவ ராலயத் தாயினு மிருந்தினி திசைப்போர்
நிறைத ரும்புகழ் பெற்றருங் கயிலையை யிசழ்வர். (கஅ)

வேத கானன மேன்மைகள் விளம்புமிப் புராண
மோது வோர்தமை யரிச்சனை செய்தவர் தொழுதிக்
கோதில் செம்பொனிட் டாடையா பரணமுங் கொடுப்போர்
தீத கற்றிநின் றரனருள் சேர்வர் திண்மை. (ககூ)

வேறு.

அந்தமின் மறைநசை மேன்மை யறையுமிப் புராணந் தன்னைப்
புந்திகொண் டுரைத்த மாய பூதலத் திருந்து கேட்போர்
சிந்தைகொண் டுரைப்போர் மற்றுஞ் செப்புமிம் மேன்மை தன்னை
நிந்தனை செய்வோர் தாமு மெய்துவர் நிரையந் தன்னை. (க00)

வேறு.

இன்ன லந்தரு மேன்மையை நாடொறு மிசைப்போர்
நன்ன லங்கொடு கேட்பவர் நாடினை யாவு
மன்னி நிற்பரீ றுண்மைமா மறைவன நாதன்
முன்னி ருந்திஃ துரைப்பவர் முத்தரே யாவர். (க0க)

முந்து புண்ணிய காலமிம் மேன்மையை மொழிவோர்
சிந்தை கொண்டது கேட்பவர் திங்களொன் றங்கண்
வந்து வைகிய பயன்றனை மருவுவர் மாய்ப்ப
ரெந்த வல்வினை யாயினுங் கேட்பவ ரிசைப்போர். (க0உ)

முற்று மாமறை யாகம புராணமூ வாறுங்
கற்று ணர்ந்துகேட் டிடும்பயன் றன்னினுங் கருதிற்
சொற்ற விப்பதி மேன்மையைச் சொல்பவர் கேட்போர்
பெற்றி டும்பய னதற்கிரு கோடியாம் பேசில். (க0௩)

வேறு.

மறைசையம் புராணந் தன்னை வழுத்துவோர் சாலோ கத்தி
லுறைகுவ ரெழுதி வைப்போ ருறுவர்சா மீப மிந்த
முறையினைப் படிப்போர் சார்வர் முயங்குசா ரூபங் கேட்போ
ரிறையொடொன் றாகி நிற்கும் பதத்தினை யெய்தாநிற்பர். (க0௪)

வாழிவே தாக மங்கள் மனுநெறி நாளும் வாழி
வாழிமா ஞால முற்று மாமழை பொழிக வாழி
வாழியா னிரைக ளெங்கு மாதவர் கணங்கள் வாழி
வாழியஞ் செழுத்தும் வாழி வளர்தரு மறைசை வாழி. (௧0௫)

திருச்சிற்றம்பலம்.

தீர்த்தமுத்திச்சருக்க முற்றிற்று.

---

ஆகச் சருக்கம் ௧௮-க்குத் திருவிருத்தம் ௧௧௭௩.



# பிழை திருத்தம்.

| பக்கம். | பாட்டு. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| கக | ருஉ | விதி | வீதி |
| உச | ருஎ | னுணர்வறு | னுணர்வுறு |
| உஅ | அங | சேர்வோர் | சேர்வர் |
| உகூ | அஅ | கியியற்றி | கியற்றி |
| ஙரு | ககூ | என்னு | எண்ணு |
| ருக | சசா | வனேக | வநேகர் |
| ருரு | சாகூ | வேண்டிநன் | வேண்டினன் |
| சாச | சச | மேன்பை | மேன்மை |
| எச | கக | மட்பயன் | மப்பயன் |
| எஅ | ங0 | யருள்செயன் | யருள்செயேன் |
| அ0 | உ | மேருவக்கு | மேருவுக்கு |
| கஉச | ஙக | விறந்த | விறந்த |
| ஷை | ஷை | ரதற்க்கு | ரதற்கு |
| கஉகூ | ருஎ | தலநதனில் | தலந்தனில் |
| கஙஉ | கங | தம்மை | தம்மையும் |
| கஙங | கச | மறுத்தனம் | மறுத்தனன் |
| கசரு | ருங | லஙக | லங்க |
| கசசா | ருஎ | டணிகளும் | பணிகளும் |
| கருஅ | சாச | மொன்மொழி | மென்மொழி |
| கசாரு | க0உ | தமவாய்மை | தம்வாய்மை |
| கசாகூ | கசா | சேமித | சேமித் |
| கஎஉ | ஙச | நதின்றீரம் | நதியின்றீரம் |
| கஅசா | உஅ | முயா | முயர் |
| ககூ0 | கரு | கனலினின் | கனவினின் |

# இப்புத்தகம் வாங்கவிரும்புவோர்

ம-ள-ள-ஸ்ரீ சோ ம. கணபதிபண்டாரம் அவர்கள்,
மேலவீதி, வேதாரணியம்.

---

ம-ள-ள-ஸ்ரீ அரு. சு. அருணாசலச்செட்டியாரவர்கள்,
தேவிகோட்டை.

---

ம-ள-ள-ஸ்ரீ சை. இரத்தினசெட்டியாரவர்கள்,
மதராசு ரிப்பன் பிரஸ், சென்னை.

---

ம-ள-ள-ஸ்ரீ மு. கருப்பண்ணபிள்ளை அவர்கள்,
புஸ்தகவியாபாரம், புதுமண்டபம்,
மதுரை.

மேற்கண்ட இவர்களிடத்திலும் எம்மிடத்திலும் விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம்.

இப் புத்தக விற்பனையினால் வரும் இலாப ரூபாயை வேதாரணியத்தில் ஸ்ரீவேதாரணியேசுர சந்நிதானத்தில் நமமாலிடப்படும் நெய்விளக்குச் செலவின்பொருட்டு உபயோகிக்கப்படும்.

இங்ஙனம்,
மா. சோமாஸ்கந்தபட்டாரகர்,
மேலவீதி, வேதாரணியம்.